# தமிழ் இலக்கியக் கோவை

எட்டாம் வகுப்பு




தொகுத்தோர் :

புலவர் த. முருகேசன்
தலைமைத் தமிழாசிரியர்,
நகர உயர்நிலைப்பள்ளி, தில்லை.

புலவர் தா. சிங்காரவேலு
தலைமைத் தமிழாசிரியர்,
கழக உயர்நிலைப்பள்ளி, பூவிருந்தவல்லி.



தென்னாட்டுப் பதிப்பகம்
16, பிராட்வே — சென்னை - 1

பதிப்புரிமை] 1958 [விலை ரூ. 2-00

முதற் பதிப்பு—1958
இரண்டாம் பதிப்பு—1961
மூன்ரும் பதிப்பு—1962



Approved for Class use by
The Madras Text-Book Committee
Supplement to part I B of the
Fort St. George Gazette
No. 19 B. Dated 13-5-1959 Page 21.

அச்சிட்டோர் :—கமர்ஷியல் பிரிண்டிங் அண்டு பப்ளிஷிங் ஹவுஸ்,
46, அரண்மனைக்காரத் தெரு, சென்னை-1.

# முகவுரை

'தமிழ் இலக்கியக் கோவை' என்ற பெயருடைய இந்நூல் அரசியலார் அண்மையில் வெளியிட்ட புதிய பாடத்திட்டத்திற்கேற்ப எட்டாம் வகுப்புக்கெனத் தொகுக்கப் பெற்றுள்ளது.

செய்யுட் பகுதியில் சங்ககாலச் செய்யுள், இடைக் காலச் செய்யுள், பிற்காலச் செய்யுள், இக்காலச் செய்யுள் ஆகிய பிரிவுகளில் கல்வித் துறையினர் குறித்துள்ள அளவின்படி எட்டாம் வகுப்பு மாணவர்களின் தகுதிக் கேற்பச் செய்யுட்கள் தொகுக்கப் பெற்றுள்ளன.

உரைநடைப் பகுதியில் அரசியலார் வெளியிட்ட பாட இயலிற்கேற்ப நூற்றுக்கு ஐம்பது விழுக்காடு தமிழ் இலக்கியத் தொடர்புடைய கட்டுரைகளும், ஐம்பது விழுக்காடு பிற கட்டுரைகளுமாகப் பல துறைகளில் வல்ல நல்லறிஞர்களால் வரையப்பெற்றுள்ள சிறந்த கட்டு ரைகள் இடம் பெற்றுள்ளன.

எட்டாம் வகுப்பிற்கு ஏற்ற முறையில் செய்யுட் பகுதிக்கும், உரைநடைப் பகுதிக்கும் — அருஞ்சொற் பொருள், வினாக்கள், பயிற்சிகள் அளிக்கப்பெற்றுள்ளன. இலக்கணப் பிழையற்ற தெளிவான, கூடியவரை பிற மொழிக் கலப்பற்ற, எளிய தமிழ் நடையில் எழுதப்பட்ட வற்றின் தொகுப்பாகவே இந்நூல் அமைந்துள்ளது.

இந்நூலில் தொகுக்கப் பெற்றுள்ள செய்யுட் பகுதிகளையும் உரைநடைப் பகுதிகளையும் அளித்து உதவிய பேராசிரியர்கட்கும், புலவர் பெருமக்கட்கும், தமிழ் அன்பர்கட்கும் எம் உளமார்ந்த நன்றியறிதலையும் வணக்கத்தையும் அளிக்கின்றோம்.

இந்நூலினை நன்முறையில் வெளிவரச் செய்த தென்னாட்டுப் பதிப்பகத்தார்க்கும், கமர்சியல் அச்சகத்தினர்க்கும், மாணவர்கட்குப் பயிற்றுவிக்கும் ஆசிரியப் பெரியோர்கட்கும் எங்கள் உளங்கனிந்த நன்றியை உவந்தளிக்கின்றோம்.

தில்லை
1-11-'58

த. முருகேசன்
தா. சிங்காரவேலு

# பொருளடக்கம்

## உரைநடைப் பகுதி

## மனப்பாடம் செய்தற்குரிய பகுதி

| | | வரிகள் |
|---|---|---|
| I. | வாழ்த்து | |
| | கடவுள் வாழ்த்து | ... 4 |
| | தமிழ்த்தாய் வாழ்த்து | ... 4 |
| | நாட்டு வாழ்த்து | ... 8 |
| II. | அறவுரை | |
| | நாலடியார் முழுவதும் | ... 16 |
| | இனியவை நாற்பது முழுவதும் | ... 12 |
| | நீதிநெறி விளக்கம் முழுவதும் | ... 12 |
| III. | தொடர்நிலைச் செய்யுள் | |
| | மணிமேகலை வரி 1-முதல் 8-வரை | ... 8 |
| | அரிச்சந்திர புராணம் செய்யுள்-6 | ... 4 |
| | திருவிளையாடற் புராணம் செய்யுள் 15, 16 | ... 8 |
| | ஆசிய சோதி செய்யுட்கள் 13, 14 | ... 4 |
| IV. | பல்சுவை | |
| | ஆறு | ... 4 |
| | கிளி செய்யுள்-2 | ... 4 |
| | முக்கூடற்பள்ளு | ... 8 |
| | வழிபாட்டுப் பாடல்கள் செய்யுள்-3 | ... 4 |
| | ஆக வரிகள் | ... 100 |

# நாட்டு வணக்கம்

---

ஜன கண மன அதிநாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

பஞ்சாப சிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா

விந்திய ஹிமாசல யமுனு கங்கா
உச்சல ஜலதி தரங்கா

தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவ ஜய காதா

ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
ஜயஹே ! ஜயஹே ! ஜயஹே !
ஜய ஜய ஜய ஜயஹே !

—மகாகவி இரவீந்திரநாத தாகூர்

# தேசீய கீதம்

---

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிருய்;

நின் திருநாமம், பஞ்சாப்பையும் சிந்துவையும்
குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும்

திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது,

அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;
யமுனை கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது:
இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது;
அவை நின் ஆசியை வேண்டுகின்றன;
நின் புகழைப் பாடுகின்றன;

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி, வெற்றி, வெற்றி.

# தமிழ் இலக்கியக் கோவை

## செய்யுட் பகுதி

## 1. வாழ்த்துப் பகுதி

### 1. கடவுள் வாழ்த்து

எங்கும் மனிதர் உனைத்தேடி
இரவும் பகலும் அலைகின்றார்
எங்கும் உளது உன்வடிவாம்
எனினும் குருடர் காண்பாரோ ?
எங்கும் எழுவது உன்குரலாம்
எனினும் செவிடர் கேட்பாரோ ?
எங்கும் என்றும் எவ்வுயிரும்
எல்லாம் ஆன இறையவனே !

—கவிமணி சி. தேசிகவிநாயகம் பிள்ளை

இப்பாடலை எழுதியவர்—கவிமணி சி. தேசிகவிநாயகம் பிள்ளையாவார். தந்தை—சிவதாணுப் பிள்ளை. தாய்—ஆதிலட்சுமி அம்மாள். பிறப்பிடம்—திருவாங்கூரிலுள்ள தேரூர். அரசினர் பெண்கள் கல்லூரியில் 1931-ஆம் ஆண்டு வரையில் தமிழாசிரியராகத் தொண்டு புரிந்தார். ஆசிய சோதி, மலரும் மாலையும் முதலிய நூல்களை இயற்றியுள்ளார். காலம் : 1876—29-9-1954.

அருஞ்சொற்பொருள்

வடிவு - உருவம். காண்பாரோ - காணார். எழுவது - உண்டாவது. குரல் - ஓசை. கேட்பாரோ - கேளார்.

## 2. தமிழ்த்தாய் வாழ்த்து

வைய மீன்றதொன் மக்க ளுளத்தினைக்
கையி னுலுரை கால மிரிந்திடப்
பைய நாவை யசைத்த பழந்தமிழ்
ஐயை தாள்தலை கொண்டு பணிகுவாம்.

—நீ. கந்தசாமிப்பிள்ளை

### குறிப்புரை

இதனை இயற்றியவர்—நீ. கந்தசாமிப் பிள்ளை என்பவர் ஆவர். இவர் தஞ்சை மாவட்டத்திலுள்ள அக்கிரகாரம் என்ற ஊரினர். நீலமேகம் பிள்ளையின் அருந்தவப் புதல்வர். சிறந்த தமிழ் அறிஞர்.

### அருஞ்சொற்பொருள்

வையம் - உலகம். ஈன்ற - பெற்ற. தொல் - பழமையான. கையினுல் உரை - சைகையினுல் பேசிய. இரிந்திட - நீங்க. பைய - மெல்ல. ஐயை - தலைவி. தாள் - திருவடி. பணிகுவாம் - வணங்குவோம். தொன்மக்கள் - பண்புத் தொகை. உரை காலம் - வினைத்தொகை.

## 3. நாட்டு வாழ்த்து

என்னுயிர் நாடு என்தமிழ் நாடு
என்ற வுடன்தோள் உயர்ந்திடும் பாடு!
அன்னையும் அன்னையும் அன்னையும் வாழ்ந்த
அழகிய நாடு! அறத்தமிழ் நாடு!
தன்னிக ரில்லாக் காவிரி நாடு!
தமிழ்மறை கண்ட தனித்தமிழ் நாடு!
முன்னவர் ஆய்ந்த கலைசெறி நாடு!
மூத்து விளியா மறவரின் நாடு!

—கவிஞர் வாணிதாசன்

### குறிப்புரை

இப்பாட்டு 'வாணிதாசன் கவிதைகள்' என்னும் தொகுப்பு நூலில் உள்ளது. இதனை இயற்றியவர்—கவிஞர் வாணிதாசன் என்பவராவர். இவரது இயற்பெயர் அரங்கசாமி என்ற எதிராசு. இவர் புதுச்சேரியை அடுத்துள்ள வில்லியனூரில் பிறந்தார். கிருமாம்பாக்கம் என்னும் ஊரிலுள்ள அரசினர் நடுநிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியராகப் பணியாற்றி வருகின்றார். இவர் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாரின் முதல் மாணாக்கர்.

தொடுவானம். தமிழச்சி, கொடிமுல்லை, வாணிதாசன் கவிதைகள் ஆகிய நூல்களை இயற்றியுள்ளார். தமிழ், பிரஞ்சு ஆகிய இருமொழிகளிலும் புலமை பெற்றுள்ளார். இவர் 22—7—1915-ஆம் ஆண்டில் பிறந்தார்.

### அருஞ்சொற்பொருள்

நிகர் -ஒப்பு. மறை - வேதம்; திருக்குறள். செறி - நிறைந்த, மூத்து - வயதாகி. விளியா - சாகாத. மறவர் - வீரர். அன்னையும் அன்னையும் - அடுக்குத்தொடர். விளியா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

### வினாக்கள்

1. இறைவனின் இயல்பை எழுதுக.
2. தமிழின் பழமையை விளக்குக.
3. தமிழ்நாட்டின் சிறப்புகளைக் கூறுக.

### பயிற்சி

1. பொருள் எழுதுக :—வையம், இரிந்திட, பைய, ஐயை, தாள், பணிகுவாம், நிகர், முன்னவர், ஆய்ந்த.

2. பிரித்துக் காட்டுக :—வையமீன்ற, கையினுலுரை, காலமிரிந்திட, என்னுயிர், தன்னிகர்.

3. சேர்த்துஎழுதுக :—தமிழ் + ஐயை. பழமை + தமிழ்.

# II. அறவுரைப் பகுதி

## 1. திருக்குறள்

திரு+குறள் : மேன்மையான குறள் வெண்பாக்களினாலாகிய நூலாதலின் இப்பெயர் பெற்றது. குறள்—இரண்டடி வெண்பா. திரு—அடைமொழி. திருக்குறள் என்பது பாட்டை உணர்த்தாமல் நூலை உணர்த்துவதால் அடையடுத்த கருவி ஆகுபெயர்.

திருக்குறளை இயற்றியவர் திருவள்ளுவர். இவருடைய ஊர் மயிலாப்பூர் என்றும் மதுரை என்றுங் கூறுவர். காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு என்றும், கி. மு. முப்பத்தொன்று என்றும் கூறுவர்.

### கடவுள் வாழ்த்து

வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்
கியாண்டும் இடும்பை யில. 1

### வான்சிறப்பு

விசும்பிற் றுளிவீழின் அல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது. 2

### நீத்தார்பெருமை

இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு. 3

### அறன்வலியுறுத்தல்

சிறப்பீனுஞ் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்
காக்கம் எவனோ உயிர்க்கு. 4

ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல். 5

### இல்வாழ்க்கை

அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றிற் [புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன். 6

### வாழ்க்கைத் துணைநலம்

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின். 7

சிறைகாக்குங் காப்பெவன் செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை. 8

### மக்கட்பேறு

தம்மிற்றம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது. 9

### அன்புடைமை

அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை. 10

### விருந்தோம்பல்

இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. 11

### இனியவைகூறல்

இன்சொலா லீரம் அளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல். 12

அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின். 13

செய்ந்நன்றியறிதல்

செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்ற லரிது. 14

நடுவுநிலைமை

கெடுவல்யான் என்ப தறிகதன் நெஞ்சம்
நடுவொரீஇ அல்ல செயின். 15

அடக்கமுடைமை

காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை உயிர்க்கு. 16

எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வந் தகைத்து. 17

பொறையுடைமை

ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து. 18

அழுக்காறாமை

அழுக்காற்றின் அல்லவை செய்யார்
[இழுக்காற்றின்
ஏதம் படுபாக் கறிந்து. 19

வெஃகாமை

அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள். 20

ஒப்புரவறிதல்

ஒப்புரவி னால்வருங் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து. 21

ஈகை

வறியார்க்கொன் றீவதே ஈகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து. 22

இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே யுள. 23

அற்றா ரழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. 24

புகழ்

ஒன்றா உலகத் துயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன் றில். 25

வசையென்ப வையத்தார்க் கெல்லாம்
[இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின். 26

புலான்மறுத்தல்

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிதூ னுண்பான்
எங்ஙன மாளு மருள். 27

தவம்

வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும். 28

கூடாவொழுக்கம்

மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த தொழித்து விடின். 29

வாய்மை

வாய்மை யெனப்படுவ தியாதெனில் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல். 30

வெகுளாமை

தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லுஞ் சினம். 31

இன்னாசெய்யாமை

நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் [நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர். 32

நிலையாமை

நெருநல் உளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு. 33

மெய்யுணர்தல்

காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமங் கெடக்கெடும் நோய். 34

ஊழ்

நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன். 35

இறைமாட்சி

காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம். 36

கல்வி

எண்ணென்ப ஏனை யெழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு. 37

உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில். 38

கல்லாமை

கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். 39

விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர். 40

கேள்வி

நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராதல் அரிது. 41

அறிவுடைமை

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும்
[அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. 42

எவ்வ துறைவ துலகம் உலகத்தோ
டவ்வ துறைவ தறிவு. 43

பெரியாரைத் துணைக்கோடல்

தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை. 44

இடிப்பாரை யில்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும். 45

### தெரிந்து செயல்வகை

ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
ஊக்கா ரறிவுடை யார். 46

நன்ருற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்ருக் கடை. 47

### வலியறிதல்

நுனிக்கொம்ப ரேறினுர் அஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும். 48

ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை. 49

### காலமறிதல்

அருவினை யென்ப உளவோ கருவியால்
கால மறிந்து செயின். 50

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து. 51

### இடனறிதல்

அஞ்சாமை யல்லால் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி யிடத்தாற் செயின். 52

### தெரிந்து வினையாடல்

அன்பறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு. 53

### சுற்றந்தழால்

பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள. 54

பொச்சாவாமை

அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு. 55

செங்கோன்மை

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல்
[பைங்கூழ்
களைகட் டதனொடு நேர். 56

வெருவந்த செய்யாமை

அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து. 57

கண்ணோட்டம்

கண்ணோட்டத் துள்ள துலகியல் அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை. 58

ஊக்கமுடைமை

உரமொருவற் குள்ள வெறுக்கைஅஃ தில்லார்
மரம்மக்க ளாதலே வேறு. 59

ஆள்வினையுடைமை

தாளாண்மை யென்னுந் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு. 60

தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். 61

அமைச்சு

அறிகொன் றறியான் எனினும் உறுதி
யுழையிருந்தான் கூறல் கடன். 62

வினைத்தூய்மை

ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை. 63

வினைத்திட்பம்

வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்பம்
மற்றைய வெல்லாம் பிற. 64

குறிப்பறிதல்

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம். 65

படைச்செருக்கு

விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து. 66

நட்பு

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு. 67

நட்பாராய்தல்

ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல். 68

பழைமை

பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்
[றுணர்க
நோதக்க நட்டார் செயின். 69

சூது

சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில். 70

மானம்

புகழின்ருல் புத்தேள்நாட் டுய்யாதால் என்மற்
றிகழ்வார்பின் சென்று நிலே. 71

சான்ருண்மை

கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு. 72

இன்ஞசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு. 73

நாணுடைமை

அணியன்ரே நாணுடைமை சான்ரேர்க்
[கஃதின்றேல்
பிணியன்ரே பீடு நடை. 74

குடிசெயல்வகை

குற்ற மிலனுய்க் குடிசெய்து வாழ்வானேச்
சுற்றமாச் சுற்றும் உலகு. 75

உழவு

இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின்
நிலமென்னும் நல்லாள் நகும். 76

நல்குரவு

நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும்
[நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும். 77

இரவச்சம்

இரவுள்ள உள்ளம் உருகும் கரவுள்ள
உள்ளதூஉ மின்றிக் கெடும். 78

கயமை

தேவ ரனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான். 79

அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான். 80

—திருவள்ளுவர்

## அருஞ்சொற்பொருள்

1. வேண்டுதல்-விரும்புதல். வேண்டாமை -வெறுத்தல் இலான் - இல்லாத கடவுள். அடிசேர்ந்தார்க்கு - திருவடிகளை இடைவிடாது நினைப்பவர்களுக்கு. யாண்டும் - எக்காலத்தும். இடும்பை - துன்பம். இல - உண்டாக மாட்டா.

2. வான் - மழை. விசும்பின் - வானத்திலிருந்து. புல்தலை - புல்லின் முளைகளைக்கூட. காண்பதரிது - காண்பு + அரிது, காண்டல் இல்லை.

3. இருமை - உலகியல், வீட்டு நெறி. வகை - கூறுபாடு. அறம் - துறவறம். பூண்டார் - மேற்கொண்டாரது. பிறங்கிற்று - உயர்ந்து விளங்கும் இயல்பிற்று.

4. சிறப்பு - வீட்டின்பம். செல்வம் -இம்மை மறுமையில் பெருஞ் செல்வத்தை. ஈனும் - கொடுக்கும். ஊங்கு - மேம்பட்ட, ஆக்கம் - உயிர்களை மேன்மேல் உயர்த்துவது.

5. ஒல்லும்வகை - இயலும் அளவாக, இயலும் நெறியில். அறவினை - அறச்செய்கை. ஓவாதே - கைவிடாமல். செல்லும்வாய் - செய்யத்தகும் இடங்களில் எல்லாம். செயல் - செய்க.

6. அறத்தாற்றின் - அறநெறியிலே நடத்துவான் ஆயின், புறத்தாற்றின் - வேருகிய வழியிலே. போஒய் -

சென்று. எவன் - என்ன பயன்? இல்வாழ்க்கையே எல்லாப் பயனையும் கொடுக்கும் என்பது கருத்து.

7. கற்பு - நல்லொழுக்கம். திண்மை - கலங்கா நிலைமை. பெருந்தக்க - மேம்பட்டன.

8. சிறை - புறக்கட்டுப்பாடு எவன் செய்யும் - என்ன நன்மையை உண்டாக்கும்? நிறை - நிறையாகிய மன வுறுதி. தலை - முதன்மையான காவலாகும்.

9. தங்களைவிடத் தங்கள் மக்கள் கல்வி யறிவுடையரா யிருப்பது, இப்பெரிய நிலவுலகத்திலுள்ள எல்லா உயிர்களுக்கும் மகிழ்ச்சியைத் தருவதாகும்.

10. அறியார் - அன்பின் தன்மை முழுவதையும் அறியாதவர்கள். அறத்திற்கே - நன்மை செய்வதற்கே. சார்பு - துணை. அஃதே - அவ்வன்பே. மறத்திற்கும் - தீமையை ஒழிப்பதற்கும்.

11. இருந்து - மனைவியுடன் வீட்டில் இருந்து. ஓம்பி - பொருள்களைப் போற்றி. ஓம்பி - பேணி. வேளாண்மை - உதவி.

12. ஈரம் - அன்பு. அளை இ - கலந்து. படிறு-வஞ்சனை. இலவாம் - இல்லாதனவாய். செம்பொருள்-மெய்ப்பொருள். கண்டார் - உணர்ந்தவர். வாய்ச்சொல் - வாயிற் பிறப்பன வாயுள்ள மொழிகள்.

13. அல்லவை - பாவங்கள். தேய - தேய்ந்து குறைய. பெருகும் - வளர்ந்து பெருகும். நல்லவை - பிறர்க்கு நன்மையானவற்றை. நாடி - ஆராய்ந்து. இனிய - இனிமை உடைய சொற்களை.

14. வையகம் - மண்ணுலகம். வானகம் - விண்ணுலகம். ஆற்றல் - கொடுத்தாலும். அரிது - ஈடாகமாட்டா.

15. தன்நெஞ்சு - தன்மனம் அறிய. நடுவு ஒரீஇ - முறையிலிருந்து விலகி. அல்ல - தவறானவற்றை. செயின் - செய்தால். யான் கெடுவல் - நான் கெடுவேன். அறிக - உணர்க.

16. பொருளா - உறுதிப் பொருளாகக் கொண்டு. காக்க - காப்பாற்றுக. ஆக்கம் - சிறந்த செல்வம். அதனின் ஊங்கு - அதனைப் பார்க்கிலும் சிறந்த செல்வம். இல்லை - வேறு இல்லை.

17. பணிதல் - பணிவாய் நடத்தல். எல்லார்க்கும் - வறியர், செல்வர் என்னும் எல்லார்க்கும். செல்வம் தகைத்து பொருட் செல்வத்தோடு மற்றொரு செல்வமாய்ச் சிறத்தற்கு உரித்து.

18, ஒறுத்தாரை - தமக்குத் தீங்கு செய்தவரைப் பொறுத்துக் கொள்ளாமல் தண்டித்தவரை. ஒன்றாக - ஒரு பொருளாக. வையார் - அறிஞர் மதிக்கமாட்டார். பொதிந்து வைப்பர் - அருமையாக நன்கு பேணிப் போற்றுவார்.

19. அழுக்காற்றின் - பொருமை காரணமாக. அல்லவை செய்யார் - பிறர்க்குத் தீங்கு இழையார். இழுக்காற்றின் - தவறிய வழியால், ஏதம் - துன்பம். படுபாக்கு - உண்டாதலை.

20. வெஃகாமை - பிறர் பொருளைக் கவர்ந்து கொள்ள விரும்பாமை. அஃகாமை - சுருங்காமை.

21. ஒப்புரவறிதல் - உலக நடையினை அறிந்து செய்தல்.

22. வறியார்க்கு - யாதும் அற்ற எளியவர்க்கு. ஒன்று - அவர் விரும்பிய ஒரு பொருளை. ஈகை - கொடை. குறியெதிர்ப்பை - அளவு குறித்து வாங்கி, வாங்கிய அவ்வளவாகத் திருப்பிக் கொடுத்தல். நீரது உடைத்து - தன்மையை உடையது.

23. இலன் - நான் இல்லாதவன். எவ்வம் - இழிவான சொல். குலனுடையான் - நல்ல குடியில் பிறந்தார். கண்ணே - இடத்தே. உள - காணப்படும் செய்கையாகும்.

24. அற்றார் - வறியவர். அழிபசி - கெடுதிமிக்க பசி. தீர்த்தல் - தீர்க்கவேண்டும். வைப்பு உழி - தனக்கு உதவு

மாறு வைக்கும் இடம். அற்ருர்-வினையாலணையும் பெயர். அழிபசி - வினைத்தொகை.

25. ஒன்ரு - ஒப்பு இல்லாததாக. உயர்ந்த-ஓங்கிய. பொன்ருது - அழியாது. நிற்பது – நிலைப்பது. ஒன்று - வேறு ஒன்று. இல் - இல்லை.

26. வசை – பழி. இசை - புகழ். எச்சம் - எஞ்சி நிற்பது.

27. புலான் மறுத்தல்—ஊன் உண்ணுதலை ஒழித்தல். தன் ஊன் பெருக்கற்கு - தன் உடம்பை வளர்த்தற்கு. பிறிதுஊன்-மற்ருேர் உயிரின் உடம்பு. எங்ஙனம் ஆளும் அருள் - எப்படி அருளை மேற்கொள்ளுதல் கூடும் ?

28. வேண்டிய - விரும்பியவற்றை. வேண்டியாங்கு- விரும்பியபடி. எய்தல்-அடைதல். ஈண்டு-இப்பிறவியிலே.

29. மழித்தல் – மொட்டையடித்தல். நீட்டல்-சடையை நீளமாக வளர்த்தல். உலகம் – உயர்ந்தோர். பழித்தது - தகாது என்று விலக்கியவற்றை. ஒழித்துவிடின் - விட்டு ஒழித்தால்.

30. வாய்மை - உண்மை சொல்லுதல். வாய்மை என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது என்னவென்ருல் எவ்வகையான தீங்கும் இல்லாத சொற்களைச் சொல்லுத லாகும்.

31. ஒருவன் தனக்குத் துன்பம் வராமல் காக்க விரும்பினுல் கோபம் வாரமல் காத்துக்கொள்ளவேண்டும். காவாமல் போனுல் கோபம் கொண்டவனையே அது அழித்துவிடும்.

32. நோய் - துன்பம். நோய் செய்தார் மேலவாம் - பிறர்க்குத் துன்பம் செய்தவரை வந்து அடையும்.

33. நெருநல் - நேற்று. இவ்வுலகம், நேற்று வாழ்ந் தவன் ஒருவன் இன்றைக்கு இல்லை என்று சொல்லும் நிலையாமையாகிய இழிவை உடையது.

34. விருப்பு, வெறுப்பு, அறியாமை என்னும் மூன்றி னுடைய பெயரும் கெடும்படி தவம் செய்வார்க்குத் துன்பம் என்பதே தொலைந்து போகும்.

35. நல்வினையினால் நன்மை அடைந்து மனம் பொருந்தி நுகர்கின்றவர்கள், அவர்கள் செய்த தீவினை யினால் தீமை வருங்காலத்தில், அதனையும் அனுபவிக்க வேண்டியது என்று ஏற்றுக்கொண்டு, நுகராமல் மனம் வருத்தப்படுவது எதனால்?

36. காட்சிக்கு - காண்பதற்கு. எளியன் - எளிய வனாய். கடுஞ்சொல்- இன்னாச்சொல். மீக்கூறும்-புகழ்ந்து பேசுவர். நிலம் - இடவாகுபெயர்.

37 எண் - கணக்கு நூல். எழுத்து - எழுத்து நூல்; இலக்கணம். வாழும் உயிர்க்கு - உலகத்து வாழும் அறிவுடை மக்களுக்கு கண் என்ப - கண்கள் என்று அறிஞர் சொல்லுவர்.

38. புலவர் - கற்றவர். தொழில்-செய்கை. உவப்ப - யாவரும் மகிழும்படியாக. தலைக்கூடி - தம்மொடு கலந்து. உள்ள - நினைத்து வருந்த.

39. தகைமை - மதிப்பு. தலைப்பெய்து - நல்ல பெரி யார்முன் சென்று சொல்லாட - பேசிய உடன். கல்லாத ஒருவன் தன்னை மதிக்கும் மதிப்பு, கற்றார்முன் சென்று உரையாடினவுடன் கெட்டு ஒழியும்.

40. மக்களை நோக்க விலங்கு எவ்வளவு இழிந்ததோ அவ்வாறே கற்றவரை நோக்கக் கல்லாதவர் இழிந்தவ ராவர்.

41. நுணங்கிய - நுட்பமான. வாய் - இடவாகுபெயர்.

42. யாதொரு பொருளை எவரெவர் சொல்லக் கேட்டாலும் அப்பொருளின் உண்மையான பயனைக் காணவல்லது அறிவு.

43. உயர்ந்தோர் எவ்வாறு வாழ்கின்றார்களோ அவ் வாறே அவரோடு கலந்து வாழ்வதே அறிவுடைமைக்கு

அடையாளமாகும். எவ்வது - எவ்வாறு. உலகம் - உயர்ந்தோர்; இடவாகுபெயர். அவ்வது - அவ்வாறே.

44. தம்மில் - அறிவினல் தம்மைப் பார்க்கிலும். பெரியார் - பெரியவராய் இருப்பவரை. தமரா - தம் உற்ருராகக் கருதி. வன்மை-வலிமை. தலை-முதன்மை.

45. இடிப்பாரை - தன் குற்றத்தைக் கண்டித்து உரைக்கக் கூடியவரை. ஏமரா - பாதுகாப்பு அற்ற. கெடுப்பார் - கெடுக்கும் பகைவர். இலானும் - இல்லையாயினும். கெடும் - கெடுவான். கெடுப்பார்: வினையாலணையும் பெயர்.

46. மேல்வரும் ஊதியத்தைக் கருதிப் போட்ட முதலையும் இழந்துவிடக் கூடிய முயற்சியை அறிவுடையோர்கள் மேற்கொள்ள மாட்டார்கள்.

47. நன்மையைச் செய்யுமிடத்தும், அவரவருடைய குணங்களை அறிந்து அவரவர்க்குத் தக்கபடி நலஞ்செய்யாவிடிற் குற்றம் உண்டாதல் கூடும். ஆற்றல்-செய்தல். பண்பு - குணம்.

48. வலியறிதல் - ஒரு செயலைச் செய்து முடிப்பதற்குச் செயல்வலிமை, தன் வலிமை, எதிரியின் வலிமை, துணை நிற்பவர் வலிமை ஆகிய நால்வகை வலிமையையும் அளந்து அறிதல்.

49. கொம்பர் - மரக்கொம்பின். அஃது இறந்து - அதனைக் கடந்து ஊக்கின் - முயல்வார்கள் என்ருல். இறுதி ஆகிவிடும் - முடிவை உண்டாக்கும். கொம்பர்: மொழியீற்றுப் போலி.

50. தக்க உபாயங்களோடு ஒன்றைச் செய்தற்கு உரிய காலம் அறிந்து செய்தால், செய்தற்கு அரியன என்பன உளவோ? இல்லை. கருவி - உபாயம். அருவினை - செய்தற்கு அரியன.

51. கொக்குஒக்க - கொக்குப்போல். கூம்பும் பருவத்து -(வினை செய்வதற்குக் காலம் ஒத்துவாராமையால்)

ஒடுங்கி இருக்க வேண்டிய காலத்திலே. குத்துஒக்க - கொத்துவதுபோல. சீர்த்த இடத்து - இடம் செம்மை யாக வாய்த்தபோது. இச்செய்யுள் உவமையணி.

52. இடத்துச் செயின் - தக்க இடத்தில் அவற்றைச் செய்வாராயின். அஞ்சாமை அல்லால் துணை வேண்டா - (அம் முயற்சி கைகூடுவதற்கு) அஞ்சாமையைத் தவிர வேறு துணை வேண்டியது இல்லை.

53. நன்கு உடையான்கட்டே - செவ்வையாக உடை யவனிடத்தே. தெளிவு - நம்பிக்கை நிலைபெறுதற்கு உரித்து.

54. பற்றற்ற கண்ணும் - வறியவன் ஆனபோதும். பழைமை பாராட்டுதல் - நட்புக்கொண்டு அளவளாவுதல். உள - காணப்படும்.

55. அச்சம் உடையவர்களுக்குக் காவல் பயன்படுவ தில்லை; அதுபோலச் சோர்வு உடையார்க்குச் செல்வமும் பயன்படுவது இல்லை. அரண் - காடு மலை முதலிய காவல்கள். பொச்சாப்பு - மறதி.

56. அரசன் கொடியவர்களைத் தண்டித்தல், உழவன் களையைப் பிடுங்கி எறிந்து பயிரைக் காப்பதனோடு ஒக்கும். ஒறுத்தல் - தண்டித்தல். பைங்கூழ் - பயிர். கட்டு - பிடுங்கி எறிந்து. நேர் - ஒப்பாகும். உவமையணி.

57. மன்னன் காண முடியாதவனாகவும் கடுகடுத்த முகத்தனாகவும் இருப்பானேயானால், பெருஞ் செல்வம் பேயால் காணப்பட்டது போலப் பயனில்லாமல் போகும். அருஞ்செவ்வி-குறையிரப்போர் தன்னை எளிதில் காணும் இடம் இல்லாதவனாய்.

58. பொறை - சுமை. உயர்ந்தோர் இயல்பு கண் ணோட்டத்தின் சார்பாக உள்ளது; கண்ணோட்டம் இல்லாதவர் உலகில் இருத்தல் நிலத்திற்குச் சுமை.

59. ஒருவர்க்குத் திடமாவது ஊக்கமாகிய செல்வமே. அவ்வூக்கமில்லாதவர் மரமாவர். அவர்க்கும் மரத்திற்கும்

உள்ள வேறுபாடு உருவத்தால் மக்களாய் இருப்பதுதான். உரம்—திடம், உள்ள வெறுக்கை—ஊக்கமாகிய செல்வம்.

60. ஆள்வினையுடைமை – விடா முயற்சி உடைமை. தாளாண்மை – முயற்சி. தகைமை – உயர்ந்த தன்மையினாலே, வேளாண்மை – எல்லார்க்கும் உதவி செய்தல். செருக்கு – மேம்பாடு.

61. செய்த முயற்சி, வரையறை இல்லாமையால் கருதிய பயனைத் தராவிடினும், அம்முயற்சிக்கு இடமாகிய உடம்பு வருந்திய வருத்தத்தின் அளவு கூலி தரும்.

62. அரசன் சொல்லறிவும் தன்னறிவும் இல்லாதிருந்தாலும் உறுதியான சொற்களை எடுத்துக் கூற வேண்டியது அமைச்சனின் கடமையாகும். உழை – பக்கம்.

63, தாயார் பசிக்கப் பார்த்தாலும், நல்லோர் கடிந்த செயல்களை அப்பசி நீக்குதற்காகச் செய்யக் கூடாது.

64. வினைத்திட்பம் – செயலுறுதி. மனத்திட்பம் – மன உறுதி. மற்றைய எல்லாம் பிற – ஏனைய கருவிகளின் உறுதியெல்லாம் திட்பமென்று சிறப்பித்துச் சொல்லத் தக்க தன்று.

65. அடுத்தது – தனக்கு நேரே வைத்த பொருளின் வடிவத்தை. பளிங்கு – கண்ணாடி. கடுத்தது – மிகுந்த குணத்தை.

66. வீரன், சென்ற வாழ் நாட்களைக் கணக்கிட்டு முகத்தினும் மார்பினும் புண்படாத நாட்களையெல்லாம், பயன்படத் தவறிய நாட்களுள் வைத்து எண்ணுவான்.

67. நல்ல நூலின் நயமானது படிக்கும் பொழுதெல்லாம் மிகுந்து விளங்கும். அதுபோல நற்குணமுடையவர் நட்பானது பழகுந்தோறும் மிக வளர்ந்து இனிமையைக் கொடுக்கும். நவில்தொறும் – கற்குந்தோறும். பயில்தொறும் – பழகுந்தோறும்.

68. ஒருவனுக்கு ஊதியம் (இலாபம்) என்பது என்ன வென்ருல். அறிவிலார் நட்பினை நீக்கிவிடுதல்.

69. பேதைமை — அறியாமை. கிழமை — உரிமை. நோதக்க-வெறுக்கத்தகுந்த செயல்கள். நட்டார்-நண்பர்.

70. சிறுமை - தாழ்மை. சீர் - புகழ். தாழ்மையான பல கெடுதிகளைச் செய்து ஒருவனது புகழையும் கெடுத்து எளிமையையும் தருவதில், சூதிற்கு இணையானது யாது மில்லை.

71. தன்னைப் பழிப்பவர் பின் சென்று நிற்கின்ற நிலை இம்மையிற் புகழையுந் தராது; மறுமையில் விண்ணு லகத்திலுஞ் செலுத்தாது: பின் அதனுல் என்ன பயன் ?

72. நோன்மை – தவம். சால்பு - குணம், தவம் என்பது கொல்லாமையாகிய நன்மையின் பாற்படும்; சால்பு என்பது பிறருடைய குற்றத்தை எடுத்துரையாத குணத்தின் பாற்படும்.

73. இன்ன - தீமை. இனிய - நன்மை. என்ன பயத் தது - உண்டாக்கக்கூடிய பயன் யாது? தமக்குத் தீமை செய்தவர்களுக்கும் நன்மையே செய்யாதவிடத்துச் சால்பு என்பதால் உண்டாகக் கூடிய பயன் யாது ?

74. சான்ருேர்க்கு நாணுடைமை சிறந்த நகையா கும் ; அஃதில்லையானல், பெருமித நடை ஒரு நோயாகு மல்லவா ?

75. யாதொரு குற்றமும் இல்லாதவனுய்த் தனது குடியைச் சிறப்பு அடையச் செய்து வாழ்கின்றவனைத் தம் உறவினனுக உலகத்தார் கருதி அவனைச் சூழ்ந்து கொண் டிருப்பர். உலகு - உலகத்தவர்.

76. இலம் - நாங்கள் ஏழை. அசைஇ - சோம்பலாய். காணின் – கண்டால். நாங்கள் வறியவர் என்று சோம்ப லாய் இருப்பவர்களை நிலம் என்னும் நல்ல பெண் கண் டால் அவர்கள் சோம்பலை இகழ்ந்து சிரிப்பாள்.

77. மெய்நூற் பொருளை நன்ருக அறிந்து சொன்ஞலும், வறியவர் கூறும் சொல்லும் பொருளும் ஏற்றுக் கொள்ளப்படாது கழிக்கப்படும்.

78. உள்ள – நினைத்தால். கரவு – மறைத்தல். ஏற்பதை நினைத்தால் நெஞ்சம் உருகுகின்றது. ஏற்பவர்க்கு இல்லையென்று மறைப்பதை நினைத்தால் நெஞ்சம் மடிந்து ஒழிகின்றது.

79. கீழ்மக்கள் கட்டுப்பாடு இல்லாமல் தாம் விரும்பியதையே செய்து வாழ்தலால், அவர்கள் அங்ஙனஞ் செய்ய வல்ல வரம் படைத்த விண்ணவரைப் போல்வார்கள் வஞ்சப் புகழ்ச்சியணி.

80. தாங் கேட்ட மறைபொருள்களை (இரகசியங்களை)த் தாங்கிக் கொண்டுபோய் எல்லார்க்கும் சொல்லுதலால், கயவர் அடிக்கப்படும் பறையைப் போல்வர்.

## விஞக்கள்

1. வானின் சிறப்பு யாது?
2. அறம் தரும் ஆக்கம் எவை?
3. மன்னுயிர்க்கெல்லாம் இனிது எது?
4. இன்சொல்லாவது யாது?
5. உயிர்க்கு ஆக்கம் அளிப்பது எது?
6. தன்னை விற்றும் கொள்ளத்தக்கது எது?
7. உலகத்தில் அழியாமல் இருப்பது எது?
8. வாய்மையாவது யாது?
9. சினத்தால் அடையும் கேடு என்ன?
10. இவ்வுலகம் பெற்றுள்ள பெருமை என்ன?
11. கல்லாதவனுக்கு மதிப்பு எப்பொழுது கெடும்?
12. மக்களுக்குக் கண்கள் எவை?
13. புலவர் தொழில் யாது?
14. சிறந்த வலிமையாவது யாது?
15. கெடுப்பார் இல்லாமலே கெடுபவன் யார்?

16. பயிரில் களை எடுப்பதற்கு ஒப்பாகும்.-எது ?

17. நிலத்திற்குச் சுமையாவார் யார் ?

18. அமைச்சனின் கடமை யாது ?

19. கண்ணுடி எதற்கு உவமை ?

20. பண்புடையாளர் நட்பு எத்தகையது ?

21. உலகத்தினர் யாரைச் சுற்றமாகக் கொள்வார் ?

22. நிலமகள் யாரை இகழ்ந்து சிரிப்பாள் ?

23. பறை, கயவருக்கு ஒப்பாவது எப்படி ?

பயிற்சி

பொருள் எழுதுக :—விசும்பு, திண்மை, வேளாண்மை, குறியெதிர்ப்பை, நெருநல், தகைமை, மீக்கூறும், அரண், பைங்கூழ், தாளாண்மை, ஊதியம், கேண்மை, இரவு, கரவு, பறை, மறை.

எதிர்ச் சொற்கள் வரைக :—வேண்டுதல், அறத்தாறு, அறம், அல்லவை, வையகம், ஒறுத்தார், வசை, மழித்தல்,

பிரித்துக் காட்டுக :—தம்மிற்றம், இருந்தோம்பி, வானகம், ஏமரா, நன்ருங்கால், வேந்தொறுத்தல், நாணுடைமை, மக்கட்பேறு, விருந்தோம்பல், ஆள்வினையுடைமை, குறிப்பறிதல், நட்பாராய்தல், இரவச்சம்.

சேர்த்து எழுதுக :—மெய்+உணர்தல். நன்று+ஆற்றல், காலம்+அறிதல், அன்பு+அறிவு,

உவமைகளை விளக்குக :—

‘ பைங்கூழ் களைகட் டதனெடுநேர் ’

‘ அடுத்தது காட்டும் பளிங்குபோல் ’

‘ நவில்தொறும் நூல்நயம் போலும் ’

‘ அறைபறை யன்னர் கயவர் ’

## 2. நாலடியார்

நாலடியார் என்பது நாலடி வெண்பாக்களால் இயற்றப்பெற்ற நூலாகும். நான்கு + அடி + ஆர். இது கருவியாகுபெயராய் நூலைக் குறித்தது. ஆர் — சிறப்பை உணர்த்த வந்த விகுதி (திருக்கோவையார் என்பது போல).

இந்நூலும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாகும். நால், நாலடி, நாலடி நானூறு, வேளாண் வேதம் என்ற வேறு பெயர்களும் இந்நூலுக்கு உண்டு.

நாலடியாரின் ஆசிரியர் சமண முனிவர்கள். இவர்கள் அருகக் கடவுளை வழிபடும் மதத்தினர்.

இந்நூலுக்கு இயல் அதிகாரங்களைப் பாகுபாடு செய்தவர் பதுமனார் என்னும் ஒரு சமணப் புலவர் ஆவார். நாலடியார் திருக்குறளோடு சேர்த்து எண்ணப்படும் சிறப்பு வாய்ந்து விளங்குகின்றது. இந்நூல் கடைச் சங்க காலத்தைச் சேர்ந்தது.

### அறன்வலியுறுத்தல்

ஆவாம்நாம் ஆக்கம் நசைஇ அறம்மறந்து
போவாம்நாம் என்னப் புலைநெஞ்சே—ஓவாது
நின்று(உ)ஞற்றி வாழ்தி எனினும்நின்
[வாழ்நாட்கள்
சென்றன செய்வ துரை. 1

### மெய்ம்மை

ஆவே றுருவின ஆயினும் ஆபயந்த
பால்வே றுருவின அல்லவாம்—பால்போல்
ஒருதன்மைத் தாகும் அறநெறி ஆபோல்
உருவு பலகொளல் ஈங்கு. 2

### நட்பாராய்தல்

நாய்க்காற் சிறுவிரல்போல் நன்கணிய ராயினும்
ஈக்கால் துணையும் உதவாதார் நட்பென்னும் ?
சேய்த்தானும் சென்று கொளல்வேண்டும்
[செய்விளக்கும்
வாய்க்கா லனையார் தொடர்பு. 3

### நல்லினஞ்சேர்தல்

அறிமின் அறநெறி ; அஞ்சுமின் கூற்றம் ;
பொறுமின் பிறர்கடுஞ்சொல் ; போற்றுமின்
[வஞ்சம் ;
வெறுமின் வினைதீயார் கேண்மை ; யெஞ்ஞான்றும்
பெறுமின் பெரியார்வாய்ச் சொல்.

—சமண முனிவர்கள்

### அருஞ்சொற்பொருள்

1. அறன்வலியுறுத்தல் :—அறத்தினை வலியுறுத்திக் கூறுதல். ஆவாம் - வாழக்கடவோம். ஆக்கம் - செல்வம். நசைஇ - விரும்பி. போவோம் - இறந்துபோவோம். உஞற்றி - முயற்சி செய்து. வாழ்தி - வாழ்வாய். ஆக்கம் - ஆகுதல் ; தொழிற்பெயர் : செல்வத்துக்கு ஆகியது காரிய ஆகுபெயர். நசைஇ - சொல்லிசை அளபெடை. நீ - எழுவாய். உரை - பயனிலை, செய்வது - செயப்படுபொருள்.

2. ஆ - பசு. பயந்த - கொடுத்த. நெறி - வழி. ஈங்கு - இவ்வுலகத்தில் உண்டாகிய சமயங்கள். உரு - வடிவம். கொளல் - கொண்டிருக்கும்.

பசுக்களெல்லாம் வெவ்வேறுருவின வானாலும் பாலெல்லாம் ஒருருவே ; அதுபோல, யார் செய்யினும் அறம் எல்லாம் ஒருவழியாகும். அறவுரை - எழுவாய்.

ஆகும் - பயனிலை. சமயங்கள் - எழுவாய். கொளல்-பயனிலை. வேடங்களை - செயப்படுபொருள்.

இச்செய்யுள் உவமையணி. உரு—உருவு என உகரச் சாரியை பெற்றது, ஈங்கு - சுட்டு நீண்டது.

3. கால் - காலின், நன்கு அணியர் - மிகவும் நெருக்க முடையவர். ஈ கால் - ஈயினது கால், துணையும் - அளவும். செய் - கழனியை. விளக்கும் - விளைவிக்கும். அனையர் - ஒப் பானவர். சேய்த்து - தொலைவு.

நட்பு - எழுவாய், என்னும் - பயனிலை.

ஒருவர் - எழுவாய், கொளல் வேண்டும் - பயனிலை, தொடர்பை - செயப்படுபொருள்.

4. நெறி - வழி. கூற்றம் - இயமன். கேண்மை - நட்பு, எஞ்ஞான்றும் - எந்நாளும், அறிமின், அஞ்சுமின், முன்னிலை ஏவற்பன்மை வினைமுற்றுக்கள்; மின் - முன்னிலைப் பன்மை வினைமுற்று விகுதி.

நீங்கள் - தோன்ரு எழுவாய், பெறுமின் - பயனிலை.

### வினக்கள்

1. நெஞ்சத்தின் தன்மை யாது?

2. ஆசிரியர் நெஞ்சிற்குக் கூறும் அறவுரை யாது?

3. பசு பல வுருவின, பால் ஒரே வுருவுடையது இவ்வுவமையால் அறியப்படும் உவமேயத்தை விளக்கி எழுதுக.

4. எத்தகையவர் நட்பைக் கொளல் வேண்டும்? எத்தகையோர் நட்பைக் கொளல் ஆகாது?

5. நல்லினஞ் சேர்தற்குரியார் கடைபிடிக்க வேண்டி யன யாவை?

### பயிற்சி

1. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஐந்து எழுதுக.

2. பொருள் எழுதுக :—ஆக்கம, நசைஇ, புலை, உளுற்றி, ஆ, சேய்த்து, செய், கூற்றம், வஞ்சம்.

3. எதிர்ச்சொற்கள் வரைக :—அணியர், கேண்மை, அஞ்சுமின், வெறுமின்.

4. உவமைகளை விளக்குக :—'பால்போல்' 'ஆபோல்' 'நாய்க்கால் சிறுவிரல்போல்'.

5. பிரித்துக் காட்டுக :—செய்வதுரை ; ஆவேறுருவின, நன்கணியர், நட்பென்னும், கடுஞ்சொல், கேண்மையெஞ் ஞான்றும்.

6. சேர்த்து எழுதுக :—நட்பு+ஆராய்தல், சேய்த்து+ ஆனும், வாய்க்கால்+அனையார்.

7. சிந்தனைக்கு :—பசுக்கள் பல்வேறு நிறத்தன, ஆனல் பால் ஒரே நிறம் உடையது; இதைப்போன்றே சமயம் பலவானலும் கடவுள் ஒன்றே என்பதற்குப் பொருத்தமான உதாரணம் ஒன்று எழுதுக.

## 3. இனியவை நாற்பது

இனியவை நாற்பது: இனிய பொருள்களை உரைக்கும் நாற்பது வெண்பாக்களையுடைய நூல் என்பது பொருள். 'இனிது நாற்பது' 'இனிய நாற்பது' என்னும் பெயர்களும் இந்நூலுக்கு உண்டு.

இந்நூலுக்கு ஆசிரியர் மதுரைத் தமிழாசிரியர் மகனர் பூதஞ்சேந்தனர் என்பவர் ஆவர். 'சேந்தன்' என்பது ஆசிரியர் பெயர். 'பூதன்' என்பது அவர் தந்தை பெயர். தமிழாசிரியர் என்பது அவர் சிறப்புப்பெயர், 'ஆர்' சிறப்பு விகுதி.

இனியவை நாற்பது பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று. இது கடைச்சங்க நூலாகும். இந்நூலாசிரியர் சைன சமயத்தைச் சார்ந்தவர் என்பர்.

நட்புக்கொள்ளுதல் இனிது

ஏவது மாறு விளங்கிளைமை முன்னினிதே;
நாளு நவைபோகான் கற்றன் மிகவினிதே;
ஏருடையான் வேளாண்மை தானினி தாங்கி
[னிதே
தேரிற்கோ ணட்புத் திசைக்கு. 1

திரிபின்றி வாழ்தல் இனிது

வருவா யறிந்து வழங்க லினிதே;
ஒருவர்பங் காகாத வூக்க மினிதே;
பெருவகைத் தாயினும் பெட்டவை செய்யார்
திரிபின்றி வாழ்த லினிது. 2

செய்வது செய்தல் இனிது

வெல்வது வேண்டி வெகுளாதா ஞேன்பினிதே;
ஒல்லுந் துணையுமொன் றுய்ப்பான் பொறை
[யினிதே;
இல்லது காமுற் றிரங்கி யிடர்ப்படார்
செய்வது செய்த லினிது. 3

—பூதஞ்சேந்தனர்

அருஞ்சொற்பொருள்

1. ஏவது – ஏவலே, ஏவு முதனிலேத் தொழிற்பெயர். மாறு - மறுக்காது செய்யும். இளங்கிளைமை - மக்கள் உடைமை. முன் - முற்பட. நவை போகான் - குற்றங்களில் செல்லாதவனுய். ஏர் - உழும் மாடு, கோள் நட்பு- நட்புக்கொள்ளுதல்.

2. வருவாய் அறிந்து-(தமக்குப்) பொருள் வருகின்ற நெறியின் அளவினே அறிந்து. வழங்கல் - கொடுத்தல்.

பங்கு-சார்பு. ஊக்கம்-மனவெழுச்சி. பெருவகைத்து - பெரிய பயனை உடைத்தாயினும், பெட்டவை - தாம் விரும்பியவற்றை. திரிபின்றி - தம் இயல்பின் வேறுபடுதல் இல்லாது.

3. வெல்வது - மேம்படுதலை. வேண்டி - விரும்பி. வெகுளாதான் - சீற்றங்கொள்ளாதவனது. நோன்பு - தவம். ஒல்லும் துணையும் - கூடியவளவும். இல்லது - தம்மிடத்தில் இல்லாததொரு பொருளை. காமுற்று - விரும்பி. இரங்கி - (அது பெருமையின்) மனம் ஏங்கி. செய்வது செய்தல் - உள்ளது கொண்டு செய்யத் தக்கதொரு கருமத்தைச் செய்தல்.

## வினாக்கள்

1. கிளைமை, கற்றல், வேளாண்மை, நட்பு—இவை இனியவாவது எப்பொழுது ?

2. வழங்கல். வாழ்தல்—இனிதாவ தெப்பொழுது ?

3. நோன்பு, பொறை, இனிதாவ தெப்பொழுது ?

## பயிற்சி

1. பொருள் எழுதுக :— ஏவது, இளங்கிளைமை, நவை, வேளாண்மை, பெட்டவை, நோன்பு, ஒல்லுந்துணையும், உய்ப்பான், பொறை.

2. எதிர்ச்சொற்கள் எழுதுக:—மாரு, இனிது, நட்பு, வழங்கல், செய்யார்.

3. பிரித்துக் காட்டுக :—மாருவிளங்கிளைமை, முன்னினிதே, மிகவினிதே, தானினிதாங்கினிதே, கோணட்பு, காமுற்றிரங்கி.

4. சேர்த்து எழுதுக :—பங்கு+ஆகாத, திரிபு+இன்றி, வெகுளாதான்+நோன்பு+இனிது, ஒன்று+உய்ப்பான், பொறை+இனிதே.

# 4. நீதிநெறி விளக்கம்

இந்நூல் நீதிநெறியை விளக்கிக் கூறும் 101 பாடல்களைக்கொண்டது. இந்நூலின் ஆசிரியர் குமரகுருபர அடிகள். திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த ஸ்ரீவைகுண்டத்தில் பிறந்தார். முந்நூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர். ஐந்து வயது வரையில் ஊமையாக இருந்தார். பிறகு பேசும் வன்மை பெற்றுப் பெரும் புலவராகத் திகழ்ந்தார்.

இவர், மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ், முதலிய பதினான்கு நூல்களுக்குமேல் பாடியுள்ளார்.

கல்வி அழகே அழகு

கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்றோ ரணிகலம் வேண்டாவாம்—முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக் கழகுசெய் வார். 1

சொல்வன்மை

எத்துணைய வாயினுங் கல்வி இடமறிந்
துய்த்துணர் வில்லெனி னில்லாகும்—உய்த்
[துணர்ந்தும்
சொல்வன்மை யின்றெனின் என்னாகும்
[அஃதுண்டேல்
பொன்மலர் நாற்ற முடைத்து. 2

செல்வரின் ஈகைப்பயன்

வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பின்
தூங்குங் களிறோ துயருறா—ஆங்கதுகொண்
டூரு மெறும்பிங் கொருகோடி யுய்யுமால்
ஆருங் கிளையோ டயின்று. 3

—குமரகுருபர அடிகள்

### அருஞ்சொற்பொருள்

1. நலன் - அழகு. முற்ற - ஒரு காலத்திலும். பூண் - நகை; முதனிலைத் தொழிலாகுபெயர்.

2. எத்துணைய - எவ்வளவின. உய்த்துணர்வு - ஆராய்ந்து உணரும் தன்மை. சொல்வன்மை - பேச்சுத் திறன். நாற்றம் - மணம்.

3. கவளம் - ஒரு வாய் உணவு. வாய்தப்பின் - வாயிலிருந்து தவறிவிட்டால். தூங்கும் களிறோ - அசைந்து கொண்டிருக்கும் யானைகளோ. உறு - அடையா. உய்யும் - பிழைக்கும். கிளை - சுற்றம். அயின்று - உண்டு. இச் செய்யுள் பிறிது மொழிதல் அணியுடையது. உவமையை மட்டும் கூறி உவமேயத்தை உணர வைத்தல் பிறிது மொழிதல் அணியாகும்.

### வினாக்கள்

1. கற்றோர்க்கு அணிகலனாவது எது?

2. பொன்மலர், நாற்றம் இவை எவற்றிற்கு உவமையாக வந்தன?

3. ஈகைப் பயன் யாது?

### பயிற்சி

1. பொருள் எழுதுக:—பூண், உய்த்துணர்வு, நாற்றம், தூங்கும் களிறு.

2. சொற்பிரித்து எழுதுக:—கலனல்லால், அழகுக்கழகு, கிளையோடயின்று.

3. சேர்த்து எழுதுக:—எ + துணைய. இடம் + அறிந்து, உய்த்து + உணர்வு; அஃது + உண்டேல்.

4. எதிர்ச்சொல் எழுதுக;—கற்றோர், வன்மை, சிறிது உரு.

5. உவமைகளை விளக்குக:—'முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா'

'பொன்மலர் நாற்ற முடைத்து'

# III. தொடர்நிலைச் செய்யுட் பகுதி

## 1. மணிமேகலை

கோவலன் மாதவி இருவர்க்கும் பிறந்த மகள் மணிமேகலை. அவளுடைய வரலாற்றைக் கூறும் நூல் ஆதலின் இந்நூல் இப்பெயர் பெற்றது. இந்நூலுக்கு 'மணிமேகலை துறவு' என்ற வேறு பெயரும் உண்டு.

ஆசிரியர்—மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார். ஊர்—திருச்சிராப்பள்ளியைச் சார்ந்த சீத்தலை. தொழில்—மதுரையில் கூலவாணிகம். (கூலம்—தானியம்) மரபு—வணிகர். சமயம்—பௌத்தம். காலம் கி. பி. 200.

### ஆதிரை பிச்சையிட்ட காதை

மணிமேகலை கோமுகிப் பொய்கையிலிருந்து அமுதசுரபி என்னும் பாத்திரத்தை அடைந்தாள். முதன்முதல் கற்புடைய நங்கையொருத்தியின் கையினால் பிச்சை பெற விரும்பினாள். காயசண்டிகை என்ற வித்தியாதரப் பெண்ணொருத்தி ஆதிரை என்பவளின் கற்புத்திறனை எடுத்துக் கூறி அவளிடம் முதலில் பிச்சை பெறலாம் என்று கூறினாள். மணிமேகலையும் அவள் சொற்படியே ஆதிரையிடம் பிச்சையேற்றாள்—என்ற கதைப் பகுதியைக் கூறுவது இப்பிரிவு. காதை - சிறு பிரிவு.

சாதுவன் கூறிய அறவுரை

மயக்குங் கள்ளும் மன்னுயிர் கோறலும்
கயக்கறு மாக்கள் கடிந்தனர் கேளாய்
பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்
உறங்கலும் விழித்தலும் போன்ற துண்மையின்
நல்லறஞ் செய்வோர் நல்லுல கடைதலும்

அல்லறஞ் செய்வோர் அருநர கடைதலும்
உண்டென உணர்தலின் உரவோர் களைந்தனர்
கண்டனை யாகெனக் கடுநகை எய்தி

குருமகன் கொண்ட ஐயம்

உடம்புவிட் டோடும் உயிருருக்கொண்டார்
இடம்புகும் என்றே எமக்கீங் குரைத்தாய்
அவ்வுயிர் எவ்வணம் போய்ப்புகும் அவ்வகை
செவ்வனம் உரையெனச் சினவா திதுகேள்

சாதுவன் குருமகன் ஐயம் நீக்குதல்

உற்றதை உணரும் உடலுயிர் வாழ்வுழி
மற்றைய உடம்பே மன்னுயிர் நீங்கிடில்
தடிந்தெரி ஊட்டினுந் தானுண ராதெனின்
உடம்பிடைப் போனதொன் றுண்டென உணர்நீ
போனார் தமக்கோர் புக்கிலுண் டென்பது
யானோ வல்லேன் யாவரும் உணர்குவர்
உடம்பீண் டொழிய உயிர்பல காவதம்
கடந்துசேண் சேறல் கனவினுங் காண்குவை
ஆங்கனம் போகி அவ்வுயிர் செய்வினை
பூண்ட யாக்கையின் புகுவது தெளிநீ
என்றவன் உரைத்தலும் எரிவிழி நாகனும்

குருமகன் தனக்கு அறம் உரைக்க வேண்டல்

நன்றறி செட்டி நல்லடி வீழ்ந்து
கள்ளும் ஊனும் கைவிடின் இவ்வுடம்பு
உள்ளுறை வாழுயிர் ஓம்புதல் ஆற்றேன்
தமக்கொழி மரபின் சாவுறு காறும்
எமக்கா நல்லறம் எடுத்துரை என்றலும்

### சாதுவன் நாகர்க்குரிய அறநெறி கூறல்

நன்று சொன்ஞய் நன்னெறிப் படர்குவை
உன்றனக் கொல்லும் நெறியறம் உரைக்கேன்
உடைகல மாக்கள் உயிருய்ந் தீங்குறின்
அடுதொழில் ஒழிந்தவர் ஆருயிர் ஓம்பி
மூத்துவிளி மாவொழித் தெவ்வுயிர் மாட்டும்
தீத்திறம் ஒழிகெனச் சிறுமகன் உரைப்போன்

### சாதுவன் தன் நகர் அடைதல்

ஈங்கெமக் காகும் இவ்வறம் செய்கேம்
ஆங்குனக் காகும் அரும்பொருள் கொள்கெனப்
பண்டும் பண்டும் கலங்கவிழ் மாக்களை
உண்டேம் அவர்தம் உறுபொருள் ஈங்கிவை
விரைமரம் மென்றுகில் விழுநிதிக் குப்பையோ
டிவையிவை கொள்கென எடுத்தனன்
[கொணர்ந்து
சந்திர தத்தன் என்னும் வாணிகன்
வங்கஞ் சேர்ந்ததில் வந்துடன் ஏறி
இந்நகர் புகுந்தீங் கிவளொடு வாழ்ந்து
தன்மனை நன்பல தானமும் செய்தனன்

### ஆதிரை மணிமேகலைக்குப் பிச்சையிடல்

ஆங்ஙனம் ஆகிய ஆதிரை கையால்
பூங்கொடி நல்லாய் பிச்சை பெறுகென
மனையகம் புகுந்து மணிமே கலைதான்
புனையா ஓவியம் போல நிற்றலும்
தொழுது வலங்கொண்டு துயரறு கிளவியொடு
அமுத சுரபியின் அகன்சுரை நிறைதரப்

பாரகம் அடங்கலும் பசிப்பிணி அறுகென
ஆதிரை யிட்டனள் ஆருயிர் மருந்தென்.

—சீத்தலைச் சாத்தனூர்

அருஞ்சொற்பொருள்

1. கள்ளும் - கள் உண்டலையும். மன்உயிர் - நிலைபெற்ற உயிர். கோறலும் – கொல்லுதலையும். கோறல் - தொழிற் பெயர் ; கொல் - பகுதி, தல் - தொழிற்பெயர் விகுதி, பகுதி திரிந்து வந்தது.

2. கயக்கு அறு மாக்கள் - கலக்க மற்ற அறிவை யுடைய பெரியோர்கள். கடிந்தனர் - விலக்கினர். கேளாய் - கேட்பாயாக.

6. அல் அறம் - அறமல்லாத பாவச் செயல்கள். அரு நரகு - பண்புத்தொகை.

7. உண்டு - உண்மை. உணர்தலின் – அறிந்திருத்த லால். உரவோர் - அறிவுடைய பெரியோர்கள். களைந்த னர் - அவற்றை விலக்கினர்.

8. கண்டனையாக - நீ இதனைத் தெரிந்து கொள்வா யாக: முன்னிலை ஒருமை வினைமுற்று ; காண் - பகுதி (கண் எனத் திரிந்து நின்றது) ட் - இறந்தகால இடை நிலை, அன் – சாரியை, ஐ - முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதி.

9. கடுநகை எய்தி - பெருஞ் சிரிப்புக்கொண்டு. ஓடும் - பிரிந்து செல்கின்ற. உருக்கொண்டு - வேறு வடிவத்தைக் கொண்டு.

10. உரைத்தாய் - முன்னிலை ஒருமை வினைமுற்று.

11. அவ்வுயிர் - அ+உயிர் ; புறச்சுட்டு. எவ்வணம் - எவ்வண்ணம் என்பதன் இடைக்குறை.

12. செவ்வனம் உரை - தெளிவாகக் கூறுவாயாக.

13. உற்றதை - நிகழ்ந்ததனை.

14. மற்றைய உடம்பே - அங்ஙனம் அறியும் இயல்புடைய அவ்வுடம்பே.

15. தடிந்து - அவ்வுடம்பை வெட்டி, எரி ஊட்டினும் - நெருப்பில் இட்டாலும். தான் உணராது - அது சிறிதும் அதனை அறியாது.

16. உடம்பிடை - உடம்பின் கண் இருந்து. போனதொன்றுண்டென - போனது + ஒன்று + உண்டு + என. உணர் நீ - நீ அறிந்துகொள்வாயாக.

17. போனார் தமக்கு-ஓரிடத்தை விட்டுப்பிரிந்து சென்றவர்க்கு. புக்கில் - புகும் இடம்.

18. யானே அல்லேன் - நான்மட்டும் அல்லன். உணர்குவர் - அறிவர்.

19. ஈண்டு - இவ்விடத்திலேயே, ஒழிய - நீங்க. காவதம் - காததூரம், காதம் - பத்துக்கல்.

20. சேண் சேறல் - நெடுந்தொலைவு செல்லுதலை; சேறல் - தொழிற்பெயர், காண்குவை - காண்பாய்; முன்னிலை ஒருமை வினைமுற்று,

21. ஆங்கனம் - இவ்வாறு. போகி - சென்று. செய்வினை - வினைத்தொகை.

22. பூண்ட - மேற்கொண்ட, யாக்கை - உடம்பு; காரணப் பெயர். புகுவது - அடைவதை. தெளி நீ - நீ அறிவாயாக.

23. எரிவிழி - நெருப்புப் போன்ற கண்கள்; உவமத்தொகை.

24. நன்றுஅறி - நல்லறத்தினை அறிந்துள்ள. செட்டி - வணிகன். நல்லடி - நன்மை+அடி; பண்புத்தொகை.

25. ஊன் - இறைச்சி, கைவிடின் - நீக்கிவிட்டால்,

26. ஓம்புதல் - காப்பாற்றுதல். ஆற்றேன் - இயலாதவனுவேன்.

27. தமக்கு ஒழி மரபின் - உயிர்கட்கு என்று வரையறுக்கப்பட்ட.

28. எமக்காம் - எங்களுக்கு உதவியாகக்கூடிய.

29. நன்று - நன்கு.

30. உரைக்கேன் - கூறுவேன்; உரை - பகுதி; க் - சந்தி' க் - இடைநிலை எதிர்காலம் காட்டியது; ஏன்-தன்மை ஒருமை வினைமுற்று விகுதி.

31. கலம் - கப்பல். மாக்கள் - மனிதர். உய்ந்து - பிழைத்து. ஈங்கு - இங்கே; செய்யுளில் சுட்டு நீண்டது

32. அடு தொழில் - கொல்லும் தொழில். ஆருயிர் - அருமை + உயிர்; பண்புத்தொகை. ஓம்பி - காப்பாற்றி.

33. மூத்து - வயது முதிர்ந்து. விளிமா - தாமாக இறக்கின்ற விலங்குகள்.

34. தீத்திறம் - கொலை செய்யும் தீயசெயலை. ஒழிகென - ஒழிக + என. சிறுமகன் - கீழ்மகனான நாகர் தலைவன்.

35. ஆகும் - ஏற்ற, செய்கேம் - செய்வோம்.

36. ஆங்கு - நீ செல்லும் அவ்விடத்திற்கு.

37. பண்டும் பண்டும் - அடுக்குத்தொடர். கலம் - கப்பல்.

38. உண்டேம் - கொன்று தின்றோம். உறுபொருள் - மிக்க செல்வம்; உரிச்சொற்றொடர்.

39. வங்கம் - கப்பல்.

40. புனையா ஓவியம் போல நிற்றலும் - கையினால் எழுதப்படாத சித்திரத்தைப் போல நின்றவுடன்.

41. தொழுது வலம் கொண்டு - மணிமேகலையை வணங்கி வலமாகச் சுற்றி வந்து.

42. அகன் சுரை நிறை தர - அகன்ற உள்ளிடம் நிறையுமாறு.

43. பாரகம் அடங்கலும் - இவ்வுலகம் முழுவதும் ; இடவாகு பெயராய் உயிர்களைக் குறித்தன. பசிப்பிணி— பசியாகிய நோய் ; உருவகம்.

44. ஆதிரை – ஆதிரை என்ற சாதுவன் மனைவி, ஆருயிர் மருந்து – அரிய உயிரைக் காக்கும் மருந்தாகிய உணவு.

## வினாக்கள்

1. நல்லறிவுடைய மக்கள் எவற்றை நீக்கினர் ?
2. உறங்கலும் விழித்தலும் போன்றது எது ?
3. உரவோர் உணர்ந்ததும் களைந்ததும் எவை ?
4. நாகர் தலைவன் உரைத்தன யாவை ?
5. சாதுவன் குருமகன் ஐயத்தை எவ்வாறு போக்கினான் ?
6. குருமகன் சாதுவனை வணங்கிக் கூறியது என்ன?
7. சாதுவன் நாகர்க்கு உரைத்த அறநெறி யாவை?
8. ஆதிரை மணிமேகலைக்குப் பிச்சையிட்ட தன்மையை விளக்கிக் கூறுக.

## பயிற்சி

1. பொருள் எழுதுக :—உரவோர், செவ்வனம், சேண், யாக்கை, ஊன், ஒல்லும், கலம், மா, துகில், கிளவி, சுரை, பாரகம், ஆருயிர் மருந்து.

2. எதிர்ச்சொற்கள் வரைக :—சாதல், உறங்கல், நல்லறம், ஒல்லும், தீத்திறம், ஈங்கு, வலம்.

3. உவமையை விளக்குக :—'புனையா ஓவியம் போல'

4. பிரித்துக் காட்டுக :—கோறல், கேளாய், அருநரகு, ஈண்டொழிய, நன்னெறி, ஆருயிர், எமக்கீங்குரைத்தாய்.

5. சேர்த்து எழுதுக :—கயக்கு + ஆறு, புகு+இல், நன்மை+அடி, மென்மை+துகில், பெறுக+என.

## 2. நளவெண்பா

'நளவெண்பா' என்னும் தொடரை 'நளன் வெண்பா' எனப் பிரிக்க; 'நளனது வெண்பா' வென விரிக்க. நளனது வரலாற்றை வெண்பா வென்னும் பாட்டு வகையால் கூறப்படும் நூல் என்பது இதன் பொருள்.

### ஆசிரியர் வரலாறு

நளவெண்பாவின் ஆசிரியர் புகழேந்திப் புலவர். தொண்டை நாட்டில் பொன் விளைந்த களத்தூரில் இவர் பிறந்தார். இவர் துளுவவேளாள மரபினர். இவர், கம்பர், ஒட்டக்கூத்தர் முதலிய புலவர்கள் வாழ்ந்த கி. பி. 12-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தவர்; வைணவ சமயத்தினர்; 'புலவர்க்கு வெண்பாப் புலி' என்ற மொழியை வென்றவர். 'வெண்பாவிற் புகழேந்தி' என்று புகழ் பெற்றவர்.

சந்திரன் சுவர்க்கி யென்னும் மள்ளுவ நாட்டுச் சிற்றரசரின் வேண்டுகோளுக்கிணங்கி இவர் 'நளவெண்பா' என்னும் நூலினை இயற்றினுர் என்பர். நளவெண்பாவிற்கு முதனூல் வடமொழி மகாபாரதத்து ஆரண்ய பர்வத்துள் வரும் 'நளோபாக்கியாநம்' என்பதாகும்.

நளன் மக்களை அணைத்துக்கொண்டு வினவுதல்

மக்களைமுன் காணு மனநடுங்கா வெய்துயிராப்
புக்கெடுத்து வீரப் புயத்தணையா—மக்காணீ
ரென்மக்கள் போல்கின்றீர் யார்மக்க
[ளென்றுரைத்தான்
வன்மக் களியானை மன்.

பிள்ளைகள் சொல்லல்

மன்ன னிடதத்தார் வாழ்வேந்தன் மக்கள்யா
மன்னைதனைக் கான்விட் டவனேக—விந்நகர்க்கே
வாழ்கின்ரே மெங்கள் வளநாடு மற்றொருவ
னள்கின்ரு னென்ரு ரழுது. 2

ஆங்கவர் சொன்ன வுரைகேட் டழிவெய்தி
நீங்கா வுயிரோடு நின்றிட்டான்—பூங்காவின்
வள்ளம்போற் கோங்கு மலருந் திருநாட
னுள்ளம்போற் கண்ணீ ருகுத்து. 3

அரசன் வினு

உங்க ளரசொருவ னளநீ ரோடிப்போந்
திங்க னுறைத லிழுக்கன்ரே—செங்கை
வளவரசே யென்றுரைத்தான் மாதவத்தாற்
[பெற்ற
விளவரசை நோக்கி யெடுத்து. 4

மக்கள் விடையளித்தல்

நெஞ்சாலிம் மாற்ற நினைந்துரைக்க நீயல்லா
தஞ்சாரோ மன்ன ரடுமடையா—வெஞ்சாது
தீமையே கொண்ட சிறுதொழிலா யெங்கோமான்
வாய்மையே கண்டாய் வலி. 5

அரசன் சொல்லல்

மன்னர் பெருமை மடையர் அறிவரோ
வுன்னை யறியா துரைசெய்த—வென்னை
முனிந்தருள லென்று முடிசாய்த்து நின்ருன்
கனிந்துருகி நீர்வாரக் கண். 6

தமயந்தி துயரமுறுதல்

கொற்றக் குமரனையுங் கோதையையுந் தான்கண்டு
மற்றவன்ரு ணுங்குரைத்த வாசகத்தை—முற்று
மொழிந்தாரம் மாற்ற மொழியாத முன்னே
யழிந்தாள் விழுந்தா ளழுது. 7

மற்றித் திருநகர்க்கே வந்தடைந்த மன்னவற்குக்
கொற்றத் தனித்தேருங் கொண்டணைந்து-மற்று
மடைத்தொழிலே செய்கின்ற மன்னவன்கா
[ணைங்கள்
கொடைத்தொழிலா னென்ருள் குறித்து. 8

வீமன் நளனிடம் சொல்லல்

செவ்வாய் மொழிக்குஞ் செயலுக்குஞ் சிந்தைக்கு
மொவ்வாது கொண்ட வுருவென்ன—வெவ்வாயு
நோக்கின ஞேக்கித் தெளிந்தா னுணங்கியதோர்
வாக்கினுன் றன்னை மதித்து. 9

வீமன் நளனை நோக்கிச் சொல்லியது

பைந்தலைய நாகப் பணமென்று பூகத்தி
னைந்தலையின் பாளைதனை யையுற்று—மந்தி
தெளியா திருக்குந் திருநாடா வுன்னை
யொளியாது காட்டுன் னுரு. 10

அரவரசன் ருன்கொடுத்த வம்பூந் துகிலி
ஞெருதுகிலை வாங்கி யுடுத்தா—ஞெருதுகிலைப்
போர்த்தான் பொருகலியன் வஞ்சனையாற்
[பூண்டளிக்குங்
கோத்தாய முன்னிழந்த கோ. 11

நளன் மாறுவேடம் நீங்கல்

மிக்கோ னுலகளந்த மெய்யடியே சார்வாகப்
புக்கோ ரருவினைபோற் போயிற்றே—யக்காலங்
கானகத்தே காதலியை நீத்துக் கரந்துறையு
மானகத்தேர்ப் பாகன் வடிவு. 12

இருதுபர்ணன் தன்னகர் சேர்தல்

உன்னையா ஞென்று முணரா துரைத்தவெலாம்
பொன்னமருந் தாராய் பொறுக்கென்று
[—பின்னைத்தன்
மேனீர்மை குன்ரு வெறுந்தேர் மிசைக்கொண்டான்
மானீ ரயோத்தியார் மன். 13

நளன் மனைவி மக்களுடன் நிடதநாடு செல்லல்

விற்ருனை முன்செல்ல வேல்வேந்தர் பின்செல்லப்
பொற்றேர்மேற் றேவியொடும் போயினன்
[—முற்ருப்ப
றேனீ ரளித்தருகு செந்நெற் கதிர்விளைக்கு
மாநீர் நிடதத்தார் மன். 14

தானவரை வெல்லத் தரித்தநெடு வைவேலா
யேனைநெறி தூரமினி யெத்தனையோ—மானேகே
ளிந்த மலைகடந் தேழுமலைக் கப்புறமா
விந்தமெனு நம்பதிதான் மிக்கு. 15

கதிரவன் வருகை

இக்கங்குல் போக விகல்வே னளனெறிநீர்
செய்க்கங்கு பாயுந் திருநாடு—புக்கங்
கிருக்குமா காண்பான்போ லேறினன் குன்றிற்
செருக்குமான் றேர்வெய்யோன் சென்று. 16

நளன், மனைவி மக்களுடன் மாவிந்த நகரின்
சோலையை அடைதல்

மன்றலிளங் கோதையொடு மக்களுந் தானுமொரு
வென்றி மணிநெடுந்தேர் மேலேறிச்
—சென்றடைந்தான்
மாவிந்த மென்னும் வளநகரஞ் சூழ்ந்ததொரு
பூவிந்தை வாழும் பொழில். 17

நளன் புட்கரனுக்குத் தூதுவிட்டு மறுபடியும் சூதாடல்

மற்றவனுக் கென்வரவு சொல்லி மறுசூதுக்
குற்ற பணைய முளதென்று—கொற்றவனைக்
கொண்டணைவீ ரென்று குலத்தூ தரைவிடுத்தான்
றண்டெரியற் றேர்வேந்தன் றன். 18

புட்கரன் நளனைக் காண்டல்

மாய நெடுஞ்சூதில் வஞ்சித்த வன்னெஞ்சன்
றூய நறுமலர்ப்பூஞ் சோலைவா—யாய
பெருந்தானை சூழப் பெடைநடையா ளோடு
மிருந்தானைக் கண்டா னெதிர். 19

### புட்கரன் நளனின் நலன் வினவல்

செங்கோ லரசன் முகநோக்கித் தேர்ச்சியிலா
வெங்கோ லரசன் வினவினன்—னங்கோலக்
காவற் கொடைவேந்தே காதலற்குங் காதலிக்கும்
யாவர்க்குந் தீதிலவே யென்று. 20

### பந்தயம் வைத்தல்

தீது தருகலிமுன் செய்ததனை யோராதே
யாது பணைய மெனவியம்பச்—சூதாட
மையாழி யிற்றுயிலு மாலனையான் வண்மைபுனை
கையாழி வைத்தான் கழித்து. 21

### நளன் வெற்றியடைந்து தன்னகரைக் கைப்பற்றுதல்

அப்பலகை யொன்றி னருகிருந்தார் தாமதிக்கச்
செப்பரிய செல்வத் திருநகரு—மொப்பரிய
வன்றானை யோடு வளநாடும் வஞ்சனையான்
வென்றானை வென்றானவ் வேந்து. 22

அந்த வளநாடு மவ்வரசு மாங்கொழிய
வந்த படியே வழிக்கொண்டான்—செந்தமிழோர்
நாவேய்ந்த சொல்லா னளனென்று போற்
[றிசைக்குங்
கோவேந்தற் கெல்லாங் கொடுத்து. 23

நளன் இந்திரனைப்போல நகரடைதல்

ஏனை முடிவேந்த ரெத்திசையும் போற்றிசைப்பச்
சேனை புடைசூழத் தேரேறி—யானபுகழ்ப்
பொன்னகர மெய்தும் புரந்தரனைப் போற்
[பொலிந்து
நன்னகரம் புக்கா னளன். 24

நிடதநாடு ஒப்பற்று விளங்கிற்று

கார்பெற்ற தோகையோ கண்பெற்ற வாண்
[முகமோ
நீர்பெற் றுயர்ந்த நிறைபுலமோ—பார்பெற்று
மாதோடு மன்னன் வரக்கண்ட மாநகருக்
கேதோ வுரைப்பெ னெதிர். 25

—புகழேந்திப் புலவர்

அருஞ்சொற்பொருள்

1. முன்–எதிரில். காணு–கண்டு. நடுங்கா–நடுங்கி. வெய்து – வெப்பம். உயிரா – உயிர்த்து ; மூச்சுவிட்டு. புக்கெடுத்து – புக்கு + எடுத்து ; புகு என்னும் பகுதி இரட்டித்து இறந்தகாலம் காட்டிற்று. மக்காள் – மக்கள்; விளியில் ஈற்று அயல் நீண்டது. வன்மம் – பகைக் குணம். களியானை – வினைத்தொகை. மன் – மன்னன்.

2. வாழ் – வாழ்தற்குக் காரணமாகிய. கான் – காடு. இந்நகர்க்கே – இந்த நகரத்தின் கண்ணே ; நான்காம் வேற்றுமை உருபு ஏழாம் வேற்றுமைப் பொருளில் வந்தது ; உருபு மயக்கம்.

3. ஆங்கு – அவ்விடத்து. அழிவு எய்தி – குணம் அழிந்து. நீங்கா – ஒழியாத. நின்றிட்டான் – நின்ருன். வள்ளம் – வட்டில். உள்ளம்போல் – ஊக்கம் சிந்தியதைப் போல. (நளன் கண்ணீர் சொரிந்து நின்ருன்)

4. உறைதல் – தங்கியிருத்தல். இழுக்கு – குற்றம். செங்கை – செம்மை + கை ; செங்கைவளம் – சிவந்த கையின் வண்மை பெற்ற ; அஃதாவது சிறந்த கோடுகள் ஏறப்பெற்ற சிவந்த கைகளையுடைய. 'இளவரசு'என்றது இந்திரசேனனை. வளவரசு – வளமை + அரசு. இளவரசு– இளமை + அரசு.

5. மாற்றம் – சொல். அடுமடையா – சமையல் தொழில் புரிபவனே ! எஞ்சாது – குறையாது. சிறு தொழிலாய்– தேரோட்டுந் தொழிலை உடையவனே ! கண்டாய்– முன்னிலை அசை.

6. மடையர் – சமையல்காரர். அறிவரோ – ஓகாரம் எதிர்மறை. உன்னை அறியாது – உன் பெருமை தெரியாமல். முனிந்தருளல் – கோபித்தல் வேண்டா ; அல்ஈற்று வியங் கோள் வினைமுற்று.

7. கொற்றக்குமரன் – வெற்றி பொருந்திய இந்திர சேனன். கோதை – இந்திரசேனை. முற்றும் – முழுமையும். அம்மாற்றம் – அந்த மொழியை. அழிந்தாள் – நெஞ்சு சோர்வடைந்தாள்.

8. இத்திருநகர் – இந்தக் குண்டினபுரம். மன்னவன்– இருதுபர்ணன். தனித்தேர் – ஒப்பற்ற தேர். மற்று– இடைச்சொல். குறித்து – எண்ணித் துணிந்து.

9. செவ்வாய் – செம்மை + வாய் ; நடுவு நிலைமை யுடையவாய். ஒவ்வாது – பொருந்தாமல். எவ்வாயும்– எல்லாவழியிலும். நுணங்கியது – நுனித்து அறியத்தக்கது. மதித்து – ஆராய்ந்து. தெளிந்தான் – துணிந்தான்.

10. பூகம் – பாக்குமரம். உரு – வடிவம். பணம்– படம்.

11. அரவு அரசன் – கார்க்கோடகன். அம் – அழகிய. துகில் – ஆடை. வாங்கி – எடுத்து. கலி – சனி. வஞ்சனை– சூழ்ச்சி. பூண்டு – மேற்கொண்டு. அளிக்கும் – உயிர்களைக் காப்பாற்றும். கோ – அரசு. தாயம் – உரிமை.

12. மிக்கோன் – வானவர் யாவரிலும் மேம்பட்ட வனான நாராயணனுடைய. மெய் அடியே – நிலையான திருவடிகளே. சார்வு – தஞ்சம்: புக்கோர் – சரண் அடைந் தவர்களுடைய. அக்காலம் – நளன் கார்க்கோடகன் என்னும் பாம்பு கொடுத்த ஆடையை அணிந்தபொழுது. கரந்து – மறைந்து. உறையும் – வசிக்கும். மான் அகம் தேர் – குதிரைகளைத் தன்னிடத்தேயுடைய தேர். மான்+ அகம்+தேர் எனவும். மால்+நகம்+தேர் எனவும் பிரிக்க லாம். மால் நகம் தேர் – பெருமையாகிய மலையையொத்த தேர்.

13. உன்னை – உன் சிறப்பை. ஒன்றும் – கொஞ்சமும். உணராது – அறியாது. எலாம் – எல்லாம். பொன் அமரும் தாராய் – பொன் பொருந்திய மாலையை உடைய நளனே. பொறுக்கென்று – பொறுக்க + என்று: அகரம் தொகுத்தல் விகாரம். மேல் நீர்மை – மேன்மையாகிய தன்மை. குன்று– குன்றி. மிசைக் கொண்டான் – ஏறினன். மால் – பெருமை. மன் – மன்னன் இருதுபர்ணன்.

14. தானை – சேனை. முற்று–பருவம் நிறைந்த மா நீர்– மிகுதியாகிய நீர்; அல்லது பெருமையாகிய தன்மையை யுடைய. முற்ரும்பல் – முற்று+ஆம்பல்.

15. ஏனை நெறி – இனிக் கடக்கவேண்டிய வழி.

16. கங்குல் – இரவு. இகல் – பகை. எறி – அலை வீசுகிற. செய் – நிலம். இருக்குமா – இருக்குமாறு: 'ஆறு' என்பது கடைக்குறைந்தது. இச்செய்யுள் தற்குறிப் பேற்ற வணியாகும். செருக்கும் – களிக்கின்ற. மான்– குதிரை. வெய்யோன் – கதிரவன்.

17. மன்றல் – மணம். கோதை – தமயந்தி. பூவிந்தை – தாமரை மலரில் வீற்றிருக்கின்ற இலக்குமி. பொழில் – சோலை.

18. அவனுக்கு – புட்கரனுக்கு ; செய்யுளில் சுட்டு முன் வந்தது. உற்ற – பொருந்திய. பணயம் – பந்தயப் பொருள். கொற்றவனை – புட்கரனை. குலம் – சிறப்பு. தண் – குளிர்ச்சி. தெரியல் – மாலை. தேர் வேந்தன் – நளன்.

19. மாயம் – வஞ்சனை. வஞ்சித்த – எல்லாப் பொருள்களையும் சூழ்ச்சியால் அடைந்த. வல்நெஞ்சன் – கடினமான மனம் படைத்த புட்கரன். ஆய – பெருமையாகிய. பெடை நடையாள் – பெண் அன்னம் போன்ற நடையை உடைய தமயந்தி. இருந்தானை – வினையாலணையும் பெயர்.

20. செங்கோல் – செம்மை + கோல். தேர்ச்சி இலா – ஆராய்ச்சி அறிவு இல்லாத. வெங்கோல் – கொடுங்கோல். வினவினன் – கேட்டான். அம் – அழகிய. கோலம் – அழகு.

21. ஓராதே – உணராமலேயே. மை – கருமை. ஆழி – கடல். துயிலும் – கண் வளரும். மால் – திருமால். வண்மை புனை – கொடையை அணியாகக் கொண்ட. ஆழி – மோதிரம். கழித்து – கழற்றி.

22. அருகிருந்தார் – பக்கத்தில் இருந்த அரசர்கள் மதிக்க – கொண்டாட. செப்பரிய – செப்ப + அரிய ; சொல்லுதற்கு அருமையான. வென்றானை – புட்கரனை ; வினையாலணையும் பெயர்.

23. ஒழிய – நீங்க. வழிக்கொண்டான் – திரும்பிச் சென்றான். செந்தமிழோர் – புலவர், நா வேய்ந்த – நாவினால் தொடுத்த. போற்றிசைக்கும் – துதிக்கும்.

24. புடை – பக்கம். ஆன புகழ். புகழ் பெற்ற. பொன்னகரம் – சுவர்க்கம். புரந்தரன் – இந்திரன். பொலிந்து – விளங்கி. நன் நகரம் – மாவிந்த நகரம்.

25. கார் – மேகம். பெற்ற – காணப்பெற்ற. தோகையோ – மயிலோ. வாள் – ஒளி, நிறைபுலமோ – விளைவு நிறைந்த வயலோ. பார் – பூமியை ; நிடத நாட்டை. எதிர் – ஒப்பு.

## வினாக்கள்

1. 'யார் மக்கள்' எனக் கேட்ட மன்னற்கு மக்கள் கூறிய பதில்யாது?

2. இளவரசை நோக்கி அரசன் வினவியது என்ன? அதற்கு மக்கள் கூறிய விடையாது?

3. 'மன்னர் பெருமை மடையர் அறிவரோ ?' பொருளும் இடமும் கூறுக.

4. தமயந்தி துணிந்துரைத்த மொழிகள் யாவை?

5. வீமன் நளனை நோக்கிக் கூறியது என்ன ?

6. பாகன் வடிவு நீங்கினமைக்கு ஆசிரியர் காட்டும் உவமை யாது ?

7. கதிரவன் தோற்றத்தைக் கவி எவ்வாறு கற்பனை செய்துள்ளார் ?

8. புட்கரனின் குண நலன்களைக் கூறுக.

## பயிற்சி

பொருள் எழுதுக: வன்மம், கான், வள்ளம், கொற்றம், மடைத்தொழில், நுணங்கிய, பை, பணம், துகில், கோ, தாயம், கரந்து, மான், நீர்மை, ஆம்பல், தானவர், வை.

எதிர்ச் சொற்கள் வரைக: இங்கண், குமரன், கரந்து, கங்குல், செங்கோலரசன்.

இடஞ் சுட்டுக: 'இங்கணுறைதலிழுக்கன்றே', மன்னர் பெருமை மடையர் அறிவாரோ'.

பிரித்துக் காட்டுக: இழுக்கன்றே, மற்றவன்றானுங்குரைத்த, பைந்தலை, அரவரசன், மேனீர்மை, முற்றும்பல், மையாழியிற்றுயிலும்.

சேர்த்து எழுதுக: ஆங்கு + அவர், மன்னவன் + கு, பொறுக்க + என்று, வில் + தானை, மற்று + அவனுக்கு + என், வன்மை + நெஞ்சன், வாள் + முகம்.

# 3. அரிச்சந்திர புராணம்

## (மயான காண்டம்)

அரிச்சந்திரனின் பழைய வரலாற்றைக் கூறும் நூல் அரிச்சந்திர புராணமாகும். இது பத்துக் காண்டங்களை யுடையது. இந்நூலின் ஆசிரியர், நல்லூர் வீரன் ஆசு கவிராயர் எனப்படுவார். இவர் சேது நாட்டைச் சேர்ந்த நல்லூரிற் பிறந்தவர். இவர் சைவ சமயத்தவர். காலம்—கி. பி. 16-ஆம் நூற்ருண்டு.



### அரிச்சந்திரன் சந்திரமதியை அழைத்துக்கொண்டு நகர்ப்புறம் அடைதல்

'என்ன பாதகம் செய்தனம்'
எனஇறை நகைத்துக்
கன்னி கைகளைக் கட்டிய
கயிறுதான் பிடித்துத்
துன்னு மாமணித் தோரண
வாயிலைக் கடந்து
பொன்னின் மாநகர்ப் புரிசையின்
புறத்துவந் திருத்தான். 1

### கௌசிகன், அரிச்சந்திரனுக்குக் கூறுதல்

அந்த வேளையில் கவுசிகன்
விரைந்துவந் 'தரசே,
இந்த நோதக வெய்தல்என்?
எனக்குநீ முன்னம்
தந்த நாடி" யான் தந்திலேன்"
எனுமொழி சாற்றி
உந்தம் நாடும்இவ் வுயிர்களும்
பெறு'கென உரைத்தான். 2

## அரிச்சந்திரனும் சந்திரமதியும் கௌசிகனுக்கு எதிருரைத்தல்

'சேய்மை அண்மையில் உயிர்க்கொரு
துணை எனச் சிறந்த
வாய்மை யாலகம் தூய்மையாம் :
மற்றிலை ; புறத்தைத்
தூய்மை செய்வது நீரலால்
சொல்லின்வே றுளதோ ?
நோய்மை செய்யினும் வாய்மையே
நோன்பெமக் கறிதி.' 3

'புலைய னும்விரும் பாதஇப்
புன்புலால் யாக்கை
நிலையெ னுமருண் டுயிரினும்
நெடிதுறச் சிறந்தே
தலைமை சேர்தரு சத்தியம்
பிறழ்வது தரியேம் ;
கலையு ணர்ந்தநீ எமக்கிது
கழறுவ தழகோ ?' 4

'இம்மை அம்மைவீ டெனமறை
புலங்கொள இயம்பும்
மும்மை யும்தரும் முறையுடைத்
தெனும்நிலை முரணி,
எம்மை ஆழ்வயிற் றடக்கி,நீ
டுமிழ்கலா எரிவாய்
வெம்மை கூர்நர குய்க்கினும்
மெய்ம்மையை விடேமால்.' 5

'பதியி ழந்தனம்; பாலனை
இழந்தனம்; படைத்த
நிதியி ழந்தனம்; "இனிநமக்
குள"தென நினைக்குங்
கதியி ழக்கினும் கட்டுரை
இழக்கிலேம்' என்றார்.
மதியிழந்துதன் வாயிழந்
தருந்தவன் மறைந்தான். 6

அரிச்சந்திரன் சந்திரமதியிடம் கூறுதலும்
அவள் அவனை வேண்டுதலும்

'வழக்கின் என்றும்நீ வழிபடு
கடவுளை வணங்கிக்
கிழக்கு நோக்கியீண் டிரு'எனக்
கிளிமொழி மடந்தை
பழக்க மானவக் கணவனைப்
பரவி, 'என் ஆவி
இழக்கற் கஞ்சிநீ அறம்வழு
வேல்' என இயம்பும், 7

'பொருந்தும் நீத்தத்தில் புற்புத
வாழ்வைநீ மெய்யென்
றருந்த வத்தையும் அறத்தையும்
மெய்யையும் விடுத்து
வருந்தல் மன்னவ! வழிவழி
சிறக்'கென வாழ்த்தி
இருந்தபின், சுடர் வாட்படை
வலக்கையின் எடுத்தான். 8

அரிச்சந்திரன் சொல்லுதல்

உலகு யிர்க்கெலாம் பசுபதி
ஒருமுதல் ஆயின்,
அலகில் சீருடை அவன்மொழி
மறையெனின், அதன்கண்
இலக நம்பல வற்றினும்
வாய்மையீ டிலதேல்,
விலகு றுமலவ் வாய்மையை
விரதமாக் கொளின்யான், 9

நெறியின் அன்னஎன் றனேவிடா
நிறைஇவட் குளதேல்
இறுதி யின்மையைப் பெறுக ;அன்
றெனின், இவள் இறுதி
பெறுக ' என்றுவாள் வீசினன்
பேதைதன் கழுத்தில்
மறும ணத்திடு மாலேயாய்
வீழ்ந்ததவ் வடிவாள். 10

—நல்லூர் வீர கவிராயர்

அருஞ்சொற்பொருள்

1. பாதகம் - தீவினே. இறை - அரிச்சந்திரன். கன்னி - பெண், சந்திரமதி. துன்னும் - நெருங்கிய. புரிசை - மதில். இறுத்தான் - தங்கினுன்.

2. நோதகவு - துன்பம். நாடு + யான் = நாடியான் ; குற்றியலிகரம். இவ்வுயிர்கள் என்றது தேவதாசன், காசி ராசன் மகன் ஆகிய இருவர் உயிர்களேயும்.

3. சேய்மை - தொலேவு. அண்மை - பக்கம். சேய்மை முன் பிறப்பினேயும், அண்மை இப்பிறப்பினேயும் குறிக்கும்.

அகம் – மனம். புறம் – உடல். நோய்மை – துன்பம். நோன்பு – விரதம்.

4. புலையனும், உம்மை இழிவு சிறப்பு. புன்புலால்– பண்புத்தொகை. மருண்டு – மயங்கி. உயிரினும் – உம்மை உயர்வு சிறப்பு. கலை – நூல். கழறுவது – சொல்லுவது.

5. இம்மை – இப்பிறப்பு. அம்மை – அப்பிறப்பு; வரும் பிறப்பு. புலம் – அறிவு. மும்மை – மூன்று. முரணி– மாறுபட்டு. நீடு – நெடுங்காலம் வரை. உமிழ்கலா– வெளிவிடாத. வெம்மை – வெப்பம், கூர் – மிக்க ; உரிச்சொல். உய்க்கினும் – செலுத்தினும். விடு+ஏம்=விடேம். தன்மைப் பன்மை வினைமுற்று.

6. பதி – அயோத்திமா நகர் ; ஊர். பாலன் – தேவதாசன். நிதி – அரசச் செல்வம். கதி – வீட்டுலகம். கட்டுரை – உறுதிமொழி ; உண்மை. வாய் – சொல்வன்மை ; ஆகுபெயர். அருந்தவன்–கௌசிகன்.

7. வழக்கின் – வழக்கமாய். ஈண்டு – இங்கு ; செய்யுளில் சுட்டு நீண்டது. கிளிமொழி மடந்தை – சந்திரமதி; உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. ஆவி – உயிர். வழுவேல் – தவறேல் ; முன்னிலை ஏவல் வினைமுற்று. இயம்பும் – சொல்லுவாள்.

8. நீத்தம் – வெள்ளம். புற்புதம் – குமிழி. 'நீரிற் குமிழி இளமை'—குமரகுருபரர். வருந்தல் – வருந்தாதே. சிறக்க + என = சிறக்கென ; அகரம் தொகுத்தல் விகாரம். வாட்படை – வாளாயுதம். கையின் – கையால். உருபு மயக்கம்.

9. பசுபதி – இறைவன். அலகு + இல் = அலகில்– அளவு இல்லாத, ஒருமுதல் – ஒப்பற்ற முதற்கடவுள். இலகு – விளங்குகின்ற. ஈடு – ஒப்பு. விலகுருமல் – விடாமல். விரதம் – நோன்பு. கொளின் – கொண்டால்.

10. நிறை – கற்பு. இவள் + கு + உளது + ஏல் + இவட்குளதேல், இறுதியின்மை – சாவு இல்லாமை. பேதை–

சந்திரமதி. வடிவாள் – உரிச்சொற்றொடர். வடிவாள் மாலையாய் விழுந்தது என்க.

## வினாக்கள்

1. அரிச்சந்திரன் சந்திரமதியை அழைத்துச் சென்ற பொழுது கௌசிக முனிவர் அவனிடம் கூறியது என்ன ?

2. அகமும் புறமும் தூய்மையாவது எதனால்?

3. உடலின் இழிவும் உண்மையின் உயர்வும் யாவை?

4. மும்மையும் தரும் முறையுடைத்து எது ?

5. அரிச்சந்திரனும் சந்திரமதியும் எவற்றை இழந்தனர் ? எதை இழக்கிலர் ?

6. சந்திரமதி அரிச்சந்திரனுக்குக் கூறியதென்ன ?

7. அரிச்சந்திரன் வாளை வீசும்பொழுது என்ன கூறினான்?

8. மன்னன் வீசிய வாள் சந்திரமதியின் கழுத்தில் எவ்வாறு விளங்கிற்று.

## பயிற்சி

பொருள் எழுதுக :—புரிசை, யாக்கை, தரியேம், பதி, நிதி, கதி, மதி, பரவி, வடி.

இடங்கூறி விளக்குக :— “யான் தந்திலேன்”, “கதி யிழக்கினும் கட்டுரை இழக்கிலேம்”.

பிரித்துக் காட்டுக :–நாடியான், பெறுகென, இலகறம்பல.

சேர்த்து எழுதுக :—நெடிது + உற, எமக்கு + இது, வயிறு+அடக்கி, ஈடு+இலது+ஏல்.

எதிர்ச்சொல் தருக :—சேய்மை, அகம், வெம்மை.

# 4. பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணம்

## விறகு விற்ற படலம்

திருவிளையாடற் புராணம் :—பாண்டிய நாட்டில் மதுரை மாநகரில் கோயில் கொண்டருளிய சோமசுந்தரக் கடவுள் செய்தருளிய அறுபத்து நான்கு திருவிளையாடல்களைக்கூறும் பழைய வரலாற்று நூல் என்பது பொருள். இந்நூல் காண்டம் என்னும் பெரும் பிரிவையும் படலம் என்னும் சிறு பிரிவையும் கொண்டுள்ளது.

நூலாசிரியர் பரஞ்சோதி முனிவர். சோழ நாட்டில் வேதாரணியம் என்னும் திருமறைக் காட்டில் பிறந்தவர். தந்தை : மீனுட்சிசுந்தர தேசிகர். சமயம் : சைவம். இயற்றிய வேறு நூல்கள் : வேதாரணிய புராணம், போற்றிக் கலிவெண்பா என்பன. காலம் : 17-ஆம் நூற்ருண்டு.

மன்றலந் தெரியல் மார்பன்
வரகுணன் செங்கோ லோச்சிப்
பொன்றலங் காவ லானிற்
பொலியுநாள், ஏமநாதன்
என்ருெரு விறல்யாழ்ப் பாணன்
வடபுலத் திருந்தும் போந்து
வென்றிகொள் விருதி னேடும்
விஞ்சைசூழ் மதுரை சார்ந்தான். 1

பூழியர் பெருமான் கோயில்
புகுந்துவேத் தவையத் தெய்திச்
சூழிமால் யானை யானைத்
தொழுதுபல் புகழ்கொண் டாடி
ஏழிசை மழலை வீணை
யிடந்தழீஇச் சுருதி கூட்டி
வாழியின் னிசைத்தேன் மன்னன்
அஞ்செவி வழியப் பெய்தான். 2

மீனவன் வரிசை பெற்ற
செருக்கினும் விருதி னனு
மானமேல் கொண்டு தன்னே
டின்னிசை பாட வல்ல
தானயாழ்ப் புலவர் வேறிங்
கில்லெனத் தருக்குஞ் செய்தி
கோனறிந் துழையர் கூவிப்
"பத்திரற் கொணர்திர்" என்ருன். 3

உழையரால் விடுக்கப் பட்ட
பத்திரன் உவரி வென்ருேன்
கழல்பணிந் தருகு நிற்பக்
கௌரியன் நோக்கிப் "பாணி
பழகிசை வல்லா னேடும்
பாடுதி கொல்லோ" என்ன
மழலையா ழிடந்தோ ளிட்ட
பாணர்கோன் வணங்கிச் சொல்வான். 4

[பாணபத்திரன் ஏமநாதனை வெல்லுவதாகப் பாண்டியனிடம் கூறியபின் தன் சிறுமைக்கு வருந்திச் சோமசுந்தரக் கடவுளை வணங்குதல்.]

"தென்னவர் பெரும! யானுன்
திருவுள வலனுங் கூடன்
முன்னவன் அருளும் ஊட்டு
முயற்சியான் முயன்று பாடி
அன்னவன் விருது வாங்கி
யவனைவீ றழிப்பன்" என்ருன்.
மன்னவன் "நாளைப் பாடு
போ"கென வரைந்து சொன்னன். 5

மையணி மிடற்றி ஞனை
மதுரைநா யகனை வந்தித்(து)
"ஐயனே! அடியேற் கின்றுன்
அருட்டுணை செய்யல் வேண்டும்!
மெய்யனே!" என்று போற்றி
வேண்டுகொண் டன்பு தோய்ந்த
பொய்யறு மனத்தான் இல்லம்
புக்கினி திருந்தா னிப்பால். 6

[பத்திரன் வேண்டுகோட்கு இரங்கிய சோமசுந்தரர் விறகு ஆளாய் வேடங்கொண்டு அருவிலை கூறி, மாலை ஏமநாதன் இல்லம் சேர்தல்.]

வேறு

வருத்த ஞகிவந் திரந்தவன்
இசைப்பகை மாற்ற
விருத்த னும்விற காளென
விண்ணிழி விமானத்
தொருத்த னரறி வாகிய
வுண்மையா னந்தத்
திருத்த னர்தம திச்சையாற்
றிருவுருக் கொள்வார். 7

அழுக்கு மூழ்கிய சிதரசைத்
தவிர்சடை யமுதம்
ஒழுக்கு வெண்மதி வாங்கியே
செருகிய தொப்ப
மழுக்கு கூனல்வெள் வாய்க்குயம்
வலம்படச் செருகி
இழுக்கு தேய்செருப் பருமறை
கடந்ததாள் ஏற்றி. 8

தறிந்த விந்தனந் தினந்தொறுந்
தாங்கிநீள் பங்கி
பறிந்து தேய்ந்தழுந் தியதலை
யுடையராய்ப் பரிந்து
மறிந்த கங்கையும் பங்குறை
மங்கையுங் காணு
தெறிந்த விந்தனச் சுமைதிரு
முடியின்மே லேற்றி. 9

நடந்து கொள்ளுநர்க் கருவிலை
பகர்ந்துநான் மாட
மிடைந்த வீதியுங் கவலையு
முடுக்கரு மிடைந்து
தொடர்ந்த வேதமும் பிரமன்மால்
சூழ்ச்சியும் பகலுங்
கடந்து போகியவ் விசைவலான்
கடைத்தலைச் செல்வார். 10

[ஏமநாதன் விறகாளைப் பாடுமாறு கூற, அவன் சாதாரிப் பண்ணைப் பாட, உயிர்த் தொகுதிகள் அனைத்தும் அவ்விசையைக் கேட்டு மயங்க, ஏமநாதன் பாணபத்திரன் திறமையை வியத்தல்.]

எடுத்த விந்தனம் ஒருபுறத்
திறக்கியிட் டூன்றி
அடுத்த வன்புறந் திண்ணைமீ
தமர்ந்திளைப் பாறித்
தொடுத்த வின்னிசை சிறிதெழீஇப்
பாடினுர் சுருதி
மடுத்தி யாரவன் பாடுவா
னென்றிசை வல்லான். 11

வேறு

வண்டறை கொன்றை யான்முன்
வந்து 'நீயாரை ?' யென்றான்
'பண்டரு விபஞ்சி பாண
பத்திர னடிமை' யென்றான்
முண்டக மலரோன் மாயோன்
புரந்தரன் முதன்மற் றேனை
அண்டருந் தன்குற் றேவ
லடிமையாக் கொண்ட வம்மான். 12

"கனியிசைக் கிழவன் றன்கீழ்க்
கற்பவ ரனேகர் தம்முள்
நனியிசைக் கிழமை வேட்டு
நானுமவ் வினைஞ ஞானேன்
தனியிசைக் கிழவ னேக்கித்
'தசையெலா மொடுங்க மூத்தாய்
இனியிசைக் கிழமைக் காகாய்'
என்றெனைத் தள்ளி விட்டான். 13

"வெவ்விற கெறிந்து கட்டி
விலைபகர்ந் தேனு மைய!
இவ்வயி றோம்பு கேனென்
றித்தொழில் பூண்டேன்" என்ன
நைவளந் தெரிந்த ஏம
நாதனும் "விறகு மள்ளா!
அவ்விசை யொருகா லின்னும்
பா"டென ஐயன் பாடும். 14

இசைவாணர்க்கு ஏற்படும் குற்றங்கள்

வயிறது குழிய வாங்க
லழுமுகங் காட்டல் வாங்குஞ்
செயிரறு புருவ மேறல்
சிரநடுக் குறல்கண் ணாடல்
பயிறரு மிடறு வீங்கல்
பையென வாயங் காத்தல்
எயிறது காட்டல் இன்ன
வுட்ற்றொழிற் குற்ற மென்ப. 15

பொருந்தமந் தரத்தி னோடு
மத்திமந் தாரம் போக்கித்
திருந்திய துள்ளல் தூங்கல்
மெலிவது சிறப்பச் செய்து
மருந்தன செய்யு ளோசை
யிசையோசை வழாமல் யார்க்கும்
விருந்தெனச் செவியின் மாந்தப்
பாடினார் வேத கீதர். 16

வாழிய வுலகின் வானோர்
மனிதர்புள் விலங்கு மற்றும்
ஆழிய கரண மெல்லா
மசைவற வடங்க வையன்
ஏழிசை மயமே யாகி
யிருந்தன வுணர்ந்தோ ருள்ளம்
ஊழியி லொருவன் றாள்புக்
கொடுங்கிய தன்மை யொத்த. 17

[ஏமநாதன், பத்திரனை வெல்ல இயலாதென்று அஞ்சினான்; அவனைச் சேர்ந்தோர் அனைவரும் சிதறி ஓடினர்;

நடு இரவில் பிறர் அறியாவாறு அவனும் ஓடத் தலைப்பட்டான்.]

வேறு

இழுக்கி விட்டவிக் கிழமகன்
இசையிதேல் அந்த
வழுக்கில் பத்திரன் பாடலெற்
ரேவென மதியா
அழுக்க முற்றெழுந் திசைவலா
னடுத்ததன் பண்டர்
குழுக்க ளுங்குலை குலைந்திட
இருள்வழிக் கொண்டான். 18

அன்று பத்திரன் கனவில்வந்
தாடலேற் றழகர்
“இன்று பத்திர! இசைவலா
னிடைவிற காளாய்ச்
சென்று பத்திரன் அடிமையா
மென்றுபாண் செய்து
வென்று பத்திரஞ் செய்துநின்
வேண்டுகோள்” என்றார். 19

[சோமசுந்தரர் பத்திரன் கனவில் வந்து தான் ஏமநாதனை வென்றதைக் கூறிய பின்னர் பத்திரன் இறைவன் எளிமையை நினைந்து வருந்தி வணங்கல்.]

“நாத வந்தமுங் கடந்தமெய்ஞ்
ஞானவா னந்த
போத மென்பரஃ தின்றொரு
புடவிமா னுடமாய்

ஆத பந்தெறத் தறிந்தவிந்
தனஞ்சுமந் தடியேன்
பேதை யன்பள வாயதோ
பெரும! நின் னுருவம்"? 20

என்ன வந்தனை செய்துநின்
றேத்தியங் கயற்கண்
மின்ன மர்ந்தபங் கொருவனை
வலங்கொடு மீண்டு
மன்னர் தம்பிரா னுகிய
வரகுண தேவன்
தன்னை வந்தடி பணிந்தனன்
தந்திரிக் கிழவோன். 21

[இசைப் போர் காணப் பாண்டியன் ஏமநாதனைத் தேட லும், அவன் காணப்படானுய்ப் போகவே பத்திரன் மூலம் இறைவன் திருவிளையாடலைக் கேட்டு வியத்தலும்.]

"நென்னல் வாயடி யேனின்
தாணிழ னீங்கிப்
பின்னல் வார்சடை மௌலியெம்
பிரானடி பணிந்தேன்
இன்ன லார்குறை யிரந்துமீண்
டிருக்கைபுக் கிருந்தேன்
கன்ன லார்மொழி பங்கரென்
கனவில்வந் தருளி. 22

"ஓடி யுன்பொருட் டாகநாம்
விறகெடுத் துழன்று
வாடி நின்பகைப் புறங்கடை
வந்துசா தாரி

பாடி வென்றுநின் பகைவனைத்
துரந்தனம், எனச்சொல்
லாடி ஞர்விழித் தேனிது
நிகழ்ந்த" தென் றறைந்தான். 23

ஏவன் மைந்தர்போய் விளங்கிவந்
திசைத்ததும் வீணைக்
காவ லன்கனு நிகழ்ச்சியு
மொத்தலிற் கைக்கும்
பூவ லங்கலா னிஃதுநம்
பொன்னகர்க் கூடல்
தேவர் தம்பிரான் திருவிளை
யாட்டெனத் தெளிந்தான். 24

—பரஞ்சோதி முனிவர்.

## அருஞ்சொற்பொருள்

1. மன்றல் - மணம். அம் - அழகிய. தெரியல் - மாலை. ஓச்சி - நடத்தி. பொன்தலம் காவலன் - இந்திரன். பொலிதல் - விளங்குதல். விறல் - வெற்றி. வடபுலம் - வடநாடு. விருது - வெற்றிச் சின்னம். விஞ்சை - கலை.

2. பூழியர் - பாண்டியர். கோயில் - அரண்மனை. வேத்தவையம் - வேந்து+அவையம். அவையம் - அம் : சாரியை. சூழி - முகபடாம். மால் - பெரிய. ஏழிசை - குரல், துத்தம். கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம். இதனைச் ச, ரி, க, ம, ப, த, நி என இக்காலத்தில் இசைப்பர். தழீஇ - தழுவிக்கொண்டு ; சொல்லிசை அளபெடை. சுருதி - இசை.

3. மீனவன் - பாண்டியன். வரிசை - சிறப்பு. மானம் - பெருமை. உழையர் - பக்கத்தவர். கொணர்திர் - முன்னிலை ஏவற் பன்மை வினைமுற்று.

4. உவரி - கடல். கழல் - திருவடி ; தானியாகுபெயர். கௌரியன் - பாண்டியன். பாண் - பாட்டு. பாடுதி - முன்னிலை ஏவல் ஒருமை வினைமுற்று. கொல், ஓ - அசை நிலைகள்.

5. தென்னவர் - பாண்டியர். வலன் - வலிமை. கூடல்- மதுரை. முன்னவன் - இறைவன். ஊட்டும் - சேர்க்கும். விருது - பட்டம். வீறு - தனிச் சிறப்பு. அழிப்பன் - தன்மை ஒருமை எதிர்கால வினைமுற்று.

6. மை - கருமை. மிடறு - கண்டம். வந்தித்து - வணங்கி. புக்கு - புகுந்து ; புகு – பகுதி, பகுதி இரட்டித்து இறந்த காலம் காட்டிற்று. இப்பால் - இதன் பிறகு.

7. இரந்தவன் – வேண்டிக் கொண்டவன். இசைப் பகை - ஏமநாதன் ; நான்காம் வேற்றுமைத் தொகை. விருத்தன் - வயதால் முதிர்ந்தவன். விண்ணிழி விமானம்- இந்திர விமானம் ; சோமசுந்தரர் கோயில் மூலத்தானத்தின்மேல் உள்ளது. உண்மை அறிவு ஆனந்தம் – சச்சிதானந்தம். திருத்தனுர் - தூய்மையானவர்.

8. சிதர் - கந்தை. அசைத்து - உடுத்தி. அவிர் - விளங்குகின்ற. ஒழுக்கு - ஒழுகும். வெண்மதி - பண்புத் தொகை. மழுக்கு - முனை மழுங்கிய. கூனல் - வளைவு. குயம் - அரிவாள். தேய் செருப்பு - வினைத்தொகை. தாள் - திருவடி.

9. தறிந்த - வெட்டிய. இந்தனம் - விறகு. பங்கி - தலைமயிர். பறிந்து - உதிர்ந்து. பரிந்து - இரக்கம் கொண்டு. மறிந்த - மடங்கிய. பங்கு - பாகம். மங்கை - உமாதேவி. எறிந்த - வெட்டிய.

10. கொள்ளுநர்க்கு - வாங்குபவர்க்கு. அருவிலை - தீராத விலை. பகர்ந்து - சொல்லி. மிடைந்த - செறிந்த. கவலை - பிரிவடையும் தெருக்கள். முடுக்கர் - சந்து ; போலி. மிடைந்து - நெருங்கி. தொடர்ந்த வேதம் - பெயரெச்சத்

தொடர். வலான் - வல்லான் ; இடைக்குறை. கடைத் தலை - தலைவாசல் ; இலக்கணப் போலி.

11. எடுத்த - தலையில் சுமந்து வந்த. அடுத்த - வந்து சேர்ந்த. வன்புறம் - வன்மை + புறம். தொடுத்த - தொடங்கிய். எழீஇ - எடுத்து ; சொல்லிசை அளபெடை. மடுத்து - காதிற் கேட்டு.

12. வண்டறை - வண்டு + அறை. அறை - முரலும். கொன்றை - சிவனுக்குரிய அடையாளப் பூ. யாரை - ஐ : சாரியை. விபஞ்சி - ஒருவகை யாழ். முண்டகம் - தாமரை. முண்டக மலரோன் - பிரமன். மாயோன் - திருமால். புரந்தரன் - இந்திரன். அண்டர் - தேவர். அம்மான்-இறைவன்.

13. கிழவன் - உரியவன். வேட்டு - விரும்பி.

14. வெவ்விறகு – வெம்மை + விறகு. பகர்ந்தேனும் – உம் : இழிவு சிறப்பு. ஓம்புகேன் - காப்பாற்றுவேன். நைவளம் - ஒருவகைப் பண். மள்ளா - வீரா ! பாடும் - செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று.

15. செயிரறு - குற்றமற்ற. மிடறு - கழுத்து. அங்காத்தல் - வரயைத் திறத்தல். எயிறு - பல்.

16. பாணர் தம்பிரான் - பாணபத்திரன். காப்பான் - வினையெச்சம். யாணரம்பு - யாழ் + நரம்பு. பருந்தும் நிழலும் ஒன்ருகவே செல்லுதல் போல யாழோசையுடன் பாட்டோசையும் ஒன்ருகவே அமைந்தது. அண்டவாணர்- வானவர். கால் - வழி. யாணர். புதுமை.

17. ஆழிய - கடல் இடத்துள்ளன. கரணம் - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள். அசைவற - அசைவு + அற. அடங்க - முற்றிலும்.

18. இழுக்கிவிட்ட - விலக்கிவிட்ட. வழுக்கில் – வழுக்கு + இல் : குற்றம் இல்லாத. மதியா - மதித்து ; செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். அழுக்கம்-

அச்சம். பண்டர் - வேலை செய்வோர். குழு - கூட்டம். குலை குலைந்திட - நடுநடுங்கிட.

19. இடை - ஏழாம் வேற்றுமை உருபு. பாண் செய்து - பாட்டு இசைத்து. பத்திரம் - பாதுகாப்பு.

20. நாதம் - இசை. அந்தம் - இறுதி. புடவி - பூமி. ஆதபம் - வெயில். தெற - வருத்த. தறிந்த - வெட்டிய. இந்தனம் - விறகு. பேதை - அறிவிலி.

21. வந்தனை செய்து - வழிபாடு ஆற்றி. ஏத்தி - துதித்து. அங்கயற்கண் - மீனாட்சியம்மை. மின் - மின்னல். தந்திரி - யாழ். கிழவோன் - உரியவன்.

22. நென்னல் - நேற்று. தாணிழல் - தாள்+நிழல். மௌலி - முடி. இன்னலார் - துன்புற்றவர். மீண்டிருக்கை புக்கிருந்தேன் - மீண்டு இருக்கை + புக்கு + இருந்தேன். கன்னல் - கரும்பு. பங்கர் - பாகத்தார்.

23. உழன்று - வருந்தி. புறங்கடை - வாசல். சாதாரி- ஒருவகைப் பண். துரந்தனம் - ஓட்டினோம். சொல்லாடினார் - சொன்னார். அறைந்தான் - கூறினான்.

24. ஏவல் மைந்தர் - பணியாளர்கள். இசைத்ததும் - சொன்னதும். வீணைக்காவலன் - பாணபத்திரன். கனா- கனவு. அலங்கல் - மாலை. தம்பிரான் - தலைவன்.

### வினாக்கள்

1. 'பத்திரர் கொணர்திர்'—இடங்கூறி விளக்குக.

2. உவரி வென்றோன் யார்? வரலாறு கூறுக.

3. பாடுதி கொல்லோ? என்ற மன்னனுக்குப் பாணபத்திரன் கூறிய விடை என்ன?

4. சோமசுந்தரர் விறகு ஆளாக வந்த தோற்றத்தை எழுதுக.

5. 'நீ யார்?' என்ற ஏமநாதனுக்கு விறகுமள்ளன் கூறியது என்ன?

6. இசையாளர்க்கு ஏற்படுங் குற்றங்கள் யாவை?

7. இறைவன் பத்திரன் கனவில் பகர்ந்தது என்ன?

பயிற்சி

1. பொருள் எழுதுக:—மன்றல், விருது, விஞ்சை, ஆழியர், ஏழிசை, உவரி, சிதர், இந்தனம், விபஞ்சி, முண்டகம்.

2. எதிர்ச்சொற் கூறுக:—செங்கோல், காணுது, அரு விலை, ஆகாய், நென்னல், மௌலி, கனு.

3. உவமைகளை விளக்குக:—'கூனல்வெள்வாய்க்குயம்' 'பருந்தொடு நிழல்போக் கென்ன'.

4. பிரித்துக் காட்டுக:—வடபுலம், வேத்தவை, போகென, நான்மாடம், வன்புறம், யாணரம்பு, அசைவற.

5. சேர்த்து எழுதுக:—அடியேற்கு - இன்று + உன், விறகு + ஆள் + என, பண் + தரு, வெம்மை + விறகு, செயிர் + அறு.

6. சிறு குறிப்பு வரைக:—உவரிவென்றேன், கூடல்.

7. சிந்தனைக்கு:—இக்கதையை இருபது வரிகளில் சுருக்கி எழுதுக.

## 5. ஆசிய ஜோதி

ஆசியஜோதி—ஆசியாக் கண்டத்தின் பேரொளி, புத்தர். இவரது வரலாற்றைத் தமிழில் கூறும் இந் நூலுக்கு ஆசியஜோதி என்று பெயர். எட்வின் ஆர்னல்டு என்பவர், லைட் ஆப் ஆசியா (Light of Asia) என்று ஆங் கிலத்தில் ஒரு நூல் எழுதினர். அதைத் தழுவி இந்நூல் எழுதப்பட்டது.

### புத்தரும் ஏழைச் சிறுவனும்

[அரண்மனையிலிருந்து வெளிப்பட்டுச் சென்ற புத்தர் வழி நடந்த களைப்பால் சோர்ந்து கிடந்தார். அவரைக்

கண்ட ஓர் இடைச்சிறுவன், தான் தாழ்ந்த குலத்தினனாதல் பற்றித் தன் கலயத்தில் பால் கறந்து அவருக்குக் கொடுக்கத் தயங்கினான். பிறப்பினால் உயர்வு தாழ்வுகள் பாராட்டலாகாது என்று புத்தர் அவனுக்குப் போதித்த வரலாறு இதனால் கூறப்படுகிறது.]

### புத்தர் மயங்கி வீழ்தல்

புண்ணிய மூர்த்தி புத்தமா முனிவன்
உண்மையை உணர்ந்துஇவ் வுலகினில் என்றும்
அழியா இன்பம் அடையும் அவாவினால்
மன்னர் வாழ்வையும் மறுத்தவ னாகித்
தந்தையை மறந்து தனயனைத் துறந்து
மங்கை யசோதரை மதிமுகம் நீத்து
நள்ளிர வதனில் நன்னகர் நீங்கி
உண்ணும் உணவும் உறக்கமும் இன்றி
இரவும் பகலும் இடைவிடாது எங்கும்
நடந்து மெலிந்து நலிவுற்று ஒருநாள்
வேனில் வெயிலில் வெந்தெரி கானலில்
கைகால் தளர்ந்து கண்களும் மூடி
மூச்சும் அடங்கி முகமும் வெளிறி
உயிரும் உடம்பில் ஊச லாட
விஞ்சிய மயக்கால் வீழ்ந்து கிடந்தனன்.

### சிறுவன் காணுதல்

வேறு

ஆடுகள் மேய்த்துவரும்—ஒருவன்
ஆயர் குலச்சிறுவன்,
வாடிக் கிடந்தவனைச்—செல்லும்
வழியின் மீதுகண்டான். 2

### அவன் செயல்

வையகம் வாழ்ந்திடவே—பிறந்த
மாதவச் செல்வன்முகம்
வெய்யிலில் வெந்திடாமல்—தழைகள்
வெட்டி அருகில் நட்டான். 3

தெய்வ குலத்திவனை—எளியேன்
தீண்டலும் ஆகாதினிச்
செய்வதும் யாதெனவே—சிறிது
சிந்தை தயங்கிநின்றான். 4

உள்ளந் தெளிந்துடனே—வெள்ளாடு
ஒன்றை அழைத்துவந்து,
வள்ளல் மயக்கொழிய—மடுவை
வாயில் கறந்துவிட்டான். 5

### புத்தர் எழுந்து பால் கேட்டல்

நிலத்திற் கிடந்த ஐயன்—மெல்ல
நிமிர்ந்து தலைதூக்கிக்
"கலத்தினி லேகொஞ்சம்—பாலைக்
கறந்து தருவாய்" என்றான். 6

### சிறுவன் மறுத்தல்

"ஐயையோ! ஆகாது" என்றான்—சிறுவன்
"அண்ணலே! யானும்உனைக்
கையினால் தீண்டவொண்ணா இடையன் ஓர்
காட்டு மனிதன்" என்றான். 7

புத்தர் அறிவுறுத்தல்

உலகம் புகழ்பெரியோன்—இந்த
உரையினைக்கேட்டு அந்நாள்
அலகில் கருணையினால்—சொன்ன
அமுத மொழிஇதுவாம். 8

“இடர் வரும்போதும்—உள்ளம்
இரங்கிடும் போதும்
உடன் பிறந்தவர்போல்—மாந்தர்
உறவு கொள்வர் அப்பா! 9

ஓடும் உதிரத்தில்—வடிந்து
ஒழுகும் கண்ணீரில்,
தேடிப் பார்த்தாலும்—சாதி
தெரிவ துண்டோ அப்பா? 10

எவர் உடம்பினிலும்—சிவப்பே
இரத்த நிறமப்பா!
எவர் விழிநீர்க்கும்—உவர்ப்பே
இயற்கைக் குணமப்பா! 11

நெற்றியில் நீறும்—மார்பில்
நீண்ட பூணூலும்
பெற்றுஇவ் உலகுதனில்—எவரும்
பிறந்த துண்டோ அப்பா? 12

பிறப்பினால் எவர்க்கும்—உலகில்
பெருமை வாராதப்பா!
சிறப்பு வேண்டுமெனில்—நல்ல
செய்கை வேண்டும், அப்பா! 13

நன்மை செய்பவரே—உலகம்
நாடும் மேற்குலத்தார் ;
தின்மை செய்பவரே—அண்டித்
தீண்ட ஒண்ணாதார். 14

### சிறுவன் பால் தருதல்

நிலத் துயர்ஞானி—இவை
நிகழ்த்தி, "என் தம்பி !
கலத்தினிலே கொஞ்சம்—பாலைக்
கறந்துதா" என்றான். 15
ஆயர் சிறுவனும்—கலத்தில்
அளிக்க வாங்கியுண்டு,
தாயினும் இனியன்—கொண்ட
தளர்ச்சி நீங்கினனே. 16

—தேசிக விநாயகம் பிள்ளை

### அருஞ்சொற்பொருள்

அவா - விருப்பம். தனயன் - மகன். நலிவுற்று - வருந்தி. வேனில் - வெயிற்காலம். கானல் - பாலைநிலம். வெளிறி – வெளுத்து. விஞ்சிய - அளவுகடந்த. ஆயர் - இடையர். வாடி - இளைத்து. கிடந்தவன் - வினையாலணையும் பெயர். வையகம் - உலகம். மாதவச் செல்வன் – சிறந்த தவத்தினையுடைய புத்தர். மடு - பால் சுரக்கும் மடி. கலம்– பாண்டம். அலகில் - அளவில்லாத. உதிரம் - செந்நீர். நாடும் - தேடிவரும். தின்மை - தீமை. அண்டி - நெருங்கி. ஒண்ணாதார் - கூடாதவர். அளிக்க - கொடுக்க.

### வினாக்கள்

1. வெயிலில் கிடந்த புத்தருக்குச் சிறுவன் புரிந்த முதலுதவி யாது ?

2. மயக்கந் தெளிந்த புத்தர் சிறுவனை நோக்கி என்ன கேட்டார்? அதற்குச் சிறுவன் கூறியது என்ன?

3. இடைச்சிறுவனுக்குப் புத்தர் அறிவுறுத்தியது என்ன?

பயிற்சி

1. பொருள் எழுதுக:—ஆயர், வையகம், அண்ணல், அலகு.

2. எதிர்ச்சொற்கள் வரைக:—கண்டான், அருகில், இயற்கை, நீண்ட, நன்மை, அண்டி, இனியன்,

3. பிரித்துக் காட்டுக:—குலத்திவனை, யாதென, வெள்ளாடு.

4. சேர்த்து எழுதுக:—தெளிந்து+உடனே+, மயக்கு+ஒழிய.

5. சிந்தனைக்கு:—சாதியில்லை என்பதற்குப் புத்தர் கூறும் காரணங்களன்றி வேறு சில மேற்கோள்கள் தருக.

## 6. அன்பின் வெற்றி

மலரும் மாலையும் என்ற நூலின் இலக்கியப் பகுதியில் 'அன்பின் வெற்றி'யுள்ளது. தமிழக ஆண்டாள் வரலாற்றைப் போலவே வடநாட்டிலே மீராபாய் என்னும் அம்மையாரின் வரலாறும் அமைந்துள்ளது. ஆண்டாள், திருமால் மீது தமிழில் பாடினார்; மீரா இந்தியில் பாடினார். இந்தியில் மீரா பாடியுள்ள பக்திப் பாடல்களைக் கவிமணி சி. தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் அழகு தமிழில் சுவைமிகப் பாடியுள்ளார்.

மீரா இராசபுதனத்துச் சிற்றரசனின் மகள். 1601–ஆம் ஆண்டில் தோன்றிச் சிறுமியாக இருந்து விளையாடிய காலத்தில், அவள் தாயார் விளையாட்டாகக் கண்ணன் உருவச் சிலையைக் காட்டி 'இவரே உன் மாப்பிள்ளை' என்றாள். அன்றுமுதல் மீரா கண்ணனையே கணவனாகக் கொண்டாள். சாது இரவிதாசு என்பவர் வழிபட்டுவந்த கிரிதரகோபாலன் விக்கிரகத்தைப் பெற்றுப் பூசித்து ஆடிப்பாடி மகிழ்ந்தாள். கிரிதர கோபாலன்

தன்னை மணந்ததாக ஓரிரவிலே கனாக்கண்டு, பொழுது புலர்ந்தபின் தாயினிடம் தன் கனவினைக் கூறுகிறாள்.

அன்னையே தாயே அழகன் சகதீசன்
என்னை மணக்க இரவில் கனாக்கண்டேன்;
நென்னல் இரவுகண்ட நீண்ட கனாமுழுதும்
உன்னை ஒளியாமல் உரைக்கின்றேன் கேளம்மா. 1

முன்செய் தவப்பயனால் முகுந்தன் கிரிதரனே
அன்பு நிறைந்திடுமென் அகமுடையா னாகவந்
[தான்
இன்ப மணமும்நேற் றிரவிலே யானதம்மா
துன்பம் ஒழிந்ததம்மா சுகமும் பிறந்ததம்மா. 2

மீராவின் அழகினையும் பாட்டினையும் பற்றிய செய்தி நாடெங்கும் பரவிற்று. மேவாள் மகாராணாவின் மூத்த மகனான போசராசன் மீராவின் புகழைக் கேட்டான். அவள் அழகைக் காணவும், இசையைக் கேட்கவும் அவன் கண்ணும் காதும் விரும்பின. தன் தலைநகரான சித்தோரி னின்றும் புறப்பட்டான். மாறுவேடம் பூண்டு அவள் அரிபசனையைக் கேட்கக் காத்திருந்தான். எளிய உடையோடு தோன்றி மீராபாய் பாடுகிறாள்.

நித்தம் நித்தம் நீராடில்
நெடுமால் அருளைப் பெறலாமேல்
தத்தும் தவளை மீன்களும்அத்
தனிப்பே றடைய வேண்டாவோ? 3

காயும் கனியும் அருந்துவதால்
கண்ணன் கழலைப் பெறலாமேல்
ஆயும் கிளைவாழ் குரங்குகளும்
அப்பே றடைய வேண்டாவோ? 4

வாடும் புல்லைத் தின்பதனால்
மாயன் கிருபை பெறலாமேல்
ஆடும் மாடும் மான்களும்
அரும்பே றடைய வேண்டாவோ? 5

பெண்ணின் இன்பம் துறப்பதனால்
பெருமான் பாதம் பெறலாமேல்
மண்ணில் எல்லா அலிகளும்அம்
மாபே றடைய வேண்டாவோ? 6

பாலை நிதமும் குடிப்பதனால்
பரமன் அடியைப் பெறலாமேல்
ஞால மீது சிசுக்களும்அந்
நற்பே றடைய வேண்டாவோ? 7

உண்மை யன்பே உடையவரே
உலகை யளந்த பெருமானை
அண்மை யாகக் கண்டிடுவர்
அல்லார் காணார் காணாரே. 8

### அருஞ்சொற்பொருள்

1. நென்னல் – நேற்று. ஒளியாமல் – மறைக்காமல்.
2. முகுந்தன் – கண்ணன். அகமுடையான்–கணவன்.
3. நெடுமால் – திருமால். பேறு – வீடு.

### வினாக்கள்

1. அன்பின் வெற்றியில் சொல்லப்படும் கதை என்ன?
2. மீரா கண்ட கனவு யாது?
3. இறைவனைக் காணுபவர் யார்? காணாதவர் யார்?

# 7. பூமிதானப் பாடல்கள்

இப்பாடல்கள் பூமிதான இயக்கப் பாடலிலிருந்து எடுக்கப்பட்டவையாகும். இவற்றை இயற்றியவர் நாமக்கல் கவிஞர் திரு வெ. இராமலிங்கம் பிள்ளை அவர்கள். இந்திய சுதந்திரப் போராட்டத்தில் நேரடியாக ஈடுபட்டவர். கவிகள் பல இயற்றி மக்களை உணர்ச்சி பெறச் செய்த போர்க்களப் புலவர். திருக்குறள் புதுஉரை. மலைக் கள்ளன், அவளும் அவனும் முதலிய பல நூல்களை இயற்றியுள்ளார். அரசவைக் கவிஞராகித் தற்பொழுது ஓய்வு பெற்றுச் சேலம் மாவட்டத்திலுள்ள நாமக்கல் என்ற ஊரில் வாழ்ந்து வருகின்றார்.

பூமிதானம் செய்வதே
புண்ணியத்திற் புண்ணியம்!
புனிதமான முறையில் நாட்டின்
வறுமை போகப் பண்ணிடும்;
சாமிசாட்சி யாக எங்கும்
சண்டைகள் குறைந்திடும்;
சரிநிகர் சமான வாழ்வு
சத்தியம் நிலைத்திடும். 1

ஏழை யென்றும் செல்வனென்றும்
ஏற்றத் தாழ்வு போய்விடும்;
எங்கும் யாரும் பகைமையின்றிப்
பங்குகொள்வ தாய்விடும்;
கோழையின்பொ ருமைதூண்டும்
குற்றம்யாவும் நீங்கிடும்;
கொடுமையான பஞ்சம்விட்டு
குண நலன்கள் ஓங்கிடும். 2

உடலுழைத்து உணவு முற்றும்
உண்டுபண்ணும் உழவர்கள்
உரிமை சொல்ல நிலமிலாமல்
உள்ளம்வெந்து அழுவதா?
உடல்சுகித்து உலகினுக்கு
உதவியற்ற ஒருசிலர்
ஊரிலுள்ள பூமிமுற்றும்
உரிமைகொண்டு திரிவதா? 3

உலகிலுள்ள நிலமனைத்தும்
உலகநாதன் உடைமையே!
ஊரிலுள்ள விளைநிலங்கள்
ஊர்ப்பொதுவாம் கடமையே!
கலகமின்றி சட்டதிட்டக்
கட்டுப்பாடும் இன்றியே
கவலையற்ற சமரசத்தின்
காட்சிகாண நன்றிதே. 4

காந்தி தர்ம நெறியைக்காக்க
கடவுளிட்ட கட்டளை;
கருணையோடும் பூமிதானம்
செய்யக் கோரும் திட்டமே;
ஆய்ந்து பார்க்கின் உலகிலெங்கும்
அமைதியற்ற காரணம்
அவரவர்க்கு நிலமிலாத
ஆத்திரத்தின் பேரில்தான். 5

தானதர்ம ஆசையேநம்
தமிழகத்தின் கல்வியாம்;
தந்துவக்கும் இன்பமேநம்
தலைசிறந்த செல்வமாம்;
தீனருக்குப் பூமிகொஞ்சம்
தானமாகத் தருவதால்
தேசமெங்கும் அமைதிபெற்றுத்
திருவிலாசம் பெருகுமே! 6

கும்பிவேகும் பசிமிகுந்து
கோபதாபம் என்னவே
கொடுமைசேர் புரட்சிவந்து
கொள்ளைபோகு முன்னமே
அன்பினோடு பூமிதானம்
ஆனமட்டும் செய்வதே
அச்சமின்றி நாட்டிலெங்கும்
அமைதிபெற்று உய்வதாம். 7

விளைவு முற்றும் சொந்தமாகும்
விளை நிலங்கள் தந்திடில்;
வேலையற்ற கோடிமக்கள்
விளைச்சல்செய்ய முந்துவார்;
களைவிழுந்து தரிசுபட்ட
கோடிகோடி காணிகள்,
களிசிறக்கச் செழுமை பெற்றுக்
கதிர்கள்முற்றக் காணலாம். 8

விரதமாகக் காந்தியண்ணல்
விட்டுப்போன வேலையை
விட்டிடாமல் கட்டிக்காக்கும்
வீறுகொண்ட சீலனுல்
பரதநாட்டின் தர்மசக்தி
பாரிலெங்கும் சூழவே
பகையில்லாமல் யுத்தமென்ற
பயமிலாமல் வாழலாம். 9

தெய்வஜோதி காந்தியண்ணல்
தேர்ந்தெடுத்த சீடனும்
திருவினேப பாவே நமது
தேசநன்மை நாடினர்;
வையமெங்கும் பெருமைபெற்ற
வண்மைமிக்க தமிழகம்
வந்துபூமி தானம்வாங்க
வரவுசொல்லி வாழ்த்துவோம்! 10

கருணை வாழ்வின் அருணனுன
காந்திசீடன் வருகிருர்:
கால்நடந்து ஊர்கள்தோறும்
கைகுவிக்கப் பெறுகிருர்;
தருணமீது தமிழகத்தின்
தனிமையாகும் வண்மையைத்
தாங்கிப்பூமி தானமீந்து
தர்மவேள்வி பண்ணுவோம். 11

வாழ்க! வாழ்க! காந்திநாமம்
என்றும் நின்று வாழ்கவே!
வந்துதித்த நம்வினைப
வாய்மையாளன் வாழ்கவே!
வாழ்கபூமி தானம்செய்யும்
வண்மைபோற்றும் யாவரும்;
வாழ்கசாந்த சத்தியத்தின்
வந்தநம் சுதந்திரம்! 12

—நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை.

வினுக்கள்

1. பூதானம் செய்வதால் குறைவதும் நிறைவதும் யாவை?

2. பூதானத்தில் நீங்குவன எவை? ஓங்குவன எவை?

3, அழுபவர் யார்? திரிபவர் யார்?

4. கடவுளிட்ட கட்டளை எது?

5. உலகில் அமைதியில்லாமைக்குக் காரணம் என்ன?

6. அச்சமின்றி அமைதியோடு வாழ வழி என்ன?

பயிற்சி

1. பொருள் எழுதுக:—புனிதம், நிகர், களை, களி, வண்மை.

2. எதிர்ச்சொல் தருக: ஏழை, ஏற்றம், கோழை, அமைதி.

3. சேர்த்து எழுதுக: தேர்ந்து + எடுத்த, தமிழ் அகம்

4. பிரித்தெழுதுக: உடலுழைத்து, உலகிலுள்ள, தருணமீது, தானமீந்து.

5. சிந்தனைக்கு: பூமிதான இயக்கத்தினல் உண்டாகும் நன்மையைத் தொகுத்து எழுதுக.

# VI. பல்சுவைப் பகுதி

## 1. வருணனைப் பகுதி

### ஆறு

தாதுகு சோலை தோறுஞ்
சண்பகக் காடு தோறும்
போதவிழ் பொய்கை தோறும்
புதுமணற் றடங்கள் தோறும்
மாதவி வேலிப் பூக
வனந்தொறும் வயல்கள் தோறும்
ஓதிய வுடம்பு தோறும்
உயிரென உலாய தன்றே.

—கம்பர்

### குறிப்புரை

ஆசிரியர்—கம்பர். பிறப்பிடம்—சோழ நாட்டுத் தேரெழுந்தூர். குலம் — உவச்சர் குலம். தந்தை—ஆதித்தன். சமயம்—வைணவம். வேறு பெயர்கள்—கம்பநாடர். கம்பநாட்டாழ்வார். ஆதரித்தவர்—சடையப்ப வள்ளல். காலம்—கி. பி. 12–ஆம் நூற்றாண்டு. 9–ஆம் நூற்றாண்டினர் என்றும் கூறுவர்.

### அருஞ்சொற்பொருள்

தாது – மகரந்தம். போது – பூ. பொய்கை – தடாகம். மாதவி – குருக்கத்தி மரம். பூகம் – பாக்கு. உலாயது– உலவியது.

### தென்றல்

பொங்கரி னுழைந்து வாவி
புகுந்து பங்கயம் துழாவிப்
பைங்கடி மயிலை முல்லை
மல்லிகைப் பந்தர் தாவிக்
கொங்கலர் மணங்கூட் டுண்டு
குளிர்ந்துமெல் லென்று தென்றல்
அங்கங்கே கலைகள் தேரும்
அறிவன்போ லியங்கு மன்றே.

—பரஞ்சோதி முனிவர்.

### அருஞ்சொற்பொருள்

பொங்கர் - சோலை. வாவி – குளம். பங்கயம் - தாமரை. பந்தர் - பந்தல் ; போலி.

### கிளி

தென்னைதான் ஊஞ்சல்! விண்தான்
திருவுலா வீதி! வாரித்
தின்னத்தான் பழம்கொட் டைகள்!
திருநாடு வையம் போலும்!
புன்னைக்காய்த் தலையில் செம்மைப்
புதுமுடி புனைந்தி ருப்பாய்!
உன்னைத்தான் காணு கின்றேன்
கிள்ளாய்! நீ ஆட்சி உள்ளாய்! 1

கொஞ்சுவாய் அழகு தன்னைக்
கொழிப்பாய்நீ, அரசர் வீட்டு
வஞ்சியர் தமையும் மற்ற
வறியவர் தமையும் ஒக்க

நெஞ்சினில் மகிழ்ச்சி வெள்ளம்
நிரப்புவா யவர ளிக்கும்
நைஞ்சநற் பழத்தை உண்பாய்;
கூழேனும் நன்றே என்பாய்! 2

—பாரதிதாசன்.

## குறிப்புரை

இப்பாடல்கள் ‘அழகின் சிரிப்பு’ என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டவை. இதன் ஆசிரியர் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன். இவர் பாரதியாருடன் நெருங்கிப் பழகியவர். புதுவையில் வாழ்பவர். இவர் உயரிய கவிதை நூல்களும் உரைநடை நூல்களும் எழுதியுள்ளார். இயற் பெயர் கனக சுப்புரத்தினம். பிறப்பு—17-4-1891. புதுவைச் சட்டசபை உறுப்பினராகத் திகழ்கிருர்.

## அருஞ்சொற்பொருள்

1. வையம் - உலகம். கிள்ளாய்-கிளி ; விளிவேற்றுமை.

2. வஞ்சியர் - பெண்கள், நைஞ்ச - நைந்த ; போலி.

## விஞக்கள்

1. ஆற்றினைக் கம்பர் எவ்வாறு வருணித்துள்ளார்?
2. தென்றல் புலவனுக்கு ஒப்பாவது எப்படி?
3. கிளிக்கு வீதியும் ஊஞ்சலுமாக இருப்பவை எவை?

## பயிற்சி

1. பொருள் கூறுக:—மாதவி, பூகம், பொங்கர், பங்கயம், வஞ்சியர்.

2. எதிர்ச்சொல் எழுதுக:—விண், முடி, பழம்.

3. பிரித்துக் காட்டுக:—பைங்கடி, கொங்கலர், அங்கங்கே.

4. சேர்த்து எழுதுக:—தாது+உகு, போது+அவிழ். உயிர்+என.

## 2. சீட்டுக்கவி

[எட்டயபுரத்து மன்னர் வெங்கடேசுரெட்டப்ப பூபதி அவர்கள் திருமுன்னர்க்கு வரகவி சி. சுப்பிரமணிய பாரதி எழுதும் சீட்டுக்கவி.]

மன்னவனே! தமிழ்நாட்டில் தமிழறிந்த
மன்னரிலை யென்று மாந்தர்
இன்னலுறப் புகன்றவசை நீமகுடம்
புனைந்தபொழு திரிந்த தன்றே!
சொன்னலமும் பொருணலமும் சுவைகண்டு,
சுவைகண்டு, துய்த்துத் துய்த்துக்
கன்னலிலே சுவையறியுங் குழந்தைகள்போல்
தமிழ்ச்சுவைநீ களித்தா யன்றே! 1

புவியனைத்தும் போற்றிடவான் புகழ்படைத்துத்
தமிழ்மொழியைப் புகழி லேற்றும்
கவியரசர் தமிழ்நாட்டுக் கில்லையெனும்
வசையென்னாற் கழிந்த தன்றே!
"சுவைபுதிது, பொருள்புதிது, வளம்புதிது,
சொற்புதிது, சோதி மிக்க
நவகவிதை, எந்நாளும் அழியாத
மகாகவிதை" என்று காண்க. 2

பிரான் சென்னும் சிறந்தபுகழ் நாட்டிலுயர்
புலவோரும் பிறருமாங்கே
விராவுபுகழ் ஆங்கிலத்தீங் கவியரசர்
தாமுமிக வியந்து கூறிப்
பராவியென்றன் தமிழ்க்கவியை மொழிபெயர்த்துப்
போற்றுகின்றார்; பாரோ ரேத்துந்
தராதிபனே! இளசைவெங்க டேசுரெட்டா!
நின்பா லத்தமிழ் கொணர்ந்தேன், 3

வேறு

வியப்புமிகும் புத்திசையில் வியத்தகுமென்
வேந்த னே! நின் [கவிதையினை
நயப்படுசந் நிதிதனிலே நான்பாட நீகேட்டு
நன்கு போற்றி
சயப்பறைகள் சாற்றுவித்துச் சாலுவைகள்
சதிபல் லக்கு, [பொற்பைகள்
வயப்பரிவா ரங்கள்முதற் பரிசளித்துப் பல்லூழி
வாழ்க நீயே!

எட்டயபுரம்
2 - 5 - 1919 —சுப்பிரமணியபாரதி.

குறிப்புரை

ஒருவர் மற்றவருக்கு எழுதும் செய்தியைச் செய்யுள் வடிவில் அமைத்து எழுதும் கடிதமே சீட்டுக் கவியாகும். இச் சீட்டுக் கவியின் ஆசிரியர் தேசியகவி சி. சுப்பிரமணிய பாரதியார். இவர் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள எட்டயபுரத்தில் பிறந்தவர். தந்தை: சின்னசாமி ஐயர். தாய்: இலக்குமி அம்மாள். மனைவி: செல்லம்மாள். காலம்: கி. பி. 1882 முதல் 1921 வரையில் வாழ்ந்தவர்.

அருஞ்சொற்பொருள்

1. புகன்ற - சொன்ன. வசை - பழிச்சொல். மகுடம்-முடி. புனைந்த - தரித்த. கன்னல் - கரும்பு.

2. புவி - பூமி. நவம் - புதுமை.

3. பராவி - போற்றிப் புகழ்ந்து, ஏத்தும் - துதிக்கும். தராதிபன் - மன்னன். இளசை - எட்டயபுரம்.

4. வியப்பு - ஆச்சரியம். நயப்படும் - விரும்பப்படும். வயப்பரி - வெற்றியை உண்டாக்கும் குதிரை.

# 3. சிலேடை

வைக்கோலுக்கும் யானைக்கும் பொருந்தப் பாடியது

வாரிக் களத்தடிக்கும் ; வந்தபின்பு
[கோட்டைபுகும் ;
போரிற் சிறந்து பொலிவாகும் ;—சீருற்ற
செக்கோல மேனித் திருமலைரா யன்வரையில்
வைக்கோலும் மால்யானை யாம்.

—காளமேகப் புலவர்.

## குறிப்புரை

காளமேகப் புலவரின் இயற்பெயர் வரதர் என்பது. கருமை நிறமுடைய மேகம் மழையைப் பொழிவது போல இவர் கவிமழை பொழிந்தமையால் காளமேகம் என வழங்கப்பட்டார். இவர் கி. பி. 15-ஆம் நூற்ருண்டில் வாழ்ந்தவர்.

சிலேடை—ஒரு சொல்லில் பல பொருள் தோன்ற அமைப்பது.

## அருஞ்சொற்பொருள்

வாரி-அள்ளி. களத்து-(1) நெற்களத்தில், (2) போர்க் களத்தில், பின்பு-பிறகு. கோட்டை-(1) நெற்கோட்டை. (2) அரணுகிய கோட்டை. போர் - (1) வைக்கோல் போர், (2) சண்டை. சீர் - புகழ், செக்கோலம் – செம்மை யான அழகு. 'செங்கோலம்' செக்கோலம் வலித்தல் விகாரம் பெற்றது, திருமலைராயன்-திருமலைராயன் பட் டணத்தைத் தலை நகராகக் கொண்டு அரசாண்டவன்.

## பயிற்சி

சிலேடையில் இதைப்போன்று வேறு ஓர் உதாரணம் தருக.

# 4. சிறு நூல்கள்

## 1. நந்திக் கலம்பகம்

### இரங்கல்

வானுறு மதியை அடைந்ததுன் வதனம்;
வையகம் அடைந்ததுன் கீர்த்தி;
கானுறு புலியை அடைந்ததுன் வீரம்
கற்பகம் அடைந்ததுன் கரங்கள்,
தேனுறு மலராள் அரியிடஞ் சேர்ந்தாள்;
செந்தழல் புகுந்ததுன் மேனி;
யானுமென் கலியும் எவ்விடம் புகுவேம்?
எந்தையே! நந்திநா யகனே!

### குறிப்புரை

நந்தியைக் குறித்துப் பாடப்பட்ட கலம்பகம் 'நந்திக் கலம்பகம்' எனப்பட்டது. நந்தி என்பவன் நந்திவர்ம பல்லவனுவான். அம்மானே, குறம் முதலிய 18 உறுப்புக்களும் அமைய, நால்வகைப் பாக்களும் பாவினங்களும் விரவிவர அந்தாதித் தொடையாகப் பாடப்படுவது கலம்பகமாகும்.

### அருஞ்சொற்பொருள்

வான் - விண். வதனம் - முகம். : வையகம் – உலகம். கான்-காடு. மலராள்-இலக்குமி. அரி – திருமால். எந்தை- எம் தந்தை ; மரூஉ. நாயகனே - தலைவனே.

## 2. திருக்குற்ருலக் குறவஞ்சி

### மலைவளம்

வானரங்கள் கனிகொடுத்து
மந்தியொடு கொஞ்சும்;
மந்திசிந்து கனிகளுக்கு
வான்கவிகள் கெஞ்சும்;

கானவர்கள் விழிஎறிந்து
வானவரை அழைப்பர் ;
கவனசித்தர் வந்துவந்து
காயசித்தி விளைப்பர் ;
தேனருவி திரைஎழும்பி
வானின்வழி ஒழுகும் ;
செங்கதிரோன் பரிக்காலும்
தேர்க்காலும் வழுக்கும் ;
கூனலிளம் பிறைமுடித்த
வேணியலங் காரர்
குற்றாலத் திரிகூட
மலையெங்கள் மலையே ;

குறிப்புரை

திருக்குற்றாலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் மீது பாடப்பட்ட நூலுக்குக் குற்றாலக் குறவஞ்சி என்று பெயர். குறவஞ்சி என்பது தமிழில் வழங்கும் 96 வகைப் பிரபந்தங்களில் ஒன்று. இது குறத்திப் பாட்டு எனவும், குறவஞ்சி நாடகம் எனவும் பெயர்பெற்று வழங்கும். இந் நூலினை இயற்றியவர் திரிகூடராசப்பக் கவிராயர் ஆவார். இவர் திருக்குற்றாலத்தை யடுத்த மேலகரம் என்னும் ஊரினர். மதுரையை ஆண்ட முத்து விசயரங்க சொக்க லிங்க நாயக்கரால் ஆதரிக்கப்பெற்றவர். காலம் கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டு.

அருஞ்சொற்பொருள்

மந்தி-பெண் குரங்கு. வான்கவிகள் - வான் உச்சியில் மரக்கிளையில் உள்ள குரங்குகள். கானவர் – வேட்டுவர். விழிஎறிந்து-கண்களை வீசிச் சாடைகாட்டி. வானவர்-தேவர். கவனம்-விண். காயசித்தி-ஒருவகை யோகம். தேனருவி-குற்றாலத்தில் ஓடும் அருவியின் பெயர். தேர்க்கால் தேர் உருளை. வேணி - சடை.

## 3. முக்கூடற் பள்ளு

### மழைக்குறி

ஆற்று வெள்ளம் நாளைவரத்
தோற்றுதே குறி—மலை
யாளமின்னல் ஈழமின்னல்
சூழ மின்னுதே.

நேற்று மின்றும் கொம்புசுற்றிக்
காற்றடிக் குதே—கேணி
நீர்ப்படு சொறித்தவளை
கூப்பிடு குதே.

சேற்றில் நண்டு சேற்றில்வளை
ஏற்றடைக் குதே—மழை
தேடியொரு கோடிவானம்
பாடியாடுதே.

போற்று திரு மாலழகர்க்(கு)
ஏற்றமாம் பண்ணைச்—சேரிப்
புள்ளிப் பள்ளர் ஆடிப்பாடித்
துள்ளிக் கொள்ளுமே.

### குறிப்புரை

முக்கூடற்பள்ளு ;—திருமுக்கூடல் என்னும் ஊரில் எழுந்தருளியுள்ள அழகர் என்னும் திருமாலின்மீது பாடப்பெற்றது. முக்கூடல் என்னும் ஊர் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளது. இஃது இப்போது சீவலப்பேரி என வழங்கப்படுகிறது. பள்ளு-பள்ளர் வாழ்வை விளக்கும் ஒருவகை நாடகப் பிரபந்தம். பள்ளர்-உழவர். இந்நூலை இயற்றியவர் என்நயினைப் புலவர் என்பர்.

## 4. எம்பிரான் சதகம்

### தெய்வம் ஒன்றே

பண்ணியிடும் பணிபலவே,
பொன்னென் றேயாம்;
பாண்டத்தின் பேர்பலவே,
மண்ணென் றேயாம்;
வண்ணமிகும் பசுபலவே,
பாலொன் றேயாம்;
வகையேழின் உடல்பலவே,
சீவ னென்றும்;
நண்ணுமறு சமயங்கள்
பேர்வே றல்லால்
நாதன்நீ ஒருவனே!
அவர்கள் தம்மை
எண்ணியே செயுந்தொண்டர்
பூசைக் கெல்லாம்
இரங்கி வரந்
தருகின்ருய் எம்பிரானே.

—கோபால கிருட்டினர்.

எம்பிரான் என்பது திருமாலின் திருப்பெயர்களுள் ஒன்று. அத்திருமால் மீது அரிபக்தர் கோபால கிருட்டினர் பாடியது இப்பாட்டு.

### அருஞ்சொற்பொருள்

பணி - நகை. வண்ணம் - நிறம். சீவன் - உயிர். நண்ணும் - பொருந்தும். இரங்கி - மனம் தளர்ந்து. எம்பிரானே - திருமாலே.

# 5. வழிபாட்டுப் பாடல்கள்

## நீதி நூல்

### பெற்ருேர் வழிபாடு

எப்புவி களும்பு ரக்கும்
ஈசனைத் துதிக்க வேண்டின்
'அப்பனே தாயே' என்போம்
அவரையே துதிக்க வேண்டின்
ஒப்பனை யுளதோ வேலை
யுலகிற்கட் புலனிற் ருேன்றும்
செப்பருந் தெய்வம் அன்ஞர்
சேவடி போற்ருய் நெஞ்சே! 1

### ஆசிரியர் வழிபாடு

அகவிருள் அகல ஞான
விளக்கினை அருளின் ஏற்றிச்
சகலமும் நல்குங் கேள்வித்
தனத்தினை நல்கி யாதிப்
பகவன்றன் சொரூபங் காட்டிப்
பவமறம் இரண்டுங் காட்டிச்
சுகநிலை காட்டுந் தியாகத்
தோன்றலை மறவாய் நெஞ்சே! 2

### கடவுள் வழிபாடு

கதிரவன் கிரணக் கையால்
கடவுளைத் தொழுவான் புட்கள்
சுதியொடும் ஆடிப் பாடித்
துதிசெயும் தருக்கள் எல்லாம்

பொதியலர் தூவிப் போற்றும்
பூதந்தந் தொழில்செய் தேத்தும்
அதிர்கடல் ஒலியால் வாழ்த்தும்
அகமே நீ வாழ்த்தா தென்னே!

—வேதநாயகம் பிள்ளை

## குறிப்புரை

வேதநாயகம் பிள்ளை, திரிசிரபுரத்தை யடுத்த குளத்தூரில் பிறந்தவர். ஆங்கிலமும் தமிழும் நன்கு பயின்றவர். சீர்காழி, மாயூரம் முதலிய இடங்களில் மாவட்ட நீதிபதியாகப் பணியாற்றினர். நீதி நூல், பெண்மதி மாலை, பெண் கல்வி, பிரதாப முதலியார் சரித்திரம், சர்வ சமய சமரசக் கீர்த்தனை முதலியன இயற்றிப் புகழ்பெற்ற இவ்வாசிரியர் 1889-ஆம் ஆண்டில் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

## அருஞ்சொற்பொருள்

1. கிளத்தல் - சொல்லுதல். புவி - பூமி. புரக்கும் - காப்பாற்றும். ஒப்பனை - உவமை. வேலை - கடல். கட்புலன் - கண்ணறிவு. செப்பரும் - சொல்லுதற்கு அரிய.

2. அகம் - மனம். இருள் - அறியாமை. அருள் - கருணை. தனம் - செல்வம். பவம் - பாவம், தீவினை. தியாகத் தோன்றல் - ஆசிரியர்.

3. கிரணம் - கதிர். புட்கள் - பறவைகள். சுதி - பண். தருக்கள் - மரங்கள். பொதி அலர் - தொகுதியாகிய பூக்கள். பூதம் - நிலம், நீர், தீ, காற்று, வான். அதிர் - ஒலிக்கின்ற.

## இஃது என்ன?

முற்பாதி போய் விட்டால் இருட்டே யாகும்;
முன்னெழுத்தில் லாவிட்டாற் பெண்ணே
[யாகும்;
பிற்பாதி போய் விட்டால் ஏவற் சொல்லாம்;
பிற்பாதி யுடன்முன்னெ ழுத்தால் மேகம்;
சொற்பாகக் கடைதலைசின் மிருகத் தீனி,
தொடர் இரண்டாம் எழுத்துமா தத்தில்
[ஒன்றும்;
பொற்பார்திண் புயமுத்துச் சாமி மன்ன
புகலுவாய் இக்கவியின் புதையல் கண்டே!

—அழகிய சொக்கநாதப் பிள்ளை

இவர் திருநெல்வேலியில் சென்ற நூற்றாண்டில் வாழ்ந்தவர்.

அருஞ்சொற்பொருள்

முற்பாதி - புதை, அல் - இருட்டு. தையல் - பெண். ஏவற்சொல் - புதை, புயல் - மேகம், மிருகத்தீனி - புல், மாதத்தில் ஒன்று - தை. இதற்கு வேண்டிய விடை கடைசி அடியிலேயே உள்ளது.

## 7. தமிழர் கொள்கை

மன்னுயிரைத் தன்னுயிர்போல் மதித்தன்பு
காட்டியருள் மனத்தி னோடு
தன்னுடைய பேருழைப்பால் தாளாற்றித்
தந்தபெருஞ் செல்வ மெல்லாம்
தன்னலமே யில்லாமல் தானீந்து
தன்மானத் தகுதி யோடு
சொன்னபடி நடப்பதுவே தூயதமிழ்க்
கொள்கையெனச் சொல்வ ரான்றோர்.

புலவர் த. முருகேசன்.

## குறிப்புரை

இப்பாடலை இயற்றியவர் புலவர். த. முருகேசன். சிதம்பரம் இராமசாமிச் செட்டியார் நகர உயர் நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றி வருகின்ருர். சென்னை மாநிலத் தமிழாசிரியர் கழகப் பொதுச் செயலாளராகப் பணியாற்றியவர். இப்பாட நூலின் தொகுப்பாசிரியர். ஊர் : தருமநல்லூர். தந்தை : தங்கவேலு ; தாய் : பார்வதி. காலம் : 24—6—1921.

## அருஞ்சொற்பொருள்

மன்னுயிர் - நிலைபெற்ற உயிர். தாள் - முயற்சி. மானம் - பெருமை. தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டு - என்ற குறட்கருத்து அமைந்துள்ளமை காண்க.

## பயிற்சி வினுக்கள்

4. சிறு நூல்கள் :

1. கலம்பகத்தின் இலக்கணம் என்ன ?

2. குற்ருலமலையின் இயற்கை வளம் யாது?

3. மழையின் அறிகுறிகள் யாவை ?

4. எம்பிரான் சதகத்தில் தெய்வம் ஒன்றே என்பதற்குக் காட்டும் உவமைகளைக் கூறுக.

5. வழிபாட்டுப் பாடல்கள் :

1. பெற்ருேர்க்கு உவமை இல்லை—எப்படி ?

2. ஆசிரியரின் அருளினை விளக்குக.

3. இயற்கைப் பொருள்கள் இறைவனை எவ்வாறு வழிபடுகின்றன ?

6. இஃது என்ன :

1. புதையல் என்ற சொல்லில் புலவர் காணும் அழகினை விளக்குக.

7. தமிழர் கொள்கை :

1. தமிழர் கொள்கைகள் எவை ?

# உரைநடைப் பகுதி

## 1. தமிழ்

[மறைமலை யடிகள்]

### தாய்மொழி

தமிழராகிய நாம் நாள் தோறும் பேசி வரும் தாய் மொழி தமிழேயாகும். நாம் குழவியாய் இருந்த போது அன்னையின் தீம்பாலைப் பருகிப் பசி தீர்ந்து அவள் மடியில் கிடக்க, அவள் நம்மைக் கொஞ்சி முத்தம் வைத்து நம்மைப் பாராட்டிப் பேசியது தமிழ் மொழியிலன்றோ? சிறு குழந்தையாய் இருந்த அந்தக் காலந்தொட்டு மறு படியும் நாம் இந்த உலகை விட்டு அகன்று போகும் வரையில் நம் தாய் தந்தையரோடும் உடன் பிறந்தவ ரோடும் மனைவி மக்களோடும் நம் நாட்டில் உள்ளவ ரோடும் நாம் ஊடாடி உறவாடிப் பேசுவதும் நமது அரு மைத் தமிழ் மொழியே அன்றோ?

### இளமையில் கற்கவேண்டிய மொழி

நமது வயிற்றுப் பிழைப்புக்காகவும், வேறு சில காரணங்களுக்காகவும் ஆங்கிலம், முதலான மற்ற மொழிகளை நாம் வருந்திக் கற்க வேண்டுவது கட்டாய மாய்த் தோன்றுகிறது. ஆயினும் இவற்றின் பொருட்டு நமது இனிய செந்தமிழை மறப்பதும் அதனைப் பயிற்சி செய்யாமல் கைவிட்டிருப்பதும் நமதுயிரையே நாம் அழிப் பதாய் முடியும். தமிழ் முதலான மொழிகளுள் ஒன்றை யேனும் அல்லது இரண்டு மூன்றையேனும் தமது குழந் தைப் பருவந்தொட்டுப் பேசி வருபவர், தாம் பேசும் அவ்

வியற்கை மொழிகளையே மேலும் மேலுங் கற்றுத் தமது அறிவை வளம் படுத்தாமல் அவற்றைக் கைவிடலாகாது. தன்னியற்கையில் வலுப்பட்டு நில்லாத ஒரு தூணின் மேல் பெருஞ் சுமைகளை ஏற்றினுல் அவற்றைத் தாங் காமல் அது முறிந்து விழுகிறது. அதுபோலத் தமக் குரிய மொழியைக் கற்று வலிவு பெருத ஒருவனது அறி வின்மேல் வேறு மொழிகளை ஏற்றினுல் அவற்றைத் தாங்கமாட்டாமல் அது பழுதுபட்டுப் போகின்றது. தாய்ப் பால் நிரம்ப உண்டு வளர்ந்த பிள்ளை, ஆண்டு முதிர முதிர அரிய பெரிய முயற்சிகளையெல்லாம் எளிதிற் செய்து, நீண்ட நாள் உயிர் வாழ்கிறது. அது போலத் தமிழ்ப் பால் உண்டு வளர்ந்தவர் எத்தகைய மொழி களையும் வருத்தமின்றிக் கற்கலாம்.

ஆங்கிலேயர்

அறிவிற் சிறந்தவரான ஆங்கில நன் மக்கள் தமக்கு இயற்கையில் உரிய ஆங்கில மொழியை நன்ருகக் கற்ற பிறகுதான் வேறு மொழிகளைக் கற்கின்ருர்கள். தமது மொழியைக் கல்லாமல் வேறு மொழிகளைச் சிறிதும் கற்கவே மாட்டார்கள். இப்படிப்பட்ட உயர்ந்த பழக்கம் அவர்களிடத்தில் இருப்பதனுலேதான் அவர்கள் தமது மொழியில் நிகரற்ற புலமையுடையவராய் இருக் கின்றனர். மேலும் தாம் கற்கும் வேறு மொழிகளிலும் வல்லவராய்ச் சிறந்து விளங்கி, உலகத்திற்கு அளவிறந்த நன்மைகளை யெல்லாம் விளைவித்து வருகிருர்கள். நம்ம வர்களோ தமக்குரிய செந்தமிழ் மொழியைச் சிறிதுங் கல் லாமலும், சிறிது கற்ருலும் தமிழ் நூற்பயிற்சி நன்கு நிரம்பாமலும் இருக்கின்றனர். அன்றி வயிற்றுப் பிழைப்பிற்குரிய ஆங்கிலம் முதலான அயல் மொழி

களையே மிகுந்த பொருட்செலவு செய்து, பல ஆண்டுகள் அல்லும் பகலும் உழைத்துக் கற்றுக் கொள்ளுகிருர்கள்.

எளியமுறை

இத்தென்ஞட்டில் மட்டுமின்றி, இலங்கையிலும், பர்மாவிலும், சிங்கப்பூர், பிஞங்கு முதலான மலாய் நாடுகளிலும் மோரீசு தென்ஞப்பிரிக்கா முதலான இடங்களிலும், நமது தமிழ் மொழியைப் பேசுவோர் பெருந்தொகையாய் இருக்கிருர்கள். இவ்வளவு பெருந்தொகையாய் உள்ள தமிழ் மக்கள் எல்லாரும் அறிவிலும் நாகரிகத்திலும் உயர்ந்து விளங்க வேண்டுமாயின், அவர்கள் தமக்குத்தெரிந்துள்ள தமிழ் மொழியின் வழியாகவே அங்ஙனம் ஆகவேண்டும். மிகுந்த பொருட் செலவும் காலக் கழிவும் வருத்தமும் இன்றி, அவர்களைக் கல்வியில் வல்லவராக்குவதற்கு இசைவான இந்த எளிய முறையைக் கைக் கொள்ளுதலே சிறந்தது. ஆதலால், நம் தமிழ் மக்களை உண்மையாகவே முன்னேற்ற வேண்டுமென்னும் எண்ணம் உடையவர்கள் அவர்களுக்குரிய தமிழ்க் கல்வியின் வாயிலாகவே அதனைச் செய்யக் கடமைப்' பட்டிருக்கின்ருர்கள்.

தமிழ்க் கல்வி

மற்ற மொழிகளில் நாள்தோறும் புதியனவாய் வெளிவரும் அரும் பொருள்களை யெல்லாம் தமிழில் மொழிபெயர்ப்பித்துக் கற்பிக்க வேண்டும். அப்படிக் கற்பித்தால் இப்போது பதினைந்து ஆண்டுகளுக்குமேல் ஆங்கில மொழியை மிகவருந்திக் கற்று ஒருவர் தெரிந்து கொள்ளும் பொருள்களெல்லாம் நமது செந்தமிழ் மொழியில் ஏழெட்டு ஆண்டுகளில் இன்னுஞ் செவ்வையாகக் கற்றுத் தேறலாம். ஆங்கிலம் ஆரியம் முதலிய மொழிகளில்

அவர் எவ்வளவுதான் கற்றுத் தேறினலும், தாம் அம் மொழிகளில் அறிந்த பொருள்களைத் தமிழ் மக்கள் எல் லார்க்கும் புலப்படும்படி எடுத்துச் சொல்லிப் பயன் படுத்தல் இயலாது. தமிழ் கற்றவரோ தாம் அறிந்தவை களைத் தமிழ் மக்களெவர்க்கும் நன்கு விளங்கும்படி எடுத் துச் சொல்லிப் பெரிதும் பயன்படுவர். இதனல் தமிழ் நாட்டவர் தமிழ் கற்பதொன்றே தமக்கும் பிறர்க்கும் பயன்படுவதற்கு ஏதுவாகும் என்க.

தொன்மை மொழி

இனி, ஏழெட்டு நூற்ருண்டுகளாய்ப் புதியனவாக முளைத்தெழுந்து இப்போது ஆங்காங்கு வழங்கி வரும் பல்வேறு மொழிகளையும் போல்வதன்று நமது தமிழ் மொழி. இஃது இன்ன காலத்திலேதான் தோன்றிய தென்று எவராலும் கட்டுரைத்துச் சொல்ல முடியாத பழமையுடையது, இத்தனை காலமாகியும் தனது இளமை சிறிதுங் குன்ருததாய் உலவி வருகின்றது. தமிழைப் போலவே பழமையுடையனவென்று சொல்லத் தக்க ஆரியம், கிரேக்கு, இலத்தீன், ஈபுரு, அராபி, சீனம் முதலான பல தேய மொழிகளெல்லாம் இப்போது உலக வழக்கு அழிந்தன. நம் செந்தமிழ் மொழி ஒன்றுமே எல் லாம் வல்ல இறைவனைப் போல் என்றும் இறவாத இளமைத் தன்மை வாய்ந்து இலங்குகின்றது. இவ்வுண் மையை மனேன்மணியத்தில்

"சீரிளமைத் திறம் வியந்து
செயல் மறந்து வாழ்த்துதுமே,"

என்று வந்த தமிழ்த்தெய்வ வணக்கச் செய்யுளால் அறி கிரேம்.

தமிழின் சிறப்பு

பழமையிலே இதனேடு ஒத்த மொழிகளெல்லாம் இறந்தொழிந்தன. இது மட்டும் இன்னும் இளமையோடு விளங்குகின்றது; காரணம் என்ன? தமிழ் அல்லாத மற்ற மொழிகளில் எல்லாம் மக்களியற்கைக்கு மாருக உரத்த ஓசைகளும் பொருந்தா இலக்கண முடிபுகளும் காணப்படுகின்றன. அவை வழங்குவதற்கு எளியனவாய் இல்லாமல் நாளடைவில் மாய்ந்து போயின. தமிழில் இயல்பாற் பிறக்கும் இனிய ஒலிகளும் மிகவும் பொருத்த மான இலக்கண முடிபுகளும் இயைந்து இது படிப்பதற்கு எளிதாய் இருக்கின்றது. அதனுல் தான் இது இளமை குன்ருமல் நடைபெறுகின்றதென்று உணர்ந்து கொள்க.

## அருஞ்சொற்பொருள்

குழவி - குழந்தை. தீம்பால் - இனியபால். அன்ரே - அல்லவோ? ஊடாடி - கலந்து. இசைவான - ஏற்றதான. செவ்வையாக - நன்ருக, இயலாது - முடியாது. முளைத் தெழுந்து - தோன்றி. கட்டுரைத்து - உறுதியாக. குன்ரு தாய் - குறையாததாக.

## வினுக்கள்

1. நமது தாய்மொழியின் அருமை யாது?

2. நமது உயிரையே நாம் அழிப்பதாய் முடியும். எது?

3. பெருஞ்சுமை ஏற்றப்பட்ட தூண், தாய்ப்பால் உண்டு வளர்ந்த குழந்தை—உவமைகளை விளக்குக.

4. ஆங்கில மக்கள் தம் மொழியில் சிறந்து இருப்ப தற்குக் காரணம் என்ன?

5. தமிழ்மொழிபேசுவோர் எங்கெங்கு வாழ்கின்றனர்?

6. தமிழ் இளமையோடு விளங்கக் காரணம் என்ன?

## பயிற்சி

1. பிரித்தெழுதுக: முளைத்தெழுந்து, வேறெந்த, கன்னெஞ்சம், ஆங்காங்கு, சீரிளமை.

2. சேத்து எழுதுக: நாள் + தோறும். நான்கு + பொருள். உலகம் + இயற்கை. சிவம் + ஞானம் + போதம்.

3. எதிர்ச்சொல் வரைக: இயற்கை, இளமை, பழமை.

4. தொடரில் அமைக்க: ஊடாடி உறவாடி, அல்லும் பகலும், முதிர முதிர, அரிய பெரிய.

5. 'தமிழ்' என்னும் பொருளில் பள்ளி மாணவர் சொற்பயிற்சி மன்றத்தில் நீ சொற்பொழிவு ஆற்றும் முறையில் ஒரு கட்டுரை எழுது.

# 2. கோவலன் கண்ணகி

[டாக்டர் அ. சிதம்பரநாதன் எம். ஏ., எம்.எல்.சி.]

## சிலப்பதிகாரம்

சிலப்பதிகாரம் என்பது தமிழ்க் காப்பியங்களுள் சிறந்ததொரு காப்பியம். தமிழில், ஐம்பெருங் காப்பியங்கள் என்று சிலவற்றைப்பற்றிச் சொல்வது வழக்கம். அந்த ஐந்து காப்பியங்கள் ஆவன: சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி ஆகியவை. அவற்றுள், சிலப்பதிகாரக் கதையில் வரும் தலைவர்கள் தமிழ்நாட்டிற் பிறந்து வளர்ந்துசெயலாற்றிய தலைவர்கள் ஆதலால், அந்தக் கதைக்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு. கதை நிகழ்ந்த இடங்களிற் பெரும்பான்மையன தமிழ் நாட்டின் எல்லையினுள் அடங்கியவை ஆனதாலும் அக்காப்பியத்திற்கு ஒரு சிறப்பு உண்டு. இவை அல்லாமல், காப்பியப் பண்புகள் சிலப்பதிகாரத்தில் நன்கு அமைந்திருக்கும் காரணத்தால், அது ஐந்து பெரிய காப்பியங்களுள் தலைசிறந்ததாக மதிக்கப்படுதல் உண்மை.

## கோவலன் பெருமிதம்

கதைக்கு உரிய தலைவன் தலைவி நிகரற்ற பெருமை உடையவர்களாக இருக்கவேண்டும் என்பது காப்பிய நியதிகளில் ஒன்று. அதற்கேற்பவே, நிகரற்ற தலைவனாக விளங்கிய கோவலன் அக்காப்பியத்திற்குத் தலைவனாய் அமைந்துள்ளான். அவன் வீரமும், ஈர நெஞ்சமும் உடையவன். ஒரு நாள் பெருங்கொடை பெறும் நோக்கத்தோடு மறையவன் ஒருவன் தெருவில் போய்க்கொண்டிருந்தான். அவனை மதம் பிடித்த யானை ஒன்று துதிக்கையினாற் பற்றிக்கொண்டு 'விடமாட்டேன்' என்றது. மறையவனோ

வயது முதிர்ந்தவனுய், தளர்ந்த நடையுடையவனுய், கோலைக் காலாக ஊன்றிக்கொண்டு சென்றுகொண்டிருந் தான். யானையின் பிடிப்பில் அகப்பட்ட அவன் 'கொய்யோ முறையோ' எனக் கதறினுன். கோவலன் செவியில் அந்த அவல ஒலி விழுந்தது. உடனே குதித்து ஓடி, யானையின் பிடிப்பினின்று அவனைக் கோவலன் விடுவித் தான். விடுவிப்பதற்கு முன்னர், யானையின் துதிக்கையில் அவனே அகப்பட வேண்டிய நிலையுடையவன் ஆயினுன். பிறகு, அந்தப் பிடிப்பிலிருந்து தன்னை விரைவில் விடுவித் துக்கொண்டு, யானையினுடைய கொம்பிற் காலை வைத்து ஏறி, அதன் தலையிற் போய் உட்கார்ந்துகொண்டான். அவ்வாறு செய்வதற்கு எவ்வளவு பெரிய வீரம் உடைய வனுய் அவன் இருந்திருத்தல் வேண்டும்?

இன்னெரு நாள், துயரப்படும் ஓர் அன்னையின் அருந்துயரைக் களைதற்கு அவன் முற்பட்டான். மூர்க்கன் ஒருவன் வழக்காடு மன்றத்திற்குப் போய்ப் பொய்ச்சாட்சி சொன்னுன். பொய்ச் சாட்சி கூறுபவர்கள் பேயாற் கொல்லப்படுவார்கள் என்ற நம்பிக்கை அக்காலத்தில் இருந்தது. சாட்சி சொல்லிவிட்டு மூர்க்கன் வீடுதிரும்பிக் கொண்டு இருக்கும்பொழுது, அச்சத்தினுல் அஞ்சிச் செத்துவிட்டான்; பேய் அறைந்ததுபோலக் கீழே விழுந்து மடிந்துவிட்டான். அவனுடைய தாயாருக்கோ அவன் ஒரே பிள்ளை. அவளோ மூர்க்கன் உழைப்பினுல் வாழ்ந்து வந்தவள். அவன் இறந்துபட்டதும் அவன் அன்னை அலறிய அலறலைக் கேட்டான் கோவலன். அவள் பட்ட துயரத்தைக் கண்ட அவனுல் வாளா இருக்க முடியவில்லை. மூர்க்கன் விதியினுல் இறந்தான் என்று சொல்லி அவன் அன்னைக்கு ஆறுதல் கூற எண்ண வில்லை. முற்பிறவியில், எவரோ ஒருவருடைய பிள்ளையை இழப்பித்ததால், இப்பொழுது அன்னை தன் பிள்ளையை

இழந்துவிட்டாள் என்று சொல்லி அவளைத் தெருட்டவில்லை. ஆனால், அவ்வன்னையை நோக்கி "என்னைத் தங்கள் மகன்போல எண்ணுக. தங்களுக்கு உதவி செய்வேன்" என்று கோவலன் தைரியம் சொன்னான். அவ்வாறே மூர்க்கனுடைய அன்னைக்கு உறுதுணையாக இருந்து பசிப்பிணி நீக்கி வாழ்வுற வைத்தான். இதனால் அவனுடைய இரக்க உள்ளம் புலப்படும்.

## கண்ணகியின் மாண்பு

அந்தக் காப்பியத்தின் தலைவியாக அமைந்தவள் கண்ணகி. அவளும் தன்னேர் இல்லாத் தகைமையள். அவள் கணவனுடைய இன்பத்தைத் தன் இன்பமாகக் கொண்டவள், அவனுடைய துன்பத்தைத் தன் துன்பமாகக் கொண்டவள். கணவன் மகிழ்ந்தால் தானும் மகிழ்வது என்றும், கணவன் நொந்தால் தானும் நோவது என்றும் வாழ்ந்த மகளிர் சிலர் உண்டு. அவர் தம்முட் சிறப்புற்றவள் கண்ணகி. ஏனை மங்கையர் செய்ய ஒண்ணாத அருஞ்செயலைத் துணிவுடன் கண்ணகி செய்தமையால்தான், தனக்கு ஒப்பில்லாத பெருந்தகை என அவளைப்பற்றி அறிஞர்கள் உரைக்கிறார்கள்.

## கோவலன் கொலை

அவளுடைய கணவன் ஆகிய கோவலன் பொய்க் குற்றம் ஏற்றப்பட்டு, அரசனாற் கொல்லப்பட்டான். அந்தப் பொய்க் குற்றம் யாது ? அரசியினுடைய விலையுயர்ந்த சிலம்புகளை எவனோ ஒருவன் திருடிக்கொண்டு போய்விட்டான். அந்தத் திருட்டு பல நாட்களாகியும் வெளிப்படாமல் இருந்து வந்தது. அந்த நிலையில், ஒரு நாள் அக்கள்வன் கோவலனைத் தெருவிற் சந்தித்தான். கோவலன் தன் மனைவியின் சிலம்பினை விற்பதற்காகத்

துணியில் மூட்டை கட்டி எடுத்துக்கொண்டு போய்க் கொண்டிருந்தான். அவனும் எதிரே வரும் கள்வனைக் கள்வன் என்று உணராமல், சிலம்பினைக் காட்டி விலைக்கு வாங்கக்கூடியவர்கள் யாவர் என்பதை அவன் அறிவானா எனக் கேட்டான். அக்கள்வனோ, 'இதுதான் தக்க வழி' என மனத்தினுள் எண்ணிக்கொண்டு, கோவலனைக் காட்டிக்கொடுக்கக் கருதினான். தான் வஞ்சித்து எடுத்துக் கொண்ட சிலம்புகளைத் திண்ணமாக மறைப்பதற்கும் ஒருவனுக்குத் தண்டனை கொடுத்துவிட்டால் இழந்த சிலம்புகளின் எண்ணம் அரசியாருக்கு வராது எனத் தவறாகக் கருதிக்கொண்டும், அக்கள்வன் அரசனிடம் ஓடோடிச் சென்றான்.

அரசனோ அரசியின் உள்ளத்திற்கு இனிமை ஊட்ட வேண்டும் என்ற எண்ணத்துடன் அந்தப்புரம் சென்று கொண்டிருந்தான். அவ்வேளையில், கள்வன் அரசன் முன்னிலையிற் புகுந்து அரசியின் சிலம்புகளைத் திருடியவன் தன் வீட்டில் இருப்பதாகத் தெரிவித்தான். அரசனோ சிலம்புகளை எப்படியாவது பெற்று அரசிக்கு அளித்து விட்டால் அவள் உவகைகொள்வாள் என எண்ணியதாக, தக்கவாறு ஆராயாமல். ஓர் ஆணை இட்டுவிட்டான். அதன்படிக் கோவலன் கொல்லப்பட்டான்.

### பாபமும் பழியும்

கோவலன் உண்மையில் அரசியினுடைய சிலம்புகளைத் திருடவில்லை. வேறு ஒருவன் திருடியவன். தண்டிக்கப்பட்டவனோ கோவலன் ? பாபம் ஓர் இடம், பழி ஓர் இடம் !! கோவலன் திருடன் அல்லன் என்பதை நிறுவக் கூடியவள் அவன் மனைவி கண்ணகி ஒருத்திதான். கண்ணகிக்குத்தான் தெரியும் அவளுடைய சிலம்பின் அருமை. கண்ணகியிடம்தான் உண்டு மற்றொரு சிலம்பு.

அதனைக் கொண்டுதான் கோவலன் குற்றம் செய்தவன் அல்லன் என்பதை நிறுவுதல் வேண்டும். அதனை அவ் வாறு நிறுவினுள் கண்ணகி என்பதால்தான் அவள் பெருமை பெறுகிருள்.

தலைமகள்

கோவலன் பிறந்த ஊர் சோழநாட்டுக் காவிரிபுகும் பட்டினம். கண்ணகி பிறந்த ஊரும், வளர்ந்த ஊரும், வாழ்க்கையிற் புகுந்த ஊரும் அதுவே ஆகும். அவர்கள் இருவரும் செல்வத்தை இழந்த நிலையில், பாண்டி நாட்டு மதுரைக்குப் போய்ச் சேர்ந்துள்ளார்கள். சிலம்பினை விற்றுக் கிடைக்கும் பணத்தைக்கொண்டு, மதுரையில் வாணிகம் செய்யக் கோவலன் எண்ணியுள்ளான். மதுரை யில் விற்கப் புறப்பட்ட நேரத்தில்தான் வழிமருங்கே அக் கள்வனை அவன், கண்டான். அக்கள்வனுல் வஞ்சிக்கப் பட்டு அரசன் ஆராய்ச்சியின்மையாற் கொல்லப்பட்ட கோவலன் குற்றவாளி அல்லன் என்பதை அவ்வூரிற் கண்ணகிதான் எடுத்துக் காட்டுதல் இயலும். அதனை அரசன் முன் சென்று எடுத்துக் காட்டத் துணிந்தாள் கண்ணகி என்பதால்தான், அவள் தன்னேர் இல்லாத் தலைமகள் ஆகின்ருள்.

கண்ணகியின் பெருமிதம்

ஏனைய மகளிருட் பலர் கணவன் இறந்தான் எனின், ஊழ்வினை என்று கருதிக்கொண்டு அழுது பிற்பாடு ஆற்றிக்கொண்டிருப்பர். கண்ணகியோ அவ்வாறு நினைத்து வாளா அமைந்துவிடாமல், தான் பெண் என் பதை மறந்து, அரசன் முன்னிலையிற் போய்த் தன் கணவன் கள்வன் அல்லன் என்பதை உறுதியாக நிறுவி ஞள். தன்னுடைய சிலம்பில் மாணிக்கப் பரல்கள்

உள்ளன என்று அவள் அடையாளம் காட்டினாள். அரசியினுடைய சிலம்பில் முத்துக்களே உண்டு என்று அரசன் ஒப்புக்கொண்டான். கோவலன் முன்பு எடுத்து வந்ததற்கு இணையான சிலம்பு தன் கையில் இருந்ததை உடைத்தாள் கண்ணகி. மாணிக்கக் கற்கள் பீறிட்டு வெளிப்போந்தன. ஒரு மணி தெறித்து விழுந்ததைக் கண்ட அரசன், "யானே கள்வன்! யானோ அரசன்?" என்று சொல்லி உடனே உயிர்விட்டான். இவ்வாறு அரசன் வாயினாலேயே தன் கணவன் கள்வன் அல்லன் என்ற உரை பிறக்குமாறு செய்த பெருமை கண்ணகியினுடையது ஆகும். இந்தப் பெருமையினால்தான் அவளைத் தமிழுலகம் போற்றுகின்றது. அவள் அந்தக் காப்பியத்திற்குத் தலைவியாக அமைந்துள்ளாள்.

எனவே, சிலப்பதிகாரம் என்னும் பெருங்காப்பியம் கோவலன் கண்ணகி ஆகிய தம்நிகர் இல்லா இருவரைத் தலைவராகக்கொண்டு இயற்றப்பட்ட காப்பியம் என்பது அறியப்படும்.

## இளங்கோவடிகள்

அதனை இயற்றியவர் இளங்கோவடிகள் என்னுங் கவிஞர். அவர் சேர நாட்டிற் பிறந்தவர்; ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன் வாழ்ந்தவர். அவர் இளவரசராய் இருக்கும்பொழுதே துறந்துவிட்டார். அதனால், அவரை மக்கள் '**அடிகள்**' என்றார்கள். இளங்கோ என்றால், இளவரசன் என்பது பொருள். சேரன் செங்குட்டுவன் என்ற மன்னனின் தம்பி அவர். சோதிடன் ஒருவன் ஒரு நாள் இளங்கோவைப் பார்த்து, "**இவன் அரசாள்வான்**" என்று சொன்ன சொல் பலிக்காமல் இருப்பதற்காகத் துறந்தார் இளங்கோ. அண்ணன் இருக்கும்பொழுது தம்பி அரசாளுதல் பொருந்தாது

என்று கருதினதாலும், அண்ணன் மாள அரசாட்சி தமக்கு வந்து எய்துதல் ஆகாது என்று அவர் கருதிய தாலும், அவர் உடனே துறந்துவிட்டார் என்று அறிகி ரேம். அத்துணைப் பெருமை வாய்ந்த இளங்கோவடி களால் இயற்றப்பட்ட சிறப்பு உடையது சிலப்பதிகாரம் என்னுங் காப்பியம்.

## அருஞ்சொற்பொருள்

காப்பியம் - நூல். நிகர் - ஒப்பு. அவலஒலி - துன்ப ஓசை. களைதல் - போக்குதல். அலறல் - வாய்விட்டுக் கதறுதல். வாளா - சும்மா. தெருட்டவில்லை - தெளிய வைக்கவில்லை. தகைமையன் - பெருமையுடையவன். ஒண் ணுத - முடியாத. திண்ணமாக - உறுதியாக, அந்தப்புரம் - அரசியர் தங்கியிருக்கும் தனி இடம். ஆணை - கட்டளை. நிறுவுதல் - மெய்ப்பித்து நிலை நாட்டுதல், மருங்கு - பக்கம். பரல்கள் - சிலம்பின் உள்ளே அமைக்கும் கற்கள்.

## வினுக்கள்

1. ஐம்பெருங் காப்பியங்கள் எவை?

2. சிலப்பதிகாரம் காப்பியங்களில் தலை சிறந்ததாக மதிக்கப்படுதல் ஏன்?

3. கோவலனின் வீரக் குணத்தை எழுதுக.

4. கோவலனின் இரக்கச் செயல் என்ன?

5. கண்ணகியின் அருங்குணங்கள் யாவை?

6. இடஞ்சுட்டி விளக்குக;

(அ) "பாபம் ஓர் இடம்; பழி ஓர் இடம்"

(ஆ) "யானே கள்வன்! யானே அரசன்?"

7. கண்ணகி தன்னேர் இல்லாத் தலைமகள் ஆகின் ருள்—எவ்வாறு?

8. கண்ணகி தமிழுலகம்போற்றும் காப்பியத் தலைவியாக விளங்குவது எதனால்?

9. இளங்கோவடிகளைப்பற்றிச் சிறு குறிப்பு வரைக.

பயிற்சி

1. சொற் பிரித்து எழுதுக: சிலப்பதிகாரம், இளங்கோவடிகள், செயலாற்றிய, காவிரிப்பூம்பட்டினம்.

2. எதிர்ச்சொல் எழுதுக: பெரும்பான்மையன, மகிழ்வது, ஐம்பெருங்காப்பியங்கள்.

3. வாக்கியத்தில் அமைத்திடுக:

(அ) 'கொய்யோ முறையோ'

# 3. நல்லமரமும் நச்சுமரமும்

[டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளை, பி.ஏ., பி.எல்.]

### கானகம் செல்லல்

ஒருநாள் ஓர் அரசிளங் குமரன் தன் தோழனைத் துணைக்கொண்டு கானகத்தில் வேட்டையாடச்சென்றான். அங்கு, அவன் விரும்பியவாறு வேட்டையாட வேங்கை யும் வேழமும் அகப்படாமையால், எங்கும் அலைந்து திரிந்து அலக்கணுற்றான் பசியால் மெலிந்து, வெயிலால் உலர்ந்து, இருவரும் தளர்ந்து சோர்ந்தார்கள் ; அப் போது, நெடுந்தூரத்தில் ஒரு சிற்றூர் தோன்றக்கண்டு, அவ்வூரை நோக்கி மெல்ல நடந்து செல்வாராயினர். கதிரவன் வெம்மையால் அரசிளங் குமரன் தலைநோயுற் றுத் தன் தோழனது தோளைப் பற்றிக்கொண்டு வழி நடந்தான். அவ்வூரின் அருகே வந்தபோது, இருவரும் மெய்சோர்ந்து, நா வறண்டு, அடிவைத்து நடப்பதற்கும் வலியற்றவராயினர். அந்நிலையில் இருவரையும் இன் முகங்கொண்டு எதிர்சென்று அழைப்பதுபோல் இளந் தென்றல் எழுந்து வந்தது. அம் மெல்லிய பூங்காற்றின் இனிமையால் புத்துயிர் பெற்ற நண்பர்கள், அகமும் முகமும் மலர்ந்து, தென்றல் எழுந்து வந்த திசை நோக் கிச் சென்றார்கள்.

### அயர்வு நீங்கல்

அவ்வழியில், இளந் திரைகளோடு இலங்கிய நன் னீர்ப் பொய்கை யொன்று அமைந்திருந்தது. அப் பொய்கையில் விளங்கிய செந்தாமரையில் அன்னங்கள் அமர்ந்து துயின்ற அழகு கண்ணைக் கவர்ந்தது. நற்று

மரைக் கயத்தில் துயின்ற நல்லன்னத்தைக் கண்ட இள வரசன் துணைவனை நோக்கி,

" தோயும் திரைகள் அலைப்பத்
தோடார் கமலப் பள்ளி
மேய வகையில் துஞ்சும்
வெள்ளை யன்னம் காணாய் "

என்று, தான் பெற்ற இன்பத்தை இனிது எடுத்துரைத்தான். அப்பொய்கையில் இலங்கிய அழகிய மலர்கள் முகமலர்ந்து இருவரையும் அருகே அழைப்பனபோல அசைந்தன. அவ் வாவியின் தண்மையும் செம்மையுங் கண்ட இருவரும், தாய் முகம் கண்ட சேய்போல் மனம் களித்து அந் நன்னீரைப் பருகி மகிழ்ந்தார்கள். அருந் தாகத்தால் வருந்திய இருவருக்கும் தண்ணீரை எடுத்து வழங்கும் தன்மைபோல் அடுக்கடுக்காக அலைகள் கரை யருகே வந்து சேர்ந்தன. தாகம் தணிந்து, மனமும், மெய்யும் குளிர்ந்த பின்னர், இருவரும் அக் குளத்தின் ஈரக் கரையில் இனிதமர்ந்து அங்கு வீசிய இளங்காற்றை நுகர்ந்து இன்புற்றார்கள். அப்போது அவ் வாவியின் அருகே கொத்துக் கொத்தாகப் பொன்நிறக் கனிகளைத் தாங்கி, குளிர்நிழல் விரித்து நின்ற மரமொன்றைக் கண்டார்கள், அதன் நிழலிலே தங்கி இளைப்பாற எண்ணி, இருவரும் அங்குச் சென்றனர்.

## பசி நீங்கல்

கதிரவன் வெம்மையைத் தடுப்பதற்கு ஓங்கிய பாசிலைப் பந்தர் வேய்ந்தாற் போன்று விளங்கிய மரத்தின் நிழலில் இருவரும் அயர்ந்த உறக்கத்தில் ஆழ்ந்தார்கள். சில நாழிகை சென்ற பின்னர், தோழன் துயிலொழிந்து எழுந்தான்; எங்கும் பசுமை நிறமும், பறவையின் ஒலி

யும், பழத்தின் மணமும் நிறைந்திருப்பினும், பசியின் கொடுமையைப் பொறுக்கலாற்ருது வருந்தினுன்; கற்பகத் தருவெனக் கவின்பெற விளங்கிய மரக் கொம்புகளை நயந்து நோக்கினுன்; அவற்றில் பொன்னிறமான பழங் கள் கொத்துக் கொத்தாய் எம்மருங்கும் இலங்கக் கண் டான்; அப்பொழுதே அம் மரக்கிளைகளின் வழியாக மேலே சென்று இருவரது அரும்பசியையும் தீர்ப்பதற்குப் போதிய கனிகளைக் கொய்து வந்து, துணைவனைத் துயிலி னின்றும் எழுப்பினுன். கனிகளின் நிறத்தைக் கண்டும், நன்மணத்தை நுகர்ந்தும், தீஞ்சுவையைத் துய்த்தும், இருவரும் இன்புற்ருர்கள். பின்னும் சிறிதுபொழுது அம் மரத்தின் நிழலில் அமர்ந்திருக்கையில், அரச குமாரனது தலைநோய் மிகுந்தது. அதனைத் தீர்க்கும் வகையறியாது தோழன் திகைத்து, ‘எவரேனும் இவ்வழி வாராரோ’ என்று எதிர் நோக்கி இருந்தான்.

தலைவலி

இவ்வாறு இருக்கையில் அவ்விடத்தை நோக்கி ஒரு முதியவன் வந்து சேர்ந்தான். “தலைக்குத்துத் தீர்க்கும் மருந்து தங்களிடம் உண்டோ?” என்று தோழன் அவனை வினவினுன். அப்பொழுது முதியோன் புன்னகை பூத்து, “கையில் வெண்ணெயிருக்க நெய் தேடி அலையும் வெள்ளியரும் உண்டென்பதை இன்று அறிந்தேன்; இம் மரத்தின் பட்டையில் சிறிது செதுக்கி, அதன் சாற்றைத் தலையிற் பிழிந்தால் எவ்வகைத் தலைக் குத்தும் தீர்ந்து விடுமே” என்று சொல்லி அப்பாற் சென்ருன். அதை அறிந்த தோழன் அளவிலா மகிழ் வடைந்து அம்மரப் பட்டையின் சாற்றை மன்னன் மைந்தனது தலையிற் பிழிந்தான்; சிறிது நேரத்தில் அர சிளங் குமரனது தலைக் குத்து அறவே ஒழிந்தது.

### இயற்கை கற்பிக்கும் பாடம்

அந்நிலையில், தோழன் தலைநோய் தீர்ந்த இளவரசனை நோக்கி, "ஐயனே! நாம் இருவரும் கானகம் சென்றது முதல் இதுவரையும் நிகழ்ந்த செயல்களைப் பார்த்தாயா? நாம் பசியாலும் வெயிலாலும் நலிந்து, மெய் தளர்ந்து, வருந்தும் நிலையில் இப்பொய்கை நம்மை அன்புடன் அழைத்து இன்முகம் காட்டித் தாகம் தணித்துத் தளர்வை மாற்றியது. அப்பால், இம்மரம் நாம் தங்கியிருக்கக் குளிர் நிழல் தந்து பசியாறப் பழங்கள் அளித்துத் தலைநோய் தீர்க்கவும் தனி மருந்தாய் அமைந்தது. இத்தன்மையை நோக்குங்கால், நல்லார் கைப்பட்ட செல்வத்தின் தன்மை நன்கு விளங்குமன்றோ? வறுமையால் வருந்தி வந்தவரை இனிய முகத்தோடு ஏற்று, அவரது குறையை நிறை செய்வதே அறிவுடைய செல்வர் செயலாகும். ஆற்றுவழியாகவும், ஊற்றுவழியாகவும் நன்னீரைத் தன் அகத்தே நிரப்பிக் கொள்ளும் இப் பொய்கை போல், அறிவுடையார், நல்வழிகளால் ஈட்டிய பெரும் பொருள் நிறைந்த பண்ணைகளாய் விளங்குவார்கள்.

### ஊருணியும் பயன்மரமும்

நீர் நிறைந்த பொய்கை எப்பொழுதும் தண்மை வாய்த்து விளங்குதல்போல, அறிவுடைய செல்வரும் ஈரம் வாய்ந்த நெஞ்சினராய் இலங்குவார்கள். தாகத்தால் வருந்தி வருவோர்க்குத் தடையின்றி நீர்வழங்கும் தடாகம் போல், கல்வியும் செல்வமும் பூத்த மேலோர் வறிஞர்க்கு வரையாது பொருள் வழங்கும் வள்ளல்களாய் விளங்குவார்கள். இன்னும், தமக்கென வாழாது பிறர்க்குரியாளராய் வாழும் பெரியார்பால் அமைந்த செல்வம், ஊருணியின் நீர்போல ஊராருக்கே முழுவதும் பயன்படுவதாகும். இதனாலேயே,

" ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு"

என்று திருவள்ளுவர் அருளிப்போந்தார். இன்னும் பழுதறு பழங்களைத் தாங்கி நிற்கும் இப் பயன் மரம் தன் இனிய பழங்களால் பசிநோய் அகற்றி, குளிர் நிழலால் களைப்பை மாற்றி, பட்டையால் பிணியைப் போக்கி, பல வகையாகப் பயன்படுதல்போல, அறிஞரிடம் அமைந்த செல்வம் வறியார்க்குப்பலவகையிற் பயன்படுதலாலேயே,

" பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தற்றுல் செல்வம்
நயனுடை யான்கட் படின்"

மருந்தாகித் தப்பா மரத்தற்றுல் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்"

என்னும் நாயனுர் பொருளுரை எழுந்தது. ஆகவே, தன்மை வாய்ந்த தடாகம் போலவும், பழங்கள் நிறைந்த பயன்மரம் போலவும், வாழ்வதே பண்புடைமையாகும்" என்று இனிதாக எடுத்துரைத்தான், அரசிளங் குமரனும் அதன் உண்மையை அறிந்து தோழன் கூறிய பொருளுரையைப் பொன்போற் போற்றினன்.

நச்சுமரம்

அப்பால், இருவரும் தமது ஊரை நோக்கிச் சென்றனர்; செல்லும் வழியில் ஒரு சிற்றூர் குறுக்கிட்டது. அதன் நடுவே போகும்போது இருவரும் முன் கண்டறியாத ஒரு மரத்தினைக் கண்டு வியந்து நின்றார்கள். அம் மரம் கவையாகிக் கொம்பாகிக் காட்டு மரம்போல் ஓங்கி வளர்ந்திருந்தது. அதன் கொம்புகளிலும், கிளைகளிலும் கூரிய முள் நிறைந்திருந்தது. இலைகளும் தழைகளும் இல்லாமல் பட்ட மரம்போல் நின்ற அதன் கிளைகளில், செவ்வையாய்ப் பழுத்த பழங்கள் கொத்துக் கொத்தாய்

அமைந்து கண்களைக் கவர்ந்தன. அம் மரத்தைக் கண்டு இருவரும் வியந்து நிற்கையில் அவ்வழியாக ஓர் இளைஞன் வந்து சேர்ந்தான்.

அவன் மரத்தருகே நின்ற இருவரையும் இனிது நோக்கி, "ஐயா! நீங்கள் இருவரும் அயலூரார் என்பதை அறிந்தேன். ஏனெனில், இவ்வூரார் எவரும் இப்பாழான பழுமரத்தைக் கண்ணெடுத்தும் பாரார்கள். இம்மரத்தில் எந்நாளும் இலைகளும் தழைகளும் இல்லாமையால் விலங்குகளும் இதனடியில் நில்லாமல் விலகிப்போகும்; கண்களைக் கவரும் வனப்பு வாய்ந்த இக்கனிகளும் நச்சுக் கனிகளாய் இருத்தலின், உண்டாரைக் கொன்று விடும். இம்மரத்தின் கொம்புகளை விறகாய் வெட்டி எரிப்பதற்கும் இதனிடம் அமைந்த முள் இடையூருயிருக்கின்றது. இப் பாழ் மரம் கடுங்காற்றில் அகப்பட்டு முறிந்து வேரற்று விழவேண்டுமென்று இவ்வூரார் இறைவனை நாளும் வழி படுகின்றுர்கள். இம்மரம் என்று விழுமோ, அன்றே இவ்வூராருக்கு நன்ருகும்" என்று அதன் தன்மையை விரிவாகக் கூறி முடித்தான்.

## பேதையர் கைப்பட்ட செல்வம்

அதைக்கேட்ட அரசிளங்குமரன் முன்னே தங்கி இளைப்பாறிய மரத்தின் நலத்தையும், பின்னே கண்ட மரத்தின் கொடுமையையும் ஒப்பு நோக்கி, நச்சுமரத்தில் அமைந்த நன்னிறக் கனிகள், பேதையர் கைப்பட்ட செல்வம்போல் பிறர்க்கு இடர் விளைப்பன வாகும் என்று எண்ணி வருந்தினன்;

" நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று "

என்னும் பொய்யா மொழியின் பொருளைத் தெளிந்தான்.

இத்தகைய செல்வம் நிறைந்த பேதையர் நிலத்துக்குச் சுமையாகவும் உலகத்திற்கு உற்ற வசையாகவும் அமைந்திருத்தலால், அன்னுர் அழிந்து ஒழிவதே நாட்டுக்கு நன்மை பயப்பதாகும். அறிவுடைய செல்வரை உலகம் போற்றும்; அறிவற்ற செல்வரை உலகம் தூற்றும். அறிவுடைய செல்வனது ஆக்கம் கண்டு உலகம் களிக்கும்; அறிவிலாச் செல்வனது அழிவைக் கண்டு உலகம் மகிழும். அறிவுடைய செல்வன் தன் பொருளைத் தக்கவாறு பயன்படுத்தி இம்மையிற் புகழும், மறுமையில் இன்பமும் எய்துவான். அறிவிலாச் செல்வன் பயன்பட வாழும் பண்பறியாப் பேதையனுய் இம்மையிற் பழியும், மறுமையில் துன்பமும் எய்துவான்;

"நல்லார்கட் பட்ட வறுமையின் இன்னுதே
கல்லார்கட் பட்ட திரு"

என்பது என்றும் பொய்யாமொழியே யாகும்.

## அருஞ்சொற்பொருள்

வேங்கை – புலி. வேழம் - யானை. அலக்கண் - துன்பம். உலர்ந்து - காய்ந்து. அகம் - மனம். இலங்கிய - விளங்கிய. துயின்ற - உறங்கிய. தோயும் – படியும். அலைப்ப - அசைக்க. தோடு - இதழ். மேய - பொருந்திய. நுகர்ந்து - துய்த்து. வாவி – குளம். கவின் - அழகு. நயந்து – விரும்பி. வறிஞர் - யாதுமற்றவர்.

## வினுக்கள்

1. ஊருணி, பயன்மரம் ஆகிய இவ்விரண்டினையும் வள்ளுவர் யாருக்கு ஒப்பிட்டுள்ளார்? விளக்குக.

2. நச்சுமரம் பழுத்தது போலாம்—எது? விளக்குக.

3. கல்வியறிவில்லாதவனிடத்தில் உண்டான செல்வம் எதற்கு ஒப்பாகும் விளக்குக.

பயிற்சி

1. பொருள் கூறுக :—தோடு, வாவி, கவின், பயன், நயன், நச்சுமரம்.

2. பிரித்து எழுதுக :—அலக்கணுற்றுன், இன்முகம், நன்னீர், அடுக்கடுக்காக, அவ்விடம், அளவிலா.

3. சேர்த்து எழுது :—நோய்+உற்று, நல்ல+தாமரை, இனிது+அமர்ந்து, இன்பம்+உற்ருர்கள்.

4. எதிர்ச்சொல் தருக :—செந்தாமரை, குறை.

5. உவமையை விளக்குக :—'தாய் முகம் கண்ட சேய் போல்', 'வெண்ணெயிருக்க நெய் தேடி அலேவார்போல'

# 4. பச்சையப்ப வள்ளல்

[புலவர். அன்பு கணபதி]

## தலையாய அறம்

ஏழை ஒருவனுக்கு எழுத்து அறிவித்தல் அறங்களில் எல்லாம் தலை சிறந்தது. இதனையே பாரதியார்,

"இன்ன றுங்கனிச் சோலைகள் செய்தல்
இனிய நீர்த்தண் சுனைகள் இயற்றல்;
அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆல யம்பதி னாயிரம் நாட்டல்;
பின்ன ருள்ள தருமங்கள் யாவும்
பெயர்வி ளங்கி யொளிர நிறுத்தல்,
அன்ன யாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோர் ஏழைக் கெழுத்தறி வித்தல்."

என்று பாடிச் சென்றார்.

பொருட்செல்வம் கொடுக்கக் குறைவது; கல்விச் செல்வமோ கொடுக்கக் கொடுக்க வளர்வது. கொடுப்பவனையும் வளர்க்கும்; கொள்பவனையும் வளர்த்து உயர்த்தும். இது கல்விச் செல்வத்திற்குரிய தனிச் சிறப்பு; பொருட் செல்வம் அறியாத ஒன்று.

## பண்டைத் தமிழகம்

பழைய தமிழகம் இந்த இரண்டு செல்வங்களாலும் மேம்பாடுற்று இருந்தது. செல்வத்தைப் பற்றிக் கவலைப் படாது கலைகளை வளர்த்தனர் பழைய புலவர்கள். அக் கலை வளர்க்கும் புலவர்களை...கலைஞர்களை—மூவேந்தரும், பாரி, அதிகமான் போன்ற வள்ளல்களும் புரந்தனர். இவ்வாறு பழைய தமிழகம் புலவராலும் புரவலராலும்

மேற் கூறிய இரண்டு செல்வங்களும் சிறந்து உலகியல் ஈடு இணையற்றதாக விளங்கியது. இரண்டாயிரம் ஆண்டு கட்கு முற்பட்ட தமிழகத்தின் நிலை இது.

ஆனால் இடைக்காலத்திலும் பிற்காலத்திலும் நிலைமை மாறியது. அவ்வப்போது நாட்டில் ஏற்பட்ட படையெடுப்பு, மக்களின் முயற்சி இன்மை, ஏனையவர் சூழ்ச்சிக்கு ஆளான வெள்ளை உள்ளம் முதலிய காரணங் களால் கல்விச் செல்வமும் பொருட் செல்வமும் மிகுதியுங் குறைந்தன.

அறப்புரட்சி

சென்ற நூற்றாண்டில் அத்தி பூத்தாற் போல் நம் தமிழகத்தில் ஆங்காங்கு விளங்கிய ஒரு சில செல்வந்தர் தாம் அரிதின் முயன்று ஈட்டிய பொருட் செல்வத்தை நாட்டு மக்களின் கல்விக்காகச் செலவிட்டுள்ளனர். இத் தகைய நல்ல உள்ளம் படைத்த ஒரு சிலர் தோன்று வதற்கு முன்பு சத்திரம் சாவடி கட்டுதல், குளம் வெட்டு தல், கோவில் எழுப்புதல் முதலிய செயல்களே சிறந்த அறம் எனச் செல்வர் எண்ணினர். இவைகட்காகத் தம் பொருள் அனைத்தையும் செலவிட்டனர். மதுரையில் நான்காம் சங்கம் கண்ட **பாண்டித்துரை தேவர்**; பச்சை யப்பன் கல்வி நிலையங்கள் தோன்றுவதற்குக் காரணராக நின்ற பச்சையப்ப வள்ளல்; தமிழ்ப் பல்கலைக் கழகமாம் அண்ணாமலைப் புல்கலைக் கழகத்தைத் தோற்றுவித்த **அரசர். அண்ணாமலை**; தம்பொருளை எல்லாம் கலைக்கூடங் கள் பலவற்றிற்கு வழங்கியதோடு அமையாது தம் வாழ் நாளின் இறுதியில் காரைக்குடியில் பல கலைகளையும் வளர்க்கும் கல்விக் கூடம் கண்ட **வள்ளல் அழகப்பர்** ஆகிய இத்தகைய பெருமக்களே அறத்துறையில் அண் மைக் காலத்தில் புரட்சி செய்தனர்.

இவர்களுடைய அறச் செயல் நாட்டுக்குப் பல நல்ல மணிகளை வழங்கி வருகிறது; இனியும் வழங்கிவரும். இவர்களுடைய முன் நோக்கிய எண்ணத்தால் வாழ்வு பெற்ற குடும்பங்கள் பல. சுருங்கச் சொல்வோமானல் தமிழகத்தின் பெருமையை, தமிழ் இனத்தின் பழஞ் சிறப்பை, நாகரிகப் பண்பாட்டை, கலைத் திறத்தை உலகமே கண்டு வியக்கும் அளவுக்கு இவர்கள் தொண்டு நின்றது எனலாம்.

வழிகாட்டி

இவ்வாறு புரட்சி செய்த வகையில் முதல்வராக, காலத்தால் முற்பட்டவராக நிற்பவர் பச்சையப்பர். சென்னைக்கு வடமேற்கே இருபத்தொருகல் தொலைவில் உள்ளது பெரிய பாளையம் என்னும் ஊர். நம் பச்சை யப்ப வள்ளல் அவ்வூரில் 1754-ஆம் ஆண்டு பிறந்தார். இவர் தந்தை பெயர் விசுவநாத முதலியார்; தாயார் பெயர் பூச்சியம்மாள். இவர் பிறப்பதற்குச் சில திங்க ளுக்கு முன்பே தந்தையார் மறைந்தார். பச்சையப்பன் என்ற இளமைப் பெயர் பெற்ற இவரை இவரது தமக்கை மார் இருவருடன் சேர்த்து இவர் அன்னையார் சென் னைக்கு அழைத்துச் சென்ருர். வாழ்வு தேடிச் சென்னை வந்த இவர்களைப் பௌனி நாராயணப் பிள்ளை என்ற அன்புள்ளங் கொண்ட செல்வர் ஒருவர் ஏற்று ஆதரித் தார். அன்று சென்னையிலிருந்த துபாஷ்களில் இவர் ஒருவர். அருந்தமிழோடு ஆங்கிலமுந் தெரிந்து ஆங்கில அதிகாரிகளுக்கும் நாட்டு மக்களுக்கும் இடையே நின்று நல்லுறவை ஏற்படுத்தி வந்த சிலர் துபாஷ் என அழைக்கப்பட்டனர். துவி+பாஷி அதாவது இரண்டு மொழிகள் அறிந்தவர் என்பது பொருள்.

புலமையும் தொழிலும்

நாராயணப் பிள்ளை பச்சையப்பனின் அன்னையாரைத் தம்முடன் பிறந்த தங்கையாக எண்ணி நடத்தினர். பச்சையப்பரையும் பள்ளிக்கு அனுப்பினர். அக்கால வணிக முறைக்கு ஏற்ற கணக்கு, கடிதம் எழுதுதல் ஆகிய இரண்டும் பச்சையப்பருக்குக் கற்றுக் கொடுக்கப் பெற்றன. பச்சையப்பர் ஆங்கிலமும் பயின்று திறம் பெற்றார். இளமையிலேயே வாணிபத் துறையில் மிகுந்த நாட்டங் கொண்டார். நாராயணப் பிள்ளையின் ஒப்பம் பெற்று வணிகத்துறையில் வாழ்க்கையைத் தொடங்கினர். ஆங்கில வணிகர்களின் தூதுவராக இருந்துபொருள்களை ஏற்றுமதி இறக்குமதி செய்யுந் துறையில் சிறு அளவில் பொருள் ஈட்டினர். இவரது தொழில் நுட்பம் உணர்ந்த நாராயணப் பிள்ளை **நிக்கோலஸ்** என்ற ஆங்கில வணிகரிடம் துபாஷாக இவரை அமர்த்தினர். இப்பதவி தமிழகம் முழுமையும் சுற்றிப் பயணம் செய்யப் பச்சையப்பருக்குத் துணை செய்தது. இதனால் பொருளும் சேர்ந்தது.

1776-இல் பெரும் அளவில் பச்சையப்பர் தம் வாணிபத் துறையை வளர்த்தார். பொருள் கொடுக்கல் வாங்கலாகிய வட்டிக் கடைத் தொழிலில் சிறந்தவராக விளங்கினர். கிழக்கிந்திய கும்பினியாருக்குச் சொந்தமான நிலங்களின் வரி வசூல் செய்து தரும் பணியையும் ஏற்று நடத்தினர். அடுத்துக் கர்நாடக நவாப்பிற்கும் ஆங்கில வணிகருக்கும் நடுவில் பெருந் தரகராக நின்று வாணிபம் செய்து பொருள் ஈட்டினர். அதனோடு இவ்விருவரின் நன்மதிப்பினையும் பெற்றார்.

பின்னர், ஆங்கிலப் படையினருக்கு உணவுப் பொருள் முதலியவற்றைத் திரட்டித்தரும் பணியில் தலைவராக விளங்கிய 'சலைவன்' என்ற ஆங்கில அதிகாரிக்கு

உதவி செய்யும் துணைவர் பதவியை ஏற்ருர். இப் பணியைத் திருச்சிராப்பள்ளியில் தங்கி, திறம்படச் செய்து வந்தார். நேர்மை, நாணயம், செயல்திறம் உழைப்பில் வெற்றி ஆகிய இவற்ருல் பச்சையப்பர் ஆங்கில அதிகாரிகளின் நல்லெண்ணத்தைப் பெற்ருர். தஞ்சை அரசருக்குத் துணையாக இருக்குமாறு ஆங்கில அதிகாரிகளால் தஞ்சைக்கு அனுப்பப் பெற்ற இவர். தஞ்சையில் தங்கி இரு பக்கங்களிலும் நல்லெண்ணம் வளர்க்கும் தூதுவராக விளங்கினர். இப்பணியினல் பச்சையப்பர் ஏராளமான பணத்தை ஈட்டினர். இந்தக் காலத்தில் இவர் ஈட்டிய பொருளின் மதிப்பு ஏறக்குறைய இருபது இலட்சம் ரூபாயாகும். சென்னை திரும்பிய பச்சையப்பர் கோமளீசுவரன் பேட்டையில் ஒரு பெரிய வீட்டைக் கட்டினர். இவர் பெயர் தாங்கிய தெரு ஒன்று இப்பேட்டையில் இன்றும் நின்று நிலவுகிறது.

பச்சையப்பர் அறச்செயல்

1791-இல் தில்லையிலுள்ள ;அம்பல வாணர்க்குப் பெரும் பொருளைத் தேவதானமாக எழுதி வைத்தார். தில்லைக் கோவிலின் மூலத்தானத்தையும் கிழக்குக் கோபுரத்தையும் புதுப்பித்தார். சிறந்த முறையில் குடமுழுக்கு விழாவும் செய்தார். இந்தக் கீழைக் கோபுரத்தின் நுழைவாயிலில் பச்சையப்பர் தம் உடன் பிறந்த சுப்பம்மாளுடன் சிறப்பாக நிற்கும் காட்சியை இன்றும் நாம் காணலாம்.

1792-இல் சென்னையிலிருந்து மீண்டும் தஞ்சை வந்தார். இவர் முதல் மனைவியாகத் தம் சகோதரி பெண்ணை மணந்திருந்தார். அவருக்குப் பிள்ளை இல்லை. இது காரணமாகத் தஞ்சையில் இரண்டாம் மனைவியாக ஒரு மங்கை நல்லாளை மணந்தார். ஒரு பெண் மகவு பிறந்தது.

இக்காலத்தில் இவர் உடல் நலங்கெட்டது. நோயாளி யானர். நோய் கடுமையாகவே தஞ்சையை விடுத்துக் குடந்தைக்குச் சென்ருர். இவருக்கு ஆண் மகவு இல் லாத காரணத்தால் இவர் தேடிய செல்வம் அனைத்தை யும் நாட்டுக் குழந்தைகளுக்குப் பொதுவாக்கினர். இவ் வாறு தாம் அரிதின் முயன்று ஈட்டிய பொருள் அனைத் தையும் நாட்டு உடைமையாக்கும் தம் நல்விருப்பத்தை எழுத்தில் பொறித்து ஆவணக்களரியில் பதிவு செய்தார். இத்தகைய இவரது நல்லெண்ணம் பதிவு பெற்ற நாள் 1794-மார்ச்சு 22-ஆகும்.

## இறுதிக் கடிதம்

பச்சையப்பர் தம் முடிவு நாள் நெருங்குவதை உணர்ந்தார். இளமையில் தம்மை ஆதரித்து ஆளாக்கிய நல்லவராம் நாராயணப் பிள்ளைக்குப் பின் வரும் எழுத் துக்களைத் தம் இறுதிக் கடிதமாகப் பொறித்து அனுப் பினர். அது வருமாறு :—

“என் முடிவு நெருங்குகிறது. கணக்கு எல்லாவற் றையும் ஒழுங்கு படுத்துங்கள், பிறருக்கு நான் கொடுக்க வேண்டியவற்றை ஒரு காசும் பாக்கி இல்லாமல் உடனே கொடுத்துக் கணக்குத் தீருங்கள்.”

இறுதியாகப் பச்சையப்பர் திருவையாற்றுக்குச் சென்ருர். சில நாட்களில் அதாவது அவரது இறுதி விருப்பம் பதிவு பெற்ற சில நாட்களுக்குப் பிறகு ஐயாற் றில் காலமானர். பச்சையப்பர் இவ்வுலகை விட்டுச் செல் லும்போது அவருக்கு வயது நாற்பதே.

## குணநலன்கள்

சென்னை முதல், குமரி வரை உள்ள தமிழ் நாட்டின் பெரிய ஊர்களில் எல்லாம் பச்சையப்பர் செய்த அறம் விளங்குகிறது. காசியில் கூட இவர் அறம் வளர்கிறது.

பச்சையப்பர் பெரிய துபாஷாக இருந்தவர் ; ஆனல் எளிமையும் ஈரமனமுங் கொண்டவர்; கடவுளுக்கு அஞ்சுபவர்; ஏழைக்கு இரங்குபவர்; தம் உழைப்பையும் செல்வத்தையும் ஏழைக்கு அளித்தவர்.

பச்சையப்பர் நல்ல அழகான தோற்றம் கொண்டவர். பரந்த நெற்றியும், ஒளியும் அறிவும் துலங்கும் இருகண்களும் பெற்றவர். எளிய உடையை உடுத்துவார்; ஆனல் அவ்வுடை மதிப்புடையதாகவும் கவர்ச்சி உடையதாகவும் இருக்கும். அவர் எங்குச் சென்ருலும் முன் அணியில் இருப்பார். பச்சையப்பர் பிறந்து வளர்ந்த சூழல் மிகவும் ஏழ்மையுடையது. தன்னம்பிக்கையாலும் நன் முயற்சியாலும் வாழ்வின் உயர்ந்தபடியை அடைந்தவர் வள்ளல் பச்சையப்பர். மேலும் தூய நடத்தையாலும் செயல் திறத்தாலும் தம் காலத்திலேயே மிகத் தாழ்ந்த நிலையிலிருந்து மிகவுயர்ந்த நிலையை அடைந்தார். எவ்வளவோ பொருளீட்டினர்; இறுதியில் எல்லாவற்றையும் மக்களுக்கு ஆக்கினர்.

சென்னை, காஞ்சி, தில்லை ஆகிய இடங்களில் பல கல்விக் கூடங்கள் அவர் பெயரால் அவர் உழைப்பின் அடிப்படையால் எழுந்து நின்று நாட்டை வளர்க்கின்றன. சிறப்பாகத் தமிழகத்தின் தலை நகராம் சென்னை சீனக் கடைத் தெருவில் ஓங்கி உயர்ந்து நின்று பச்சையப்பன் என்ற பைந்தமிழ்ப் பெயர் தாங்கிப் பசுமையுடன் நிற்கும் கட்டிடம் சென்னை வருவார் அனைவரும் பார்க்க வேண்டிய பொருள்களில் ஒன்று ஆகும்.

தன்னம்பிக்கை, ஊக்கம், தன்னுழைப்பு, ஏழைகளிடத்து இரக்கம், நாட்டுப் பற்று, இத்தகு நல்ல குணங்களைப் பச்சையப்பரிடமிருந்து நாம் பெற்றுப் பயன் பெறுவோமாக.

## அருஞ்சொற்பொருள்

ஏழை - கல்வி அறிவில்லாதவன். எழுத்து - கல்வி. புரந்தனர் - காப்பாற்றினர். புரவலர் - வள்ளல். நாட்டம் - நோக்கம். ஒப்பம் - உடன்பாடு. ஈரமனம் - அன்பு உள்ளம்.

## வினாக்கள்

1. சிறந்த அறமாவது யாது ?

2. கல்விச் செல்வம் தனிச் சிறப்புடையது எப்படி ?

3. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகத்தின் நிலை யாது ?

4. அறத்துறையில் புரட்சி செய்த பெரு மக்கள் யாவர் ?

5. பச்சையப்பர் வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கிப் பத்து வரிகளில் எழுதுக.

## பயிற்சி

1. பொருள் தருக: ஏழை, புரவலர், ஈரமனம், பயின்றார், ஈட்டினார்.

2. பிரித்து எழுதுக: தமிழகம், ஆங்காங்கு, துபாஷ், நல்லெண்ணம்.

3. சேர்த்து எழுதுக: பொருள்+செல்வம். கோ+இல். தன் + நம்பிக்கை.

4. எதிர்ச்சொல் வரைக: அண்மை, ஏற்றுமதி.

5. வாக்கியத்தில் அமைக்க: ஈடு இணையற்ற, ஆவணக் களரி.

6. இடங்கூறி விளக்குக: ‘அத்தி பூத்தாற் போல்.’

# 5. விலங்குகளின் மாநாடு

[அ. முத்துசாமிப் பிள்ளை, பி.ஏ.]

## மாநாடு

" ஒன்றுபட்டா லுண்டு வாழ்வே நம்மில்
ஒற்றுமை நீங்கி லனைவர்க்கும் தாழ்வே "

என்னும் பாரதியார் பாட்டு, என்றும் நம் செவியில் ஒலித்துக் கொண்டிருக்க வேண்டும். தனிப்பட்டவரின் முயற்சியால் வெற்றி பெறுவதைக் காட்டிலும், சங்கத்தின் வாயிலாக வெற்றி காணல் எளிதும் உறுதியுமாம். அதனுல் தான் நாட்டில் அங்கு இங்கு எனுதபடி எங்கும் மாநாடுகள் அடிக்கடி கூடுகின்றன. பதினெட்டாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் விலங்குகளின் பொதுக்கூட்டம் நடைபெற்றது. நாற்றிசையிலிருந்தும் விலங்குகள் ஆயிரக்கணக்கில் வந்து குழுமின. விலங்கரசர் மாநாட்டில் தலைமை தாங்கினுர். வரவேற்புக் குழுவின் தலைவராகிய நந்திதேவர், வந்த அன்பர்களை வரவேற்ருர்.

## வரவேற்புரை

" நண்பர்களே ! என் நாதன் திருவருளைப் பெறுவீர்களாக! உங்கள்வரவு நல்வரவாகுக! வேண்டியவசதிகளுக்காக ஆவன செய்துள்ளோம். குறைகாணின் நிறையாகக் கொள்க. நாட்டை விட்டுக் காட்டிற் கூடியிருப்பதற்கும் ஒரு கருத்துண்டு என்பது, பின் தெரியவரும். நாற்காலிகளாகிய நமக்கு நாற்காலிகள் தேவையில்லை. படியின் மடியில் நாம் அமர்வோம். நம் அரசரே, இம்மாநாட்டின் மாபெருந் தலைவராக அமைந்தது, நமது பெறற்கரிய

பெரும் பேருகும், நம் தலை தாழ்ந்த வணக்கத்தை அவருக்குச் செலுத்துவோமாக!'' என்று பேசி முடித்தார்.

தலைவர் முன்னுரை

அவைத் தலைவர் தமது முன்னுரையைப் பின் வருமாறு நிகழ்த்தினர். "அன்புடைய குடிமக்களே! ஆசி மொழி கூறுகிறேன். உங்கள் நல்வாழ்வே நமதாட்சியின் நோக்கம். யானை, நம் சேனைத் தலைவர்; குதிரை, படை வீரர்; நரி, அரசதந்திரி; நாய், நன்றியுள்ள சேவகன்; காளை, கடும் உழைப்பாளி; பசு, ஞானகுரு; இராமதூதன் நம் அரசியல் அறிஞன். குன்ருத குடிவளங் கொண்டது நம் நாடு. நம்மைக் கனவில் கண்டாலும் அஞ்சி நடுங்கத் தக்க அற்ப மனிதன், நம்மை அடக்கியாள முற்பட்டுவிட்டான்; செய்ந்நன்றி மறந்து விட்டான். அவனுல் விளையும் அல்லலுக்கோ அளவில்லை. கானகத்தில் புகுந்து வேட்டையாடி, நம் குடிமக்களைக் கொல்லுகிருன்; அமைதியைக் குலைக்கிருன். காட்டில் வாழும் கடும் புலியைக் கூட்டிலடைத்தும், கானில் திரியும் மானைச் சிறை செய்தும், நமது உரிமை வாழ்வைக் கெடுத்தும் வருகிருன். உழைப்பாளிகளுக்குப் போதிய உணவளியாத கருமியாகி விட்டான். பரம குருவாகிய பசுவையும், வதைக்கத் தொடங்கி விட்டான். இவன் தொல்லை எல்லை கடந்து விட்டது இனியும் இவ்வின்னலைப் பொறுக்க முடியாது. இக்கொடுமையினின்றும் நீங்க ஒரு வழி தேடவேண்டும், அனைவரும் தீர ஆலோசித்து ஒரு முடிவு காணவேண்டும். சிறு மனிதன் செயல் கண்டு அஞ்சாதீர்கள். சூழ்ச்சியால் அவனை வெல்லும் வழியைத் தேடுக! இதற்காகவே இம் மாநாடு கூட்டப்பட்டது. நன்கு சிந்திப்போம்; நல்லதொரு வழியைக் காண்போம். உங்கள் முதிர்ந்த அறிவும், பழுத்த பட்டறிவும் துணை செய்யும் என நம்புகிறேன்.''

கரியாரின் பேருரை

கேட்டவர்களின் மனம் கொதித்தது; கோபக்கனல் கொழுந்துவிட்டெழுந்தது. எல்லோரும் ஒருமனதாய், மனிதனை வெறுத்தனர்; சீற்றங்கொண்டு தூற்றினர். கூட்டத்திற் குழப்பம் உண்டாகியது. பெரியார் வேழம் எழுந்து, "அன்பர்களே! கொதிப்படைய வேண்டாம். அமைதியாக ஆராய்ந்து பார்ப்போம். எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும், அப்பொருளின் உண்மையை ஆராய்ந்து பார்த்தலே அறிவுடையார் செயல். நம்மைக் கண்டு அஞ்ச வேண்டிய அற்ப மனிதனுக்கு, நம்மை அடக்கியாளும் ஆற்றல் எப்படி உண்டாகியது? உருவில் சிறியன் எனினும், அவன் அறிவிற் பெரியன். அறிவின் ஆற்றல் அளப்பரியது. அது, செயற்கரிய செயலைச் செய்து முடிக்கும். மனிதன் விலங்கு நாட்டின் எல்லையுட் புகுந்தான்; நமதாட்சியில் தலையிட்டான்; நம்மை அடிமைகளாக்கி விட்டான். இஃது அவன் அறிவின் திறம். அறிவுடையார், எச்செயலையும் எவ்வாற்றானும் இனிதே முடித்துக்கொள்வர். செல்வமும் திறனும் உடன் சேரப் பெற்றிருப்பினும், அறிவில்லார் தம் செயல்களைச் செவ்வனே முடித்து இன்பங் காண வல்லவர் அல்லர்."

> "அறிவுடையார் எல்லாம் உடையர்; அறிவிலார்
> என்னுடைய ரேனும் இலர்."

எனத் தம் பேச்சை முடித்தார்.

பசுவாரின் பொன்னுரை

பின், பசு பேசியது, "அறிவின் ஆற்றலைப்பற்றி நம் பெரியார் விரிவுரை செய்தார். அஃது ஓரளவு சரியெனினும், முற்றும் ஒப்புக்கொள்வதற்கில்லை. 'அறிவுடையார் எல்லாம் உடையர்' என்பதும் ஒரு வரம்பிற்குட்பட்டது.

இவ்வுண்மையைக் கூறிய ஆசிரியரே, பிறிதோரிடத்தில் 'அறிவினன் ஆகுவது உண்டோ?' என்று வினவுகிறார். அறிவு மட்டும் எல்லாம் தரவல்லதன்று. அன்பும் அதனுடன் சேரவேண்டும். பண்பும் அதனுடன் பொருந்தவேண்டும்.

"நம்முள்ளும் நல்லறிஞர்கள் பலருளர். நரியாரின் பேரறிவும், நாயாரின் நல்லறிவும் நாடு நன்கறியும். கவிக்குலமகனின் கலைத்திறம் என்னே! சொல்லின் செல்வன் அல்லவா இராமதூதனானன்?· குருவியின் கூட்டையும் தேனீயின் வீட்டையும், புலவரும் பாராட்டிப் பாடியுள்ளனர். இவை, அறிவின் விளைவல்லவா? நம்மினத்தவர்க்கும் அறிவுண்டு. ஆனால், மனிதனுக்கும் நமக்குமுள்ள வேறுபாடுதான் என்ன? தக்க இன்ன, தகாதன இன்ன என்று ஆய்ந்து நல்லன கொண்டு அல்லன தள்ளும் பகுத்தறிவே வேறுபாடு. நாமும் நம் உணவைத் தேடிக் கொள்ளுகிறோம்; இனத்தைப் பெருக்குகிறோம். அவன் செயல்களும் இவையே யெனின், நம்மில் இம்மியும் அவன் உயர்ந்தவனில்லை. எனவே, மனிதனை நம்மினின்றும் பிரித்துச் சிறப்புச் செய்வது, பகுத்தறிவே யாகும். தீயன தள்ளித் தூயன கொள்ளும் தன்மையே நல்லொழுக்கமெனப்படும். பண்பெனப்படுவதும் இதுவே, இதுவே, தலையாய அறிவு. பண்பாடில்லாதவன் சிறப்பு எய்தான். கூரிய அறிவுடையாரும் மக்கட்பண்பிலரேல், மரத்திற்கு ஒப்பாவர்."

"அரம்போலும் கூர்மையரேனும் மரம் போல்வர்
மக்கட் பண்பு இல்லாதவர்."

"நம்மினத்தவர்க்கு இப்பண்பு சிறிதுமில்லை. மெலியாரை வலியார் வாட்டி வதைப்பதே, நம்முள் பெரு வழக்காய் விட்டது. கோழி புழுவைத் தின்பதும், கோழியை

நரி உண்பதும், நரியைப் புலி விழுங்குவதும் காட்டின் சட்டமாகி விட்டது. யானையும் புலியைக் கண்டு அஞ்சும்; மானும் மருண்டு ஓடும். நானும் இவ்விதிக்கு விலக்கல் லேன். நம் அரசன் ஆட்டையும் அடித்தான்; நாட்டை யும் கெடுத்தான். காட்டின் சட்டத்தை நாட்டிவிட்டான். இதனால் வந்தது நம் இழிவு. பண்பாடும் இரக்கமும் இன் மையே, இவ்விழிவுக்குக் காரணம். இவ்விரண்டுமே மனி தனை உயர்த்துவன. கண்ணோட்டத்தானும் பண்பாட் டானுமே, மனித உலகு சீரும் சிறப்புமுற்று வாழ்கின் றது. இவை யில்லையேல், அவன் பெருமை குன்றும்; உலகு கேடுறும். இஃது அழியா உண்மை. நேர்மை நெறியிற் செல்லும் உயர்குடி மக்களே, உலகின் ஆணி வேர். உலகு உய்வதும் உத்தமரால். இன்னோர் இல்லை யேல், உலகு அழிந்தொழிவது திண்ணம்.

"பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அது இன்றேல்
மண்புக்கு மாய்வது மன்."

"காந்தியடிகளின் மறைவுக்குப் பின், சீர் குலைந்த இந் நாட்டின் நிலைமையே, போதிய சான்றாகும். அவர் ஆணை வழி நின்று பணியாற்றி வரும் நல்லோர் சிலரால் நாடு நன்னிலையை அடைந்து வருகிறது. அவர்களே இந் நாட்டின் உயிர்நாடி; உயிரின் இருக்கை; பண்பாட்டின் பண்டகசாலை; சான்றாண்மைக்கு அணி; சீர்கேட்டிலும் சிதையாது நாம் சிறப்புற்று வாழ்வதற்குக் காரணம்."

கரியாரின் பேருரையும், பசுவாரின் பொன்னுரையும் கேட்ட நரியார், பின் வருவன பேசலுற்றார்.

### நரியாரின் நல்லுரை

"நண்பர்களே! நாம் நன்மொழிகள் பல கேட்டோம். அரும்பெரும் உண்மைகளைத் தெரிந்தோம். இனி, நாம்

ஆவன செய்ய முயல்வோம்; முற்படுவோம். நம்மை யடக்கி ஆண்டுவரும் மனிதனின் ஆற்றலைக் கேட்டோம். அது தங்கும் இடம் வெளியாகியது. மறைமொழி அம்பல மாயிற்று. பண்பாடே, அவன் பெருமைக்குக் காரணம். அவனை வெல்ல வேண்டின், அதனை அழிக்க வேண்டும். கண்ணோட்டமும் பண்பாடும், அவனது அழியா அரண். இக்கோட்டையுள் தங்கியுள்ள வரையில், அவனை வெல்லுதல் அரிது. எனவே, சூழ்ச்சியால் அவனை இவ் வரண்மனையிலிருந்து வெளியேற்ற வேண்டும்.

“அறவழியில் நிற்கும் அவனை, மறவழியிற் புகுந்து மறைமுகமாக அழிக்கவேண்டும்; பெருமை மாய்ந்தால் சிறுமை குடிபுகும். அதற்கான வழியில் நாம் எல்லோரும் ஒன்று சேர்ந்து, உறுதியாய் உழைக்க வேண்டும். நம் குல முன்னேற்றத்திற்காக, எத்துணை இடர்ப்பாட்டையும் பொருட்படுத்தல் கூடாது. அவனது வீழ்ச்சிக்காக, நம் வாழ்க்கையின் நலனை யிழக்க வேண்டும்; பெரும் தியாகம் செய்ய முற்பட வேண்டும். போர் தொடுப்போம்; உயிரையும் விடுப்போம்; எப்படியும் அவனைக் கெடுப்போம்.

“மனித உலகில் குழப்பத்தை யுண்டாக்குவோம். உள்நாட்டுக் கலகத்தை விளைவிப்போம். அமைதி குலைந்தால் அவன் அழிவது உறுதி. மனிதனுக்கு நெருங்கிய நண்பனும் இராமதூதரை ஏவி, உள்ளத்தைப் பற்றி ஊசலாடச் செய்வோம். மதத்தை நல்குமாறு யானையைத் தூண்டுவோம். புலியின் சீற்றத்தையும், பூனையின் கள்ளத்தையும் பங்கிட்டுக் கொடுப்போம். நானும் என் நடிப்பால் மக்களை வஞ்சிக்கின்றேன். மானைக் காட்டி மானைப் பிடிப்பதுபோல, நம்மைக் காட்டி அவனை நாமாக்கவேண்டும். நம் சூழ்ச்சியால் மனிதனை விலங்காக மாற்ற வேண்டும்.

"நாட்டின் விடுதலைக்காக உயிர் துறந்த வீரர்களைப் போல, நாமும் நம் விடுதலையின் பொருட்டு, ஆயிரக்கணக்கில் அவன் முன்னிலையில் இறப்போம்; அவன் வயிற்றில் சமாதி அடைவோம். தன் ஊனைப் பெருக்க அவன் நம் ஊனைத் தின்பான். அருள் அவனை விட்டு அகலும். அருள் நீங்கின் அவன் அழிவான்; ஒழிவான். அருளற்ருர் மற்று ஆதலரிது. ஊனுண்பானை அருள்தேவி கண்ணெடுத்துப் பாராள். அவன் மருள் கொள்வன்; மாண் பிழப்பன்; விலங்கு இனத்தில் சேர்வன்."

"தன் ஊன் பெருக்கற்குத் தான்பிறிது ஊன் உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்."

### மனிதன் விலங்காளுன்

இச் சொற்பொழிவு கேட்ட மாநாடு மகிழ்வுற்றது. நரியாரின் சொற்படி நடப்பதாய் முடிவு செய்யப்பட்டது. ஊக்கம் கிளம்பியது; ஆரவாரம் பெருகியது; எழும்பிய ஓசை எட்டுத் திசையும் முட்டியது. முடிவின்படி உண்மையாக உழைப்பதாய் எல்லோரும் உறுதிமொழி கூறினர். கூட்டம் கலைந்தது. ஆக்க வேலை வெகு ஊக்கமாக நடைபெற்றது. வகுத்ததிட்டம் வாய்ச்சொல்லளவில் நில்லாது. வகைவகையாய் உருப்பெற்று வளர்ந்தது. உண்மை உழைப்பு ஊதியம் தந்தது. மனக்குரங்கால் மக்கள் ஆட்டப்பட்டனர்; ஆசைக்கு அடிமையாயினர். 'யான் எனது' என்னும் முனைப்புடன் மதுவுண்டார் போல மயங்கித் திரிந்தனர். பொருள் வாழ்க்கை பெருகிற்று. அருள் வாழ்க்கை அருகிற்று. மருளும் இருளும் மனத்தைக் கௌவின. கள்ளமும் சூழ்ச்சியும் உள்ளத்திற்குடிகொண்டன. தடிப்பும் முனைப்பும் களிநடம் புரிந்தன. தன்னலப் பேய், தலைவிரித்துத் தாண்டவமாடியது. பொதுநலம் போய் மறைந்தது; கண்ணோட்டம் கடும் ஓட்டம் எடுத்

தது; பண்பாடு பட்டபாடு பஞ்சும் படாது. மனிதத் தன்மை நாளுக்கு நாள் குறைந்துகொண்டே வந்தது. மனிதன், சென்று சென்று அணு அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து விலங்கானுன். உயர்திணை அஃறிணையாயிற்று. பண்பாட்டின் கோட்டை பாழாகியது. அருள் என்னும் அரண் அழிந்தது. மனிதப் பண்பு மறைந்தது; விலங்கின் தன்மை வீறிட்டெழுந்தது.

மனிதனை மனிதன் விழுங்குகிருன்; நையப் புடைத்து நாசமாக்குகிருன்; பிறர் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையாய் நிற்கிருன். வலியார் முன் மெலியார் கையேந்தித் தவிக்கின்றனர். புலிமுன் பசுபோல நடுங்குகின்றனர். தனிப்பட்ட மனிதன் செயலேயே, தனிப்பட்ட நாடும் செய்து வருகிறது. இதுவே தற்கால நிலைமை, என்னே கொடுமை!

மாநாட்டின் வெற்றி

இருபதாம் நூற்ருண்டின் முற்பகுதியில், மறுமுறையும் இம்மாநாடு கூடியது, வெற்றிச் சின்னங்கள் காணப்பட்டன. நரியாரின் கனவு நனவாகியது. விதைத்த எண்ணங்கள் விளைந்துவிட்டன. 'செயலில் மனிதன் விலங்கானுன்' என்ற சங்கநாதத்துடன் கூட்டம் கலைந்தது. ஒருவன் மற்றவனை அடக்கியாள முற்பட்டு விட்டான். பேராசைப் பேய் அவனைப் பிடர் பிடித்து உந்தியது; உலுக்கியது. 'உடல் வலிமை கொண்டவனுக்கே உலகம் உரிமை' யென்று அவன் தோள் கொட்டினுன். 'பணத்திற்கே' வழிபாடு என்று கைத்தாளமடித்தான். தானே விலங்கான பின், பிற விலங்கை மறந்தான். அழிவுத் துறையில் மக்கள் இறங்கினர்; இழிவை நாடி யடைந்தனர். இனத்தானுக்குத் தொல்லை கொடுப்பதையே தம்

தொழிலாகக் கொண்டனர்; விலங்கு வேட்டையை மறந்தனர்.

பொருளாதார உலகின் மாயவலேயிற் சிக்குண்ட மனிதன், அருள் வாழ்வை யறவே மறந்தான். உயர் நிலேயினின்றும் வழுக்கி வீழ்ந்தான். ஆக்கவேலே அழிவு வேலேயாயிற்று. மன அமைதியோ மறைந்தது! மறைந்தே விட்டது. நிலேயான இன்பம் எங்கும் இல்லே. துன்பமே பொங்கித் ததும்பி நிற்கின்றது. அந்தோ! அறிவுடைய மாந்தர்க்கோ இவ்விழிநிலே! இனியாயினும் பழம் ஏட்டைப் புரட்டிப் பார்க்க! பண்பாட்டின் பெருமையை உணர்க! இருள் நீக்கிப் பேரொளி காண்க!

## அருஞ்சொற்பொருள்

வாயிலாக - இடமாக. குழுமின - கூடின. நாதன்—தலேவன். நாற்காலி - விலங்கு; காரணப் பெயர். படி—பூமி. மடி - இடம். வேழம் - யானே. அல்லல் - துன்பம். கான் - காடு. பட்டறிவு - அநுபவம். தூற்றினர்—இழிவாகப் பேசினர். வரம்பு – அளவு. கவி - குரங்கு. கண்ணேட்டம் - மனம் இரங்கல். நெறி - வழி. சிதையாது - கெடாது. பண்பாடு - தன்மையறிந்து நடத்தல். அருகிற்று - குறைந்தது. சென்று சென்று - அடுக்குத் தொடர். அரண் - காவல். வீறிட்டு - மேலோங்கி.

## விஞக்கள்

1. நந்திதேவர் தம்வரவேற்புரையில் என்னகூறினர்?

2. அவைத் தலேவர் முன்னுரையில் மொழிந்ததென்ன?

3. பெரியார் வேழம் பேசியது யாது?

4. ஞான குருவாகிய பசு பேசியது என்ன?

5. நரியார் கூறிய கருத்துரை யாது?

6. உண்மை யுழைப்பு ஊதியம் தந்தது எவ்வாறு?

பயிற்சி

1. பொருள் எழுதுக :—வேழம், படி, கவி, கண்ணோட்டம்.

2. சேர்த்து எழுதுக :—மிருகம் + இந்திரன், இ + மா நாடு. பெரிய + அறிவு. நன்மை + அறிவு, கேடு + உறும்.

3. பிரித்து எழுதுக :—நாற்றிசை, நாற்காலி, நமதாட்சி, பட்டறிவு, கோபக்கனல், அளப்பரிது.

4. எதிர்ச்சொல் எழுதுக :—எளிது, குறை, சிறியன், சிலர், நல்லன, தீயன, மெலியார், அறவழி, பெருமை.

5. உவமையை விளக்குக :—'மானைக் காட்டி மானைப் பிடிப்பது போல.'

# 6. நாட்டின் பொதுக்கடன்

[திரு. சர். ஆர். கே. சண்முகம் செட்டியார்]

ஆறுமுகம்: என்ன வேலுசாமி; நேற்றுத் துரை சாமி இங்கே வந்தபோது, அவரைக் கண்டதும் நீங்கள் தலைமறைவாகப் போய் விட்டீர்களே! உங்களுக்கும் அவருக்கும் ஏதாவது கருத்து வேறுபாடு உண்டா?

வேலு: துரைசாமிக்கும் எனக்கும் எந்தவித வேறுபாடும் இல்லை. பாங்கியிலிருந்து அவருக்கு ரூபாய் 5000, கடன் கொடுத்திருக்கிறேன். மூன்று ஆண்டாக வட்டியும் கொடுக்கவில்லை; அசல் தொகையும் ஒரு ரூபாய் கூடக் கொடுக்கவில்லை. எவ்வளவோ முறை அவரைக் கேட்டும் பயன் ஏற்படவில்லை. இப்போது அவரைப் பார்ப்பதென்றால் எனக்கே வெட்கமா யிருக்கிறது.

ஆறுமுகம்: நீங்கள் சொல்வது மிகவும் வேடிக்கை யாக இருக்கிறதே! கடன் வாங்கியவர் வெட்கப்பட வேண்டியது சரி. அதல்லாமல் கடன் கொடுத்தவர் வெட்கப் படுவதென்றால்...! உங்கள் பதிலைக் கேட்டால் சிரிப்பு வருகிறது.

வேலு: 'இடுக்கண் வருங்கால் நகுக' என்று தானே வள்ளுவரும் கூறியுள்ளார். சிரிக்க வேண்டியது தான்; வேறு என்ன செய்வது? என்னைப் போல் பணம் வாடிக்கை நீங்களும் செய்தால் பணத்தைக் கடன் கொடுப்பவர்களுடைய துன்பங்கள் உங்களுக்கும் தெரியும். கடன் வாங்கியவன் பயப்படும் காலம் மலையேறிவிட்டது. கம்பர் இப்போது இராமாயணம் எழுதுவதாயிருந்தால் 'கடன் கொடுத்தார் நெஞ்சம் போலும் கலங்கினன்

இலங்கை வேந்தன்' என்று பாட்டை எழுதியிருப்பார். கடன் பட்டவர் மிரட்டும் காலமல்லவா இந்தக் காலம்!

ஆறுமுகம்: நீங்கள் சொல்வது ஒரு முறையில் வேடிக்கையா யிருந்த போதிலும் அதில் நிறைய உண்மை இருக்கிறது. உலகத்தில் பெரிய பெரிய நாட்டு ஆட்சியாளர்களும் கூடக் கடன்காரர்கள் தாம். இங்கிலாந்து போன்ற செல்வாக்குப் படைத்த நாடுகளுக்குத் தான் கடன் மிகுதி. இங்கிலாந்துக்கு இப்போது சுமார் 1500 கோடி பவுனுக்குமேல் கடன் இருக்கிறது. இன்னும் கோடிக் கணக்காகக் கடன் வாங்கிக் கொண்டே இருக்கிருர்கள்.

வேலு: இச் செய்தியைப் பற்றி உங்களிடம் தெரிந்து கொள்ள வேண்டுமென்று எனக்கு நீண்ட நாளாய் எண்ண முண்டு. நல்லதொரு வாய்ப்பும் இப்போது வாய்த்தது. அரசியலார் செலவிற்காகக் குடிகளிடமிருந்து பலவகையான வரிகளை வாங்குகிருர்களே, கடன் ஏன் வாங்கவேண்டும்? வரவு மீறிச் செலவு செய்து கடனளியாவது யாராயிருந்தாலும் நீதியா?

ஆறுமுகம்: ஆட்சியாளர் குடிமக்கள் ஆகிய எவரேயாயினும், வரவை ஒட்டிச் செலவு செய்ய வேண்டியதுதான் நீதி என்பதை ஒப்புக்கொள்ள வேண்டியதுதான். ஆனல் யாரும் கடனே வாங்கக்கூடாது என்று முடிவு கட்ட முடியாது. கடன் வாங்குவது சரியா? இல்லையா? என்பது, எதற்காகக் கடன் வாங்கப்பட்டது? என்பதைப் பொருத்திருக்கிறது. எடுத்துக் காட்டு ஒன்று சொல்லுகிறேன் கேளுங்கள். உங்களுடைய வருவாய் ஆண்டு ஒன்றுக்கு 20,000 ரூபாய் என்று வைத்துக் கொள்ளுவோம். உங்களுடைய எல்லாச் செலவுகளும் இதற்கு மேல் போகக்கூடாது. ஆனல் நீங்கள் செய்யும் வாணி

கத்திற்கு 50,000 ரூபாய் வேண்டியிருந்தால் அதற்காகக் கடன் வாங்கலாம். இவ்வாருன செலவுகளுக்கு வருவாயி விருந்து எடுக்கக் கூடாத பல செலவுகள் இருக்கின்றன. மேட்டூர் அணைக்கட்டு, பைக்காரா மின்சாரவேலை, புகை வண்டிப்பாதைகள் போடுவது, சர்க்கார் தொழிற்சாலைகள் ஏற்படுத்துவது இவை போன்ற வேலைகளை அரசியலார் ஆண்டு தோறும் செய்கிருர்கள். இவற்றிற்கெல்லாம் கோடிக் கணக்கான பணம் தேவையாயிருக்கிறது. வரி மூலமாகப் பெறும் பணத்திலிருந்து இந்தச் செலவுகளைச் செய்ய வேண்டு மென்ருல் இன்னும் ஏராளமான வரி போடவேண்டி வரும். ஆகையால் இம்மாதிரிச் செலவு களுக்கு அரசியலார் கடன் வாங்குவது வழக்கம். அணைக் கட்டுகள், இருப்புப் பாதை, பைக்காரா—இவைகளிலி ருந்து வருவாய் வருமல்லவா ? இவ் வருவாயைக் கொண்டே கடனுக்கு வட்டி செலுத்துவது வழக்கம். இவ் வகைக் கடன்களுக்கு வருவாயுள்ள கடன் என்று பெயர். இவ்வகையான செலவுகளுக்குக் கடன் வாங்குவதில் எவ்வகைத் தடையுமில்லை. இது போன்ற செலவுகளைச் செய்வது மிகவும் இன்றியமையாதது. ஏனென்ருல் இவற் றின் மூலமாகத்தான் ஒரு நாட்டின் செல்வமும், வளப் பமும் மிகும். மேட்டூர் அணைக்கட்டினுல் நூருயிரக்கணக் கான ஏக்கரா நிலங்கள் சாகுபடி செய்யப்படுகின்றன. பைக்காராத் திட்டத்திஞல் கைத் தொழிற்சாலைகள் தோன்றிவிட்டன. இவையெல்லாம் நம் நாட்டின் செல் வத்தை மிகுதிப் படுத்து மல்லவா ?

வேலு : அப்படியானுல் அரசியலார் வாங்கும் கடன் எல்லாம் இம்மாதிரியான வேலைகளுக்குத்தான ?

ஆறுமுகம் : இல்லை, இல்லை. நான் கூற வந்த செய்தியை இன்னும் முடிக்கவில்லை. அரசியலார் கடன்

படுவதற்கு வேறு இரண்டு காரணங்களும் உண்டு. ஒரு நாடு போரில் தலையிட்டால் போர்ச் செலவிற்காகக் கடன் வாங்க வேண்டிய நெருக்கடி ஏற்பட்டு விடும். போர்ச் செலவு முழுமையும் வரிப் பணத்திலிருந்து சரிப்படுத்த முடியாது. கடன் வாங்கித்தான் ஆகவேண்டும்.

சில வேளைகளில் வரி ஈட்டியதற்கு மேல் அரசியலாருக்குச் செலவு ஏற்பட்டு விடும். நாட்டில் பஞ்சம், வெள்ளப் பெருக்கு முதலிய கொடுமைகள் உண்டாகும் போது, வரி குறைந்து விடுவதல்லாமல் செலவும் மிகுதியாகி விடும். இம்மாதிரி வரவுக்கு மேல் செலவு ஏற்படும் ஆண்டுகளில் அரசியலார் கடன் வாங்க நேரிடும். மேற் சொன்ன இரண்டு காரணங்களால் ஏற்படும் கடனுக்கு ஈடாக முதலீடாவது வருவாயாவது இல்லையாகையால், இவைகளுக்கு ஆண்டு தோறும் ஈட்டும் வரிகளிலிருந்துதான் வட்டி கொடுக்க வேண்டும். இவ்வகையான கடனுக்கு வருவாய் இல்லாத கடன் என்று பெயர் கொடுக்கலாம்.

வேலு: அப்படியானால் ஒரு நாட்டின் கடன் நிலைமையைப் பற்றி ஆராய்ச்சி செய்யும் போது, அந்த நாட்டுக்கு மொத்த கடன் எவ்வளவு என்று தெரிந்தால் மட்டும் போதாது. கடன் தொகையில் வருவாய் உள்ள கடன் எவ்வளவு என்று தெரிந்தால் மட்டும் போதாது. கடன் தொகையில் வருவாய் உள்ள கடன் எவ்வளவு ? வருவாயில்லாத கடன் எவ்வளவு ? என்று கணக்குத் தெரிய வேண்டும் அல்லவா ?

ஆறுமுகம்: நீங்கள் சொல்வது சரியான பேச்சு.

வேலு: நல்லது. அரசியலார் யாரிடமிருந்து இவ்வளவு கடனையும் வாங்குகிறார்கள் ?

ஆறுமுகம்: அந்த நாட்டின் மக்களிட மிருந்தே தான் கடன் வாங்குகிறார்கள். இந்தக் கடனுக்கு உள் நாட்

டுக் கடன் என்று பெயர். சில நேரங்களில் வெளிநாடுகளி லிருந்தும் வாங்குவதுண்டு. இதற்கு வெளிநாட்டுக் கடன் என்று பெயர். கடன் வாங்கும் முறையையும் சொல்லிவிடுகிறேன். நம்முடைய இந்திய அரசியலாருக் குப் பதினைந்து கோடி ரூபாய் தேவை என்று வைத்துக் கொள்வோம். நாட்டின் நிதி நிலைமையை எண்ணிஎன்ன வட்டி கொடுக்க வேண்டும்? எத்தனை ஆண்டு தவணை போட வேண்டும்? என்று முடிவு செய்து கொண்ட பிறகு செய்தித் தாள்களில் இச் செய்தியை வெளியீடு செய்வார் கள். "இந்திய அரசியலாருக்குப் பதினைந்து கோடி ரூபாய் கடன்; நூற்றுக்கு மூன்று ரூபாய் வட்டி; 1953-55 ஆண்டு" என்று வெளியீடு வந்தால் நம்முடைய அரசிய லார் பதினைந்து கோடி ரூபாய் கடன் மக்களிடமிருந்து வாங்குகிருர்களென்றும், கடனுக்கு ஆண்டு ஒன்றுக்கு மூன்று ரூபாயாக வட்டி கொடுக்கப்படுமென்றும் பொருள் படும். குறித்தநாளில் விருப்பமுள்ளவர்கள் பொருள் நிலையங்களின் மூலம் விண்ணப்பம் கொடுத்து அவர்கள் விருப்பத்திற்கேற்ற தொகையைச் செலுத்தலாம். அப் படிச் செலுத்தும் தொகைக்குச் சான்ருக ஒரு பத்திரம் கிடைக்கும். இதற்குத் தான் " சர்க்கார் பாண்டு " என்று பெயர். ஆறுமாதங்களுக்கு ஒரு முறை வட்டியை வாங் கிக் கொள்ளலாம். குறிப்பிட்ட தேதியில் அசல் தொகை யும் வந்து விடும். அரசியலாரிடம் இம்மாதிரிக் கடனுகப் போட்டு வைக்கும் பணத்தைப் பற்றிக் கவலைப்பட வேண் டியதில்லை.

**வேலு :** வெளி நாட்டுக் கடன் என்று சொன் னீர்களே, எதற்காக வெளி நாடுகளில் ஒரு நாட்டு அரசி யலார் கடன் வாங்க வேண்டும்.

**ஆறுமுகம் :** நம்முடைய இந்தியா அரசியலார் அடிக் கடி இங்கிலாந்தில் இருப்புப் பாதைப் பொறிகள், வண்டி

கள், கைத் தொழிற் பொறிகள் இவை போன்ற பல பொருள்களை வாங்குகிறார்கள். இங்கிலாந்தில் வாங்கும் பொருள்களுக்கு ஆங்கில நாணயமாக விலை கொடுக்க வேண்டும். இதற்காக இங்கிலாந்திலேயே மக்களிடம் கடன் வாங்குவது வழக்கம். இங்கிலாந்தில் நம் அரசியலார் வாங்கும் கடனுக்கு **ஸ்டர்லிங் கடன்** என்று சொல்வர். ஏனென்றால் நம்முடைய நாணயத்தை நாம் எப்படி ரூபாய் என்று சொல்லுகிறோமோ அதுபோல் இங்கிலாந்தில் உள்ள நாணயத்திற்கு 'ஸ்டர்லிங்' என்று பெயர். உள் நாட்டிலோ அல்லது வெளி நாட்டிலோ ஒரு அரசாங்கத்தார் வாங்கும் கடன்களுக்குப் பொதுவாக நாட்டின் பொதுக்கடன் என்று சொல்லலாம்.

**வேலு :** நன்றி, நண்பரே! இன்று நான் ஒரு நல்வாய்ப்பையே பெற்றேன். உம்மோடு உரையாடியதிலிருந்து பொருளியலைப் பற்றி நன்கு அறிந்து கொண்டேன்.

" பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள் "

என்ற வள்ளுவர் வாய்மொழி எவ்வளவு உண்மையானது என்பதனைத் தெளிவாக உணர்ந்தேன். இதைப் போன்று பயன்தரும் மொழிகளைப் பேசாத மக்களை வள்ளுவர் 'மக்கட் பதடி' என்றன்றோ தூற்றியுள்ளார்? அன்பரே! இதைப் போன்று நல்லறிவு வளர்ச்சிக்கான வழியிலே பேச நான் ஆசைப்படுகிறேன்.

**ஆறுமுகம் :** அதற்கென்ன—அப்படியே ஆகட்டும்; மீண்டும் நாளை நான்கு மணியளவில் கூடுவோம். வணக்கம்.

**வேலு :** வணக்கம்.

[பிரிந்து சென்றனர்]

## அருஞ்சொற் பொருள்

இடுக்கண் – துன்பம். நகுக – சிரித்திடுக. வாய்த்தது - கிடைத்தது; நேரிட்டது. ஈட்டியது – வாங்கியது. தவணை - கெடு. பதடி – பதர்.

## வினாக்கள்

1. இடம் சுட்டி விளக்குக—“கடன் கொடுத்தார் நெஞ்சம் போலும் கலங்கினான் இலங்கை வேந்தன்.”

2. கடன் வாங்குவது சரியா ? இல்லையா ?—காரணத்துடன் விளக்குக.

3. உள் நாட்டுக் கடன், வெளி நாட்டுக் கடன்—விளக்கம் தருக.

4. அரசியலார் வெளி நாட்டில் கடன் வாங்குவதேன் ?

## பயிற்சி

1. பிரித்து எழுதுக : பார்ப்பதென்றால், பொருத்திருக்கிறது.

2. சேர்த்து எழுதுக : அதற்கு+ஆக, என்+என்றால், போர்+செலவு.

3. எதிர்ச் சொல் தருக : பெரிய, வரவு, நீதி, நாளை.

4. வாக்கியத்தில் அமைத்தெழுதுக : மலையேறி விட்டது. வரவுக்கு மீறியசெலவு. போரில் தலையிட்டால். ‘மக்கட் பதடி.’

5. ‘இடுக்கண் வருங்கால் நகுக’ ‘பொருளல்லதில்லை பொருள்’—இம் மேற்கோள்களுக்குரிய இடத்தினை விளக்குக.

# 7. புதிய இலக்கியங்கள்

[புலவர். கா. கோவிந்தன், எம்.ஏ.]

## தமிழின் பழமை

பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதி தமிழ் இலக்கிய வாழ்வில் குறிப்பிடத்தக்க சிறப்புடைத்து. ஆங்கிலம் அறிந்து, அம்மொழி இலக்கியங்களையும் அவ்விலக்கியங்கள் குறித்து எழுதப் பெற்ற பல்வேறு ஆராய்ச்சி நூல்களையும் கற்றதன் பயனுய்த் தமிழ் மக்களிடையே தனித்தமிழ் ஆர்வம் தலையெடுக்கத் தொடங்கிற்று. தமிழ் தனித்து இயங்கவல்லது. வடமொழியைக் காட்டிலும் வளம் மிகுந்தது. உலக மொழிகளுள் நனிமிகப் பழைய மொழியாய ஏப்ரூ மொழியைக் காட்டிலும் பழமை உடையது என்ற உண்மைகளை உணரத் தலைப்பட்டனர். "சதுமறை ஆரியம் வருமுன் சகமுழுதும் நினதாயின், முதுமொழி நீ, அநாதி என மொழிகுவதும் வியப்பாமோ" என்றும் "யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் காணேம்" என்றும் பாடிப் பெருமை கொண்டனர்.

## விழிப்புணர்ச்சி

இவ்விழிப்புணர்ச்சியின் பயனுய்ப் பழைய தமிழ் இலக்கியங்களைத் தேடிப் பதிப்பிக்கவும், பயிலவும், அவற்றைப் பல்லாற்றுனும் ஆராய்ந்து எழுதவும் முனைந்தனர்; பழந்தமிழ் இலக்கியங்களாய அகச்சான்று காட்டி, அக்காலத் தமிழர் மேற்கொண்ட அரசியல் அமைதி, வாணிக வளம், செல்வச் சிறப்பு, மக்கள் பண்பாடு முதலாம் பெருமைகளை விளக்கும் அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளியாயின; அவ்வாறு வெளியாகிய அவையும், வடமொழி

விரவாத தூய தமிழ் நடை வாய்ந்தனவாதல் வேண்டும் என்பதில் ஆர்வம் காட்டினர்; அம்மட்டோ! தம் பெற்ரேர் தமக்கு இட்டு வழங்கிய வேதாசலம், பாலசுந்தரம் போலும் வடமொழிப் பெயர்களை மறைமலை, இளவழகன் போலும் இனிய தமிழ்ப் பெயர்களாக மாற்றிக் கொள்வதையும், தம் மக்கட்குத் திருமாவளவன், அறிவுடைநம்பி, முல்லை, தாமரை போலும் தனித் தமிழ்ப் பெயர்கள் வைத்து அழைப்பதையும் விரும்பி மேற்கொண்டனர். அன்று தொடங்கிய இவ்விலக்கிய விழிப்புணர்ச்சி இடையே மங்கிவிடாது, இன்றுவரை எவரும் கண்டு பாராட்டும் வகையில் வளர்ந்துகொண்டே உளது; சிறந்த உரைநடை இலக்கியங்கள் நாள்தோறும் உருவாகிக் கொண்டே உள்ளன.

## நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும்

ஆங்கில மக்களின் கூட்டுறவாலும், உலக மக்கள் அனைவரையும் ஒருங்கே காணவல்ல வாய்ப்புப் பெற்றமையாலும் தாமும், தம் நாடும், தம் மொழியும் பண்டு பெற்றிருந்த பெருநிலையினையும், இன்று பெற்றிருக்கும் இழிநிலையினையும் கண்ட தமிழ் மக்கள் உரிமை வேட்கையும், இன உணர்ச்சியும் மொழிப்பற்றும் கொண்டு விழிப்புற்றனர். தாம் பல்லாற்ருனும் தாழ்வுற்றமைக்கு, ஆளும் உரிமையற்று அடிமைகளாகி விட்டமையே தலையாய காரணமாம் என உணர்ந்தனர்; அதனுல், ஆளும் ஆங்கிலேயரை அகற்றிவிட்டுத் தாமே ஆள எண்ணினர்; அவ்வெண்ணம், அனைவர் உள்ளத்தும் ஊறி, உரன் கொண்டு எழவல்ல பாக்களைப் புலவர்கள் பாடினர்; விடுதலை வேட்கை, நாட்டுப்பற்று உடையார்க்கே உண்டாதல் கூடும் என்று உணர்ந்த அவர்கள், அவ்வுரிமை வேட்கையை ஊட்டவல்ல, தமிழ் நாட்டுப் பழம் பெருமை

களைப் பாட்டிடை வைத்துப் பாராட்டினர்; அவ்வாறு எழுந்த இலக்கியங்களுள் ஒரு சில:

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளும் சிலப்பதிகாரம் என்றோர் மணி
ஆரம்படைத்த தமிழ்நாடு"

## இன உணர்ச்சி

நாட்டுப் பற்றும் மொழிப்பற்றும் போன்றே, இனப் பற்றும் விடுதலைக் கிளர்ச்சிக்கு வித்திடும் என உணர்ந் தனர் மக்கள். மேலும் ஓர் இனம் ஆள, ஓர் இனம் அடிமைப்பட்டுக் கிடத்தல் ஆகாது என்றும் உணர்ந்தனர்; அந்நிலையினை மாற்றவும் வேண்டினர். அவ்வாறு விரும்பிய அவர்கள், அடிமைப்பட்டுக் கிடக்கும் அவ்வினத் தார்க்கு, அவர்களின் முன்னோர் பெருமையினை எடுத்துக் காட்டுவதன் மூலம், உரிமை வேட்கையினை உண்டாக்க லாம் என அறிந்தனர்; அதனால், இன்று அடிமைப்பட் டிருக்கும் நீவிர், பண்டு பாரெலாம் ஆண்ட பெருமைமிக்க இனத்தின் வழி வந்தவராவிர் என்று கூறும் இனவுணர்ச் சிப்பாக்கள் எண்ணற்றன எழுந்தன. அவற்றுள் ஒருசில;

"சிங்களம் புட்பகம் சாவகம் ஆதிய
தீவு பலவினும் சென்றேறி, அங்கு
தங்கள் புலிக்கொடி மீன்கொடியும் நின்று
சால்புறக் கண்டவர் தாய்நாடு."

"விண்ணை இடிக்கும் தலை இமயம் எனும்
வெற்பை அடிக்கும் திறனுடையார்; சமர்
பண்ணிக் கலிங்கத்திருள் கெடுத்தார் தமிழ்ப்
பார்த்திவர் நின்ற தமிழ்நாடு."

உரிமை உணர்ச்சி

இவ்வாறு ஒரு நாட்டு மக்களின் பண்பாட்டுயர்விற்கு அரசியல் உரிமையே அடிப்படையாம் என்ற உணர்வால், அவ்வுரிமை உணர்ச்சியினை ஊட்டவல்ல இலக்கியங்களை ஒருசிலர் வளர்த்துவந்தனர். நிற்க, ஒரு நாட்டு மக்களிடையே முதலாளி தொழிலாளி, செல்வர் வறியர் என்பன போலும் பொருள் நிலையால் உண்டாம் வேறுபாடு நிலை பெறின், அந்நாடு, அரசியல் உரிமை பெற்றும் பயன் இன்றும். அவ்வேறுபாடு உடைமையால் தொழில் வளராத நாட்டில் செல்வம் செழிக்காது; செல்வம் அற்ற நாடு, அது பெற்ற நாட்டிற்குப் பல்லாற்ருனும் அடிமைப் பட்டே கிடக்கும். ஆகவே, நாட்டின் நல்வாழ்வில் நாட்டம் உடையவர், முதலாளி தொழிலாளர்களிடையே நல்லுறவு நிலை பெறுதற்காம் வழி வகைகளை வகுத்தல் வேண்டும். தமிழ்நாட்டுத் தலைவர்கள் இவ்வுண்மை உணர்ந்த உரவோராதலின், தமிழகத்தில் உரிமைக் கிளர்ச்சி ஒருபால் நடைபெற்றிருக்கும்போதே, தொழிலாளர் உயர்விற்காம் கிளர்ச்சியும் தொடர்ந்து நடைபெற லாயிற்று. அதனுல், தொழிலாளர்த் தொண்டின் பெருமையினையும், அவர்தம் இழிநிலைமையினையும், அன்னுர் உரிமைகளையும் எடுத்துக் காட்டும் இலக்கியங்களையும் புலவர்கள் இயற்றத் தொடங்கினர்.

" சிற்றூரும், வரப்பெடுத்த வயலும், ஆறு
தேக்கியநல் வாய்க்காலும் வகைப்படுத்தி
நெற்சேர உழுதுழுது பயன்விளைக்கும்
நிறைஉழைப்புத் தோள்கள்எலாம் எவரின்தோள்கள் ?
கல்பிளந்து மலைபிளந்து கனிகள் வெட்டிக்
கருவியெலாம் செய்துதந்த கைதான் யார்கை ?
பொன்துகளைக், கடல்முத்தை, மணிக்குலத்தைப்
போய்எடுக்க அடக்கிய மூச்சு எவரின்மூச்சு ?"

"பாடு படுபவர்க்கே—இந்தப்
பாரிடம் சொந்தம் ஐயா!
காடு திருத்திநல்ல—நாடு
காண்பது அவரலவோ?"

## பெண்ணுரிமை

ஒரு நாடு, அரசியல் அமைதியும் பொருள் நிறை வாழ்வும் பெற்றுவிட்டமையினுலேயே சிறந்துவிடாது. அந்நாட்டில் வாழும் மக்கள் அனைவரும் கல்வி, செல்வம் ஆகிய இவற்றில் ஒத்த உரிமை உடையவராதல் வேண்டும். அந்நிலை பெற்ற நாடே நன்னிலை பெற்றுச் சிறக்கும். உலக மக்கள் தொகையுள், ஒரு பாதியினர் பெண்களாம். அப்பெண்களைப் போற்றுதலுக்கு உரியராகக் கொண்டது பழந்தமிழ் நாடு. பழந்தமிழ்ப் புலவர்களில் பலர் பெண்கள். கற்பும் பொற்பும் விளங்க வாழ்ந்த பெண்கள் அந்நாளில் பலர். மனைமாட்சிக்கு உரியவள் பெண்ணே எனும் கருத்தால் மனைவி என்றும் இல்லாள் என்றும் பெயரிட்டழைத்துப் பெருமை செய்தது.

இந்நிலை சங்க காலத்திற்குப் பின்னர் சீரழிந்துவிட்டது. சமணமும் பௌத்தமும் தமிழ் நாட்டிலும் வேர் கொளத் தொடங்கவே பெண்களைப் பழிக்கும் எண்ணம் தமிழ்நாட்டிலும் தழைத்தது. அதன் பயனுய்ப் பெண்கள் பல துன்பத்திற்கு உள்ளாயினர்.

தாழ்ந்த தமிழகம் தலைநிமிர்ந்து வாழ விரும்பிய தமிழ்ப் பேரறிஞர்கள், அதற்குத் துணைசெய்யும் விடுதலை வேட்கை, தொழிலாளர் துயரம், பேச்சுரிமை, பெண்ணுரிமை, காதல் திருமணம், கைம்பெண் மறுமணம், பொருந்தாத் திருமணங்களின் பொல்லாங்கு என்பன போலும் பலப்பல பொருள் குறித்த பாக்களைக் கொண்ட இலக்கியச் செல்வங்களை வளர்த்தனர்.

தமிழாக்கம்

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்"—என்றார் பாரதியார். மக்கள் உள்ளத்தை உணர்த்தி, உலகநிலையினை உயர்த்தும் உறுதிகொண்ட இலக்கியங்கள் ஒருபால் தோன்றிக் கொண்டிருக்க, வேறு சிலர், வேறு வேறு வகையான இலக்கியங்களைத் தோற்றுவிப்பாராயினர். தமிழ் மக்கள், உலக மக்கள் அனைவரோடும் உறவுகொள்ளத் தொடங்கினர்; அதனால், உலகில் தலைசிறந்த மொழிகளில் விளங்கும் உயர்ந்த இலக்கியங்களை அறியும் வாய்ப்பு அவர்க்கு உண்டாயிற்று. பிறமொழிகளை அறிந்து, அவற்றின் சிறந்த இலக்கியங்களைக் கற்றுச் சுவைத்த அறிஞர்கள், அவ்வின்பத்தை ஏனைத் தமிழரும் அறிந்து மகிழவேண்டும் என விரும்பினர். அதனால் அம்மொழிகளின் சிறந்த பேரிலக்கியங்கள் சிலவற்றை, அவற்றின் சுவைகெடா வகையில் தமிழில் ஆக்கினர்; பேராசிரியர் சோமசுந்தர பாரதியார் ஆக்கிய மாரிவாயிலும், பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் ஆக்கிய சுக்கிரநீதியும் அவ்வாறு வந்த வடமொழித் தழுவல் இலக்கியங்களாம்.

இவ்வாறு பிறமொழியில் சிறந்து விளங்கிய பேரிலக்கியங்களைத் தமிழ்ப் படுத்தும் பணி ஒருபால் திகழ, ஆங்கிலப் புலவர்கள் ஆக்கிய அரிய பொருள் நயம் பொருந்திய் அழகிய சிறு சிறு செய்யுட்களைத் தமிழாக்கும் இலக்கியப் பணியினைப் புலவர் சிலர் போற்றி மேற்கொண்டனர்.

"தக்க திறன் இருந்தும்—நல்ல
தருணம் வாய்த்திலதேல்
மிக்க புகழ்எய்தி—மக்கள்
மேன்மை அடையாரம்மா!"

இது கிரே (Gray) என்ற ஆங்கிலப் புலவர் ஆக்கிய கையறுநிலைச் செய்யுளைத் தமிழாக்கிய கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களின் செய்யுள்.

பழந்தமிழ் இலக்கியங்கள் தமிழகத்தின் இயற்கை இன்பங்களைத் தாம் கூறும் அகப்பொருள், புறப்பொருள் சிறப்புக்களைக் கூறுவதற்கு இடையிடையே எடுத்துக் காட்டிச் சென்றன. பின்னர் வந்த புராண இலக்கியங்கள், நாட்டுச் சிறப்பு என்ற தனித் தலைப்பிட்டு, அவ்வியற்கையின் இறும்பூதுகளை இனிது எடுத்துக் காட்டிப் பாராட்டி மகிழ்ந்தன. அவ்விலக்கியங்களில் இயற்கையின் எழிலோவியங்களைக் கண்டு மகிழ்ந்த தற்காலத் தமிழ்ப் புலவர்கள், ஆங்கிலத்திலே கடல், காடு, மலர், மாலை, அருவி, ஆறு, மயில், மான் என்பன குறித்துச் சிறு சிறு பாடல்கள் புனைந்து பாராட்டி மகிழ்வதையுங் கண்டனர். அதனால், தாம் கண்ட தமிழ் நாட்டு இயற்கைக் காட்சிகளை அவ்வாங்கிலப் புலவர்களின் வழியிற் சென்று சிறு சிறு செய்யுட்களால் பாடிமகிழ்ந்து, தமிழிலக்கியச் செல்வங்களை வளர்த்தனர்; வளர்த்து வருகின்றனர்.

### அருஞ்சொற்பொருள்

சதுமறை - நான்கு வேதங்கள். சகமுழுதும் - உலகமெல்லாம். முதுமொழி - பழமையான மொழி. உரன்— வலிமை. ஆரம் - மாலை. புலிக்கொடி - சோழனுடையது. மீன்கொடி - பாண்டியனுடையது. வறியர் - பொருள் இலார். எலாம்-எல்லாம். துகள்—தூசி (சிறு பொடி). பொற்பு - பொலிவு; அழகு. கையறுநிலை – ஒன்றை இழந்து செயலற்று வருந்தும் நிலைமை. தருணம் — வாய்ப்பு; சமயம்.

## வினாக்கள்

1. தமிழ் மக்களிடம் தனித்தமிழ் ஆர்வம் எப்பொழுது உண்டாயிற்று?

2. தமிழின் பெருமையை எவ்வாறு பாடியுள்ளனர்?

3. தமிழ் இலக்கிய விழிப்புணர்ச்சி வளர்ந்துள்ளமையை விளக்குக.

4. நாடு, மொழி, இனம்—இவற்றை உணரவைத்த கூட்டுறவு எது? இவற்றின் பயன் என்ன?

5. அன்று தொடங்கி இன்றுவரை இலக்கிய விழிப்புணர்ச்சி மங்கவில்லை—என்பதை விளக்குக.

6. அரசியல் உரிமை பெற்றும் பயனில்லை—ஏன்?

7. தாழ்ந்த தமிழகம் தலைநிமிர்ந்து வாழ, பேரறிஞர் எத்தகைய இலக்கியச் செல்வங்களை வளர்த்தனர்?

## பயிற்சி

1. வாக்கியங்களிற் பயன் படுத்துக: நூற்ருண்டு, விழிப்புணர்ச்சி, வழிவகைகள், எழிலோவியம், இயற்கைக் காட்சி.

2. பிரித்துக் காட்டுக: பல்லாற்ருனும், விழிப்புணர்ச்சி. கூட்டுறவு, அவ்வண்ணம், நாட்டுப்பற்று, பெண்ணுரிமை.

3. சேர்த்து எழுதுக: இ+இலக்கியம், மொழி+பற்று, உழுது+உழுது, பேச்சு+உரிமை, பெரிய+இலக்கியங்கள்.

4. எதிர்ச் சொற்கள் வரைக: அன்று, உரிமை, முதலாளி, அமைதி, பேரிலக்கியங்கள், அகப்பொருள்.

# 8. நாவலர்–பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார்

[வித்துவான் R. ஏகாம்பரநாதன் அவர்கள்]

உலகத்தில் எவ்வகையான நற்செயலுக்கும் ஊக்கமும் உணர்ச்சியும் இன்றியமையாதனவாகும். மக்கள் அவற்றை அடைவதற்குரிய துணைகள் பலவற்றிலும் அவர்கள் முன்னோரைப் பற்றிய அறிவும் நினைவும் சிறந்தவை. ஆகவே அந்நோக்கத்தினை அடைப்படையாகக் கொண்டு எழுதப்பெற்ற வரலாறுகள் பெரிதும் மக்களுக்குப் பயன்படுவனவாம்.

## வாழ்வும் வளமும்

புலவர்கள், புரவலர்கள், வள்ளல்கள், வீரர்கள், ஆழ்வார்கள், நாயன்மார்கள், மன்னர்கள் ஆகியோரின் வரலாறுகள் என்றும் நிலைபெற்று மக்களைக் கடைத்தேற்றும் கலங்கரை விளக்கமாகக் காட்சி தருகின்றன. இன்னும் கல்வி, அறிவு, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, அன்பு, அருள், ஒப்புரவாற்றல் முதலிய குணங்களும் கொண்டு மக்களை உயர் நெறியில் செலுத்தத்தக்க உறுப்பினர்களைக் கொண்ட கற்பனைக் கதைகளும் மக்கள் வாழ்வினை வளப்படுத்துவனவேயாகும். மேன்மக்களாகக் கருதப்படும் ஒவ்வொருவர் வாழ்விலும் பொதுவாக மேற்கொண்ட பண்புகள் அமைந்திருப்பதும், சிறப்பாக ஒவ்வொருவர் வாழ்வும் போக்கும், குறிக்கோளும் ஒவ்வொரு போக்கில் அமைந்திருப்பதும் அறிவுடையோர் கருதத்தக்கன ; இன்புறத்தக்கன ; உலகுக்கு எடுத்துக்காட்டி மக்களை ஊக்கத்தக்கனவுமாகும்.

இந்த வகையில் நாவலர் ந. மு. வே. நாட்டார் அவர்களின் வாழ்க்கைப் போக்கில் காணப்பெறுவன பல. பார்ப்போர் நின்று காணும் கோணத்திற்கு ஏற்பக் காணப் படும் நிகழ்ச்சிகள் அமையலாம். நான் அவருடைய மாணவன், அவர் பெயரால் தஞ்சையில் உள்ள ந. மு. வே. நாட்டாரின் பேரவையின் அமைச்சன் என்ற முறையில் நின்று காணும் கோணங்கள் சில. நான் கண்டவையும் சிலவேதான்.

## புது மொழி

தமிழ் நாட்டில் இருந்து மறைந்த எண்ணிறந்த தமிழ்ப் புலவர்கள் தத்தம் அறிவு ஆற்றலுக்கு ஏற்பப் பாக்களும் உரைகளும் இயற்றிச் சென்றனர். அவர்கள் இருந்த காலத்தில் மொழிக்கும் மக்களுக்கும் அவர்களால் ஏற்பட்ட நலன்களைத் தொடர்ந்து வளர்க்கும் முகத்தான் அவர்கள் கருத்துக்கள் நின்று உதவுகின்றன என்பது மிகையாகாது. " செத்துங் கொடுத்தான் சீதக்காதி " என்பது கொடைச் சிறப்புக்காகச் சொல்லப்பெறும் பழ மொழியாக மக்கள் நாவில் வழங்கிவருகிறது. அதனை யொட்டி "நன்கு தமிழ் வளர்த்தார் நடுக்காவிரி நாட் டார்", என்ற புது மொழியை மக்கள் நாவில் வழங்க விடுவதும் ஏற்புடையதாகின்றது.

## நினைவுக் கோயில்

சோழ நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் காவிரிக் கரை யில் நடுக்காவிரி உளது. அங்குத்தான் அவர் தோன்றி னார். அதன் நினைவாகக் காவிரிக்கரை யோரத்திலே நாட் டாரின் நினைவுக் கோவில் அமைக்கப்பட்டுள்ளது. அக் கோயில் தமிழ் நினைவாக, தமிழ் இலக்கண இலக்கிய நினைவாக இருந்து சொற்பொழிவு முதலியவற்றால் பதின்

மூன்று ஆண்டுகளாகத் தமிழ்த்தொண்டு செய்கின்றது. நாட்டார் ஐயா அவர்கள் இருந்த காலத்தில் செய்த தமிழ்த் தொண்டினை, வளர்க்கும் போக்கில் அவர்கள் பெயரால் இயங்கும் தமிழ்ப் பேரவை செய்துவரும் தொண்டுகள் பலவாகும்.

## ஆற்றிய பணிகள்

ந. மு. வே. அவர்கள் ஆற்றிய பணிகள் பல— எழுதிய உரை நூல்கள்—சிலப்பதிகாரம், மணிமேகலை, அகநானூறு, திருவிளையாடற் புராணம், நீதிநூற் கொத்து முதலியன. உரைநடை நூல்கள்—நக்கீரர், சோழர் சரித்திரம், கள்ளர் சரித்திரம், கபிலர், கண்ணகி யின் கற்பு மாண்பு, வேளிர் வரலாற்று ஆராய்ச்சி, கட்டு ரைத் திரட்டுப் பகுதி ஒன்று, பகுதி இரண்டு என்பன வாகும். இவர்கள் இயற்றிய தனிப் பாடல்கள் பலவா கும். ஐயா அவர்களின் அரும் பணி எத்தனையோ தமிழ்ப் புலவர்களை உண்டாக்கியது ; செந்தமிழில் பேசக் கற்றுக் கொடுத்தது ; எழுதக் கற்றுக் கொடுத்தது ; சில சொல்லி நட்பாட-உரையாடி மகிழக் கற்றுக் கொடுத்தது. தமிழ்ப் பற்றும் கூர்த்த மதியும் உடையவர்களை ஆதரித்து ஆவன செய்யக் கற்றுக் கொடுத்தது; இப்படிப் பலவாகும்.

## தனிப்பண்பு

பாடஞ் சொல்லும்போது தன்னுணர்வற்று நூலுடன் ஒன்றி நின்று உணர்த்தும் முறை அவரது தனிப் பண் பாகும். கோவலனுக்குக் கண்ணகி மாதரி வீட்டில் பரி மாறினாள். மறுநாள் உணவு பற்றிக் கோவலனும் எண் ணிலன் ; கண்ணகியும் நினைத்திலள். மாசறு பொன்னே! மணியே ! முத்தே ! என்று வாயார வாழ்த்த ஊழ்வினை உதவிற்றோ எனச் சொல்லிக் கண்ணீர் உகச்செய்வார்.

திருவாசகத்தை எடுத்தால் உளம் உருக, உளம் உருக் கிடப் படிப்பார். மாணவர்களை எடைபோட்டும், அறிந்தும், அன்போடு பேசியும் மாணவர்களை மாணவர் களாகவே செய்வார்.

இளமையும் கல்வியும்

இவரது தந்தையார் முத்துச்சாமி நாட்டார். தாயார் தையலம்மையார். தந்தையார் மகனுக்கு ஆற்றும் செய லைச் செய்தார். மகனும் இவர் தந்தை 'என்னோற்ருன் கொல்' என்னும் சொல்லை உண்டாக்கினுர். ஏறத்தாழப் பத்து ஆண்டுகளில் மதுரைத் தமிழச் சங்கத்திலிருந்து படிக்க வேண்டிய கீழ் வகுப்புகள், பிரவேச பண்டிதம், பாலபண்டிதம், பண்டிதம் ஆகிய வகுப்புகளை இவர் மூன்று ஆண்டுகளிலேயே படித்து முடித்தார். நடுக்காவி ரியில் தம் வீட்டு மாடி அறையிலிருந்தே ஆசிரியர் துணை யின்றித் தாமே பயின்ருர். நூலாசிரியர், உரையாசிரியர் களின் கருத்துக்களை எளிதில் நுணித்தறியும் நுண்மாண் நுழைபுலம் பெற்றுத் திகழ்ந்தார். மேலே கண்ட பிரவேச பண்டிதம் முதலான மூன்று தேர்வுகளிலும் முறையே முதன்மையாகத் தேறிப் பரிசுகள் பெற்ருர். ஒவ்வொரு ஆண்டிலும் ஒவ்வொரு தேர்வினை முடிக்கும் ஊக்கமும் உழைப்பும் பெற்றுத் திகழ்ந்தார்.

கடிதிற் காண்டல், மறவாமை என்ற அறிவின் திறங் கள் இரண்டும் இயல்பாகவே இவருக்கு வாய்த்திருந்தன என்பர் சிலர். நல்லூழ் காரணமாக விட்ட குறையால் இவர் இவ்வாறு விரைவில் தாமே கற்றுத் தேறினுர் என் பர் சிலர். இவர் தந்தையாரின் அறிவும் திறனுமே பன் மடங்கு பெருகி இவருக்குக் கருவமைப்பாக உண்டாகின என்பர் சிலர். இவரது நினைவாற்றல் மிகவும் பாராட்டற் குரியது. ஒரு நூலிலுள்ள ஒரு தொடரைக் கேட்டாலே

உடனே அந்த நூலும் பக்கமும் சொல்லுவார். எதனையும் இரண்டு தடவை அழுத்தமாகப் படித்துவிட்டால் மனப் பாடம் ஆகிவிடும் என்று அவர் சொல்லக்கேட்டுள்ளேன். உரையாசிரியர்கள் சிலரின் தடுமாற்றமான இடங்கள் இவருக்கு எளிதில் பொருள் விளங்குவனவாகும்.

" கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக "

என்ற வள்ளுவர் வாய்மொழிக்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்தவர் ந. மு. வே. ஆவர்.

ஒழுக்கமும் உறுதியும்

இளமையில் குடும்பப் பழக்கத்தால் புலால் உண்டு வந்த அவர், ஞான நூலாகிய திருவாசகத்தையும் ஒழுக்க நூலாகிய திருக்குறளையும் ஊன்றிக் கற்றதன் பயனாகப் புலால் உண்ணுதலை நீக்கினார்.

'' தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள் ''

என்னும் குறட்பாவிற்கேற்ப அவர் அருளாளராகவே விளங்கினார். அவர் கொடிய நோய்வாய்ப்பட்டிருந்த காலத் தில் மருத்துவர்கள் இளமையில் உண்டுவந்த புலால் உணவை உண்ணவேண்டுமென வற்புறுத்தினர். ஆனால் அண்ணல் ந. மு. வே. அவர்கள் இறுதி வரையில் தாம் கொண்ட நோன்பில் தவறினாரில்லை. இதனால் அவரு டைய நல்லொழுக்கத்தையும், மனவுறுதியையும் நன்கு உணரலாம்.

அழகான கையெழுத்து

நாட்டார் ஐயா அவர்களின் கையெழுத்து முன் பக்கம் சாய்வாக இருக்கும். முத்துக் கோத்தது போல

அழகாக வரிகள் அமையும். ஒவ்வொருவரும் பின்பற்றக் கூடிய ஒரு நல்ல பழக்கம் இவர்களிடமிருந்தது. இப் பழக்கத்தை யாரிடமிருந்து கற்ருர்களோ எவர் வாழ்வி லிருந்து படித்துத் தெரிந்து கொண்டார்களோ என்று அறிய இயலவில்லே. இளமையில் படிக்கும்போதே— மாணவர் நிலேயிலேயே இவர்கள் இப்பழக்கத்தை மேற் கொண்டிருந்தமை வியப்பைத் தருவதாக உளது. இறுதி நாள்வரை இப்பழக்கம் இவர்களிடம் வேரூன்றியிருந் தது. வாழ்வுடன் கலந்து மிளிர்ந்தது.

## நாட்டார் பழக்கம்

'**நாட்டார் பழக்கம்**' என்ருலே அவருடன் பழகிய பலருக்குக் குழூஉக் குறியாகப் பொருள் உணர்த்தி வந் தது. எழுத்துநடை போலவே பேசுவார்கள் என்பது; புலவர்கள், மாணவர்கள், நண்பர்கள், உறவினர், பணி யாளர், மனேயாள் எவரிடம் பேசினும் எழுத்து நடை போன்றே அமையும். இன்னும் சினம், துன்பம், மகிழ்ச்சி சோம்பல் முதலிய நிலேயிலும் வழக்குச் சொற்கள் வழூஉச் சொற்கள் வருவதில்லே. அவர்களின் அன்ருட வாழ்வில் வரும் சொற்கள், கற்பிக்கும் சொற்கள், சொற்பொழிவுகள் யாவும் தொகுத்து உடனே நூல் வடிவாக வெளியிடத் தக்க அளவிற்குச் செப்பமாகவும் சிறந்ததாகவும் அமை யும். அவர்களே ஒருமுறை சந்தித்துப் பேசியவர்களும் அதன் பயனுய்ச் சில நாட்கள்வரை அல்லது சில மணிகள் வரையாவது செந்தமிழ் நடையில் பேசவேண்டு மென்ற முனேப்புக் கொள்ள நேரிடும்.

## தமிழ்க் குடும்பம்

நாட்டார் ஐயாவின் குடும்பமே நல்ல தமிழ்க் குடும் பம் ஆகும். இவரது தந்தையார் நன்கு படித்தவர். தியாக ராய நாட்டார் என்ற இவரது இளவல் இவரைச் சார்ந்து

பழகியமையால் தமிழ்ப்புலமை பெற்றவராயினர். மற்ஞெரு தம்பி திரு. **கோவிந்தராய நாட்டார்** என்பவர் பி.ஏ., எல்.டி. தேறி ஆசிரியர் தொழில் நடத்தியவர். பல ஆராய்ச்சி நூல்களும் இராசேந்திரன் போன்ற நாடக நூலும் எழுதிய நல்ல தமிழன்பர்.

ந. மு. வேயின் மனைவியார் கற்ற கல்வியினும் சைவப்பற்றும் தமிழ்ப் பண்பும் மிகுந்தவர். இவர் திருமகளார் **சிவபார்வதியம்மையார்**. இவர் தமிழ்ப் புலவர் பட்டம் பெற்றவர். பாண் பெரியார் மூவர் என்ற ஆராய்ச்சி நூலும் பல உரைநடை நூல்களும் எழுதியவர். திரு. **வே. நடராசன்** என்ற திருமகனுர் எம்.ஏ., தேறியவர் ஒருவர் உளர். தமிழ்ப் பற்றும் அறிவும் மிக்கவராவர். ந. மு. வேயின் மருமகனும், பிற உறவினரும் நல்ல தமிழ்ப் புலமை உடையவராயினர்.

இவர்கள் 1908 முதல் 1930 வரை திருச்சி எஸ். பி. ஜி. கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராகவும், பின்னர் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திலும், பின்னர் கரந்தைத் தமிழ்ச் சங்கத்திலும் தமிழ்த் தொண்டு செய்து வந்தனர். சென்னை, அண்ணுமலைப் பல்கலைக் கழகங்களில் சிறப்புச் சொற்பொழிவுகள் செய்துள்ளனர். உள் நாட்டிலும் கொழும்பு முதலிய வெளிநாட்டிலும் இவர்கள் தலைமை ஏற்று நிகழ்த்திய இலக்கியச் சொற்பொழிவுகளும் சைவ சமயச் சொற்பொழிவுகளும் பற்பலவாகும்.

1940-இல் சென்னையில் நடந்த கலித்தொகை மாநாட்டிற்குத் தலைமை தாங்கியதும், திருப்பதியில் நடந்த கீழ்த்திசைக் கலை மாநாட்டில் சென்று வஞ்சிமா நகர் பற்றிப் பேசிய ஆராய்ச்சிப் பேச்சும் குறிப்பிடத் தக்கவை. நாட்டார் அவர்களின் தோற்றம் **12—4—1884.** மறைவு **28—3—1944.**

## அருஞ்சொற்பொருள்

குழூஉக்குறி – ஒரு கூட்டத்தார் தங்களுக்குள்ளாகப் பொருள் விளங்கிக்கொள்ளும் வகையில் சொற்களை அமைத்துக் கொண்டு பேசுதல். பண்பு - குணம். நுண் மாண் நுழைபுலம் – நுட்பமான மாட்சிமைப்பட்ட சிறந்த அறிவு. ஊன் – உடம்பு; இறைச்சி. கலித்தொகை - எட்டுத்தொகை நூல்களில் ஒன்று.

## வினாக்கள்

1. மக்களுக்குப் பயன்படக்கூடிய வரலாறுகள் எவை?

2. ந. மு. வே. அவர்கள் ஆற்றிய பணிகளை விளக்குக.

3. பாடங் கற்பித்தலில் நாட்டார் அவர்களின் தனிப் பண்பு என்ன?

4. நாட்டார் அவர்கள் கல்விகற்ற முறையைக் கூறுக.

5. ந. மு. வே. அவர்களின் அறிவாற்றலைக் குறித்து வழங்கும் கருத்துக்கள் யாவை?

6. நாட்டார் அவர்களின் கையெழுத்து எவ்வாறிருந்தது?

7. நாட்டார் அவர்களின் செந்தமிழ் நடை எவ்வாறு அமைந்தது? விளக்குக.

## பயிற்சி

1. பிரித்து எழுதுக :—ஒவ்வொருவர், தன்னுணர்வற்று, நுணித்தறியும், கசடற.

2. சேர்த்து எழுதுக :—மிகை + ஆகாது, மாசு + அறு + பொன், துணை + இன்றி.

3. எதிர்ச்சொல் வரைக :—பழமொழி, பல, பேரவை.

4. தொடரில் அமைத்திடுக :—கலங்கரை விளக்கம், 'செத்துங் கொடுத்தான் சீதக்காதி', ஏறத்தாழ, நுண் மாண் நுழைபுலம், முத்துக் கோத்தது போல்.

# 9. யான் கண்ட இலங்கை

[டாக்டர் மு. வரதராசன்]

விவேகாநந்தர் பள்ளிக்கூடம்
திருக்கோணமலை
7–1–'50

அன்புள்ள அரசு,

விடியற்காலையிலே வண்டியை விட்டுப் புறப்பட்டோம். மிக விரைந்து சென்றோம். காடும் மலையுமாகக் கடந்து செல்லும் பாதை மிகச் சீராக அமைந்திருக்கிறது. குளிர்ந்த காற்றும் இன்பமாக இருந்தது. இலங்கைப் படத்தை எடுத்துப் பிரித்துப் பார்த்தோம். நேர் கிழக்கே கடற்கரையில் **மட்டக்களப்பு** என்ற ஊர் இருந்தது. இலங்கையில் மட்டும் அல்லாமல் இந்தியாவிலும் பல ஆண்டுகள் தங்கித் தமிழ்த் தொண்டும் சமயத் தொண்டும் ஆற்றிய **விபுலாநந்தர்** பிறந்த ஊர் என்று அறிந்து திக்கு நோக்கி வணங்கினோம். இந்தக் கடிதம் எழுதும் இப்போதும் அவருடைய அருமைத் தொண்டுகளை நினைத்துப் பாராட்ட வேண்டியுள்ளது. அவருடைய பரந்த நெற்றியும் அமைதிப் பார்வையும் துறவுக் கோலமும் விளங்கும் படம் இப்போது என் எதிரே விளங்குகிறது. அவர் ஏற்படுத்தி நடத்திய பள்ளிக்கூடம் இது. அவருடைய மேற்பார்வை இருந்த காரணத்தால் இந்தப் பள்ளிக்கூடக் கல்வி முறை பிள்ளைகளுக்குப் பயன்தரும் வகையில் மிக நன்றாக நடைபெற்று வருகிறது என அறிந்தோம்.

பொலனறுவை

இலங்கையின் தமிழ்ப் பெரியோரை நினைத்ததும் வழிப்பயணத்தைத் தொடர்ந்து எழுத மறந்து விட்டேன்.

மாத்தளையிலிருந்து வந்துகொண்டிருந்தோம் அல்லவா? அடுத்தாற் போல் வந்த ஊர் பொலனறுவை. அது ஒரு காலத்தில் மிகப் பெரிய நகரமாக, சிறந்த தலை நகரமாக விளங்கியது. இப்போது இருநூறுபேர் வாழும் மிகச் சிறிய சிற்றூராக உள்ளது. வரலாற்றில் அது பெற்றிருக்கும் அளப்பரிய பெருமையின் காரணமாக இன்று அது மறக்கமுடியாத, புறக்கணிக்கமுடியாத சிறப்புப் பெற்றுள்ளது. இரயில் நிலையமும் உள்ள சிற்றூர் அது. அதன் பெயரைக் கேட்டதும் தமிழ் வேந்தர்களின் வீரம் நினைவுக்கு வருகிறது. கிறித்து பிறப்பதற்கு நெடுங்காலம் முன்பே அடிக்கடி படையெடுத்து இலங்கையைக் கைப்பற்றி ஆண்டவர்கள் தமிழ் வேந்தர்கள். அவர்களுக்கு அஞ்சிய இலங்கை சிங்கள மன்னர்கள் இருந்த தலை நகரத்தை விட்டு அஞ்சி இந்த இடத்தில் ஒதுங்கிவிட்டார்கள். ஆனால் யானைக்கு ஒரு காலம் பூனைக்கு ஒரு காலம் என்பதுதானே அரசியலில் அன்று முதல் இன்று வரையிலும் காணும் உண்மை. சிங்கள அரசர்களிலேயே ஒருவன் ஒப்பற்ற வீரனாகத் தோன்றி இலங்கை முழுவதையும் கட்டியாண்டு, பாண்டியர்களையும் அடக்கும் அவ்வளவு ஆற்றல் பெற்று விட்டான்; அந்தச் சிங்கள மன்னன் கட்டிய பல கட்டிடங்கள் இன்று இடிந்து பாழாய் நின்ற இடமே பொலனறுவை. பெரிய அரண்மனை, பல பெரிய மண்டபங்கள், பெரிய குளங்கள், அழகிய நீராடு மண்டபங்கள், உயர்ந்த மாளிகைகள், கோயில்கள் முதலான பல கட்டிடங்கள் இருந்த அடையாளங்களை இன்றும் காணலாம். சிதைந்தும் சிறப்புக் குன்றாமல் ஒளிரும் சிற்பங்கள் பலவற்றை இங்கே காணலாம். பாண்டியனை அடக்கி வென்ற சிங்கள மன்னன், தமிழ் மக்களைச் சிறைப்படுத்திக் கொண்டு வந்து அவர்களுடைய சிற்பக் கலைத் திறனைப் பயன்படுத்திக் கொண்டான். அந்தத் தமிழ்ச்

சிற்பக் கலையின் சிறப்புக்களை இன்னும் அங்கே காண லாம். தமிழ்க் கல் வெட்டுகள் பல உள்ளன. புத்தர் கோயிலும் சிவன் கோயிலும் உள்ளன. பழங்கால வர லாற்று ஆராய்ச்சிக்கு உதவியான சான்றுகள் பற்பல உள்ள ஊர் இது.

வெற்றிவேற்கை

அழிந்து சிதைந்த அந்தப் பழைய தலை நகரத்தைக் கண்டபோது

"எழுநிலை மாடம் கால்சாய்ந் துக்குக்
கழுதை மேய்பாழ் ஆயினும் ஆகும்"

என்ற வெற்றிவேற்கை நினைவுக்கு வந்தது. ஆனால் தமிழ்நாட்டுக் காவிரிப்பூம் பட்டினம் அழிந்த இடமும் தெரியாமல் கடல் கொண்டு விட்டதே என்று வருந்தி னேன். இருந்த பெரிய நகரங்கள் இவ்வாறு அழியும் உலகத்தில், பாழிடங்களில் பெரிய நகரங்கள் தோன்றி வளர்ந்து வருவதையும் காண்கிறோம். கொழும்பு நகரமும் சென்னை நகரமும் அப்படிப்பட்டவைகளே அல்லவா? மறுபடியும் வெற்றிவேற்கையே நினைவுக்கு வருகிறது.

"பெற்றமும் கழுதையும் மேய்ந்த அப்பாழ்
பொற்றொடி மகளிரும் மைந்தரும் செறிந்து
நெற்பொலி நெடுநகர் ஆயினும் ஆகும்."

இப்படிப்பட்ட எண்ணங்களை எல்லாம் சிதைந்து போன பொலனறுவை என் உள்ளத்தில் தோன்றச் செய்தது.

வழியெல்லாம் அரசியலின் நிலையாமையையும் கலை களின் காலம் கடந்த வாழ்வையும் சீர்தூக்கிப் பேசிக் கொண்டே, நேராக இங்கு வந்து சேர்ந்தோம். இந்தப் பள்ளிக்கூடத்தின் எதிரே பரந்த புல்வெளி இருக்கிறது.

அப்பால் அமைதியான கடல் இருக்கிறது. அதற்கு அப்பால் ஒரு தீவில் நிற்பது போல் கலங்கரை விளக்கம் தோன்றுகிறது. பல கப்பல்களின் போக்குவரவும் தெரிகிறது. துறைமுகம் மிகப் பெரியது; இயற்கையாக அமைந்தது. கடல் அதற்கு ஏற்றவாறு வளைந்து ஏரி போல் வளைகுடா அமைந்துள்ளது. அதனால்தான் ஆரவாரம் செய்யாத அமைதியான கடலைக் காணமுடிகிறது. அகலமான கடற்கரையையும் கண்டு மகிழ முடிகிறது.

ஆனால் திருக்கோணமலை என்ற பெயரைக் கேட்டு இங்கே ஏதாவது மலை இருக்கும் என்று எண்ண வேண்டாம். கடலுள் வளைந்து செல்லும் நிலப்பகுதியில் ஒரு முனையில் உயரமான பெரும் பாறைகள் நிற்கின்றன. அந்தப் பாறைகள் மலைபோல் நிற்பதையும் கோணலாக நிற்பதையும் கண்டவர்கள் கோணமலை என்றார்கள். அதனால் ஊருக்குத் திருக்கோணமலை என்று பெயராயிற்று.

திருக்கோணமலையிலிருந்து ஐந்து கல் தொலைவில் இருக்கும் **கன்னியா** என்ற ஒரு கிராமமும் உண்டு. அங்கே சில குடிசைகள் உள்ளன. கோயில் ஒன்று உள்ளது. அங்கே ஏழு கன்னிகைகள் இல்லை. மாரியம்மன் கோயில் என்று சொல்கிறார்கள். ஆனால் அதுபோலவும் இல்லை. தமிழ்நாட்டில் சேரன் செங்குட்டுவன் பத்தினிக் கடவுள் கண்ணகிக்குக் கோயில் கட்டி வழிபட்டதை இலங்கையிலிருந்து கயவாகு மன்னன் போய்க் கண்டு போற்றினான் அல்லவா? இதைச் சிலப்பதிகாரக் கதையில் கண்ணகியைப் பற்றிப் படித்தபோது நீ தெரிந்துகொண்டிருக்கலாம். இளங்கோவடிகள் அதைக் கூறும்போது, இலங்கை மன்னன் கயவாகுவும் தன் நாட்டிற்குத் திரும்பிச்சென்று கண்ணகிக்குக் கோயில் கட்டினான்

என்று கூறுகிருர். அப்படி இலங்கையில் பத்தினி வழிபாடு ஓர் இயக்கமாகப் பரவியிருக்கும். அப்போது திருக்கோணமலைக்குப் பக்கத்தில் இருந்த வெந்நீர் ஊற்று உள்ள இடத்தில் கண்ணகியின் சினத்தை நினைந்து ஒரு கோயில் கட்டி வழிபட்டிருக்கலாம். ஹாம்டன் வாராவதி அம்பட்டர் வாராவதி என்று மாறுவது இருபதாம் நூற்ருண்டிலும் உள்ளபோது, கண்ணகி கன்னியா என்று திரிந்திருக்க முடியாதா ?

## நான் அன்னமாக இருந்தால்!

இந்த வெந்நீர் ஊற்றுக்களில் குளிக்கப் பெற்றது என் வாழ்க்கையில் பெற்ற சிறந்த பேறுகளில் ஒன்று என்றே கருதுகிறேன். நினைக்குந் தோறும் பேசுந் தோறும் இன்பம் பயக்கும் இயற்கையன்னையின் அருள் இது என்று சொல்லுவேன். குமரித்துறையில் அயிரை மீனை மேய்ந்துவிட்டு இமயமலைச் சாரலை நோக்கிப் பறப்பதாக அன்னப் பறவையைக் குறித்துப் புலவர் ஒருவர் பாடியுள்ளார். நான் அன்னமாக இருந்தால்—அல்ல, அல்ல, அன்னமாக இருந்தால் வெந்நீரில் குளிக்கும் இன்பத்தை உணர முடியாதோ, என்னவோ—அன்னப் பறவை போல் பறக்கும் ஆற்றல் பெற்றிருந்தால், ஒவ்வொரு சனி ஞாயிறு விடுமுறையிலும் சென்னைக் கடற்கரையிலிருந்து உயரப் பறந்து போய்த் திருக்கோணமலைக் கடற்கரையை அடைந்து அந்தப் பொறுமைப் பாறைகளின் மேல் சிறிது நேரம் தங்கியிருந்து கன்னியாவுக்குப் பறந்துபோய் மூன்று முறை நான்கு முறை வெந்நீர் ஊற்றுக்களில் குளித்து இன்புற்றுத் திரும்பி வருவேன். தமிழ்நாட்டில் கந்தகக் கிணறு பார்த்திருக்கிறேன். மற்றத் தண்ணீருக்கும் அதன் நீருக்கும் ஒரு வேறுபாடும் இல்லை. தண்ணீராய்க் குளிர்ச்சியாகத்தான்

இருக்கிறது. சேலம் மாவட்டத்தில் அனுமன் தீர்த்தமும் பலமுறை குளித்துக் கண்டதுதான். கன்னியாவின் வெந் நீர் ஊற்றுக்களின் இன்பத்தில் ஒரு சிறிதும் அதில் இல்லே யென்று சொல்லவேண்டும். வெளியூர்ப் பயணம் என்ருல் பொதுவாக வெறுப்படையும் என் மனம் கன் னியா என்ற பெயரைக் கேட்டால் தாவிக் குதிக்கும்! எத்தனே முறையும் இங்கு வரலாம்; இயன்ற போதெல் லாம் வரவேண்டும் என்று மனம் தூண்டுகிறது. இள மையில் பாலாற்றுத் தெளிந்த ஊற்றில் மணிக் கணக் காய்ப் படுத்திருக்கும் வழக்கம் எனக்கு இருந்தது. அதைக் கண்ட நண்பர் ஒருவர், "நீ முன்பிறவியில் மீனுக இருந் திருக்க வேண்டும்" என்ருர். நீரைக்கண்டால் எனக்குத் தனி விருப்பந்தான். ஓடை, ஆறு, குளம், ஏரி, கடல், அருவி எல்லாம் எனக்குச் சலிப்பு இல்லாதவைகள்தான். ஆனல் கன்னியாவின் வெந்நீர் ஊற்றுக்களுக்கு என் உள்ளத்தில் என்றும் தனியிடம் உண்டு. இந்த ஊற்றுக் கள் கண்ணுக்கு இன்பம் அளிக்கவில்லே. புலன்களுக் கெல்லாம் அடிப்படையான ஊற்றின்பத்தை மெலிந்த சோர்ந்த என் உடலுக்கு அளித்து உள்ளக் கிளர்ச்சி தந்தவை இவை.

ஏழு ஊற்றுக்கள்

ஊற்றுக்கள் ஊற்றுக்கள் என்று திரும்பத் திரும்பப் பன்மையில் குறிப்பிடுகிறேன். ஒரே இடம்தான்; ஆனல் ஏழு ஊற்றுக்கள். ஏழு ஊற்றுக்களிலும் ஒரே நீர்தான்; ஆனல் ஏழு பதமான வெந்நீர். ஒன்றில் வெதவெதப் பான நீர்; மற்ருென்றில் சிறிது பதமான வெந்நீர்; இன்னென்றில் பதமான வெந்நீர்; இன்னென்றில் சிறிது சூடான வெந்நீர்; இன்னென்றில் சூடான வெந்நீர்; மற்ருென்றில் மிகச் சூடான வெந்நீர் வேருென்றில் ஆறிய வெந்நீர் – இவ்வாறு சொல்லக்

கூடிய வகையில் வெவ்வேறு பதமாக ஏழு வகையான வெந்நீர் ஊற்றுக்கள் உள்ளன. இதிலும் அதிலுமாக மாறி மாறி நீர் மொண்டு வார்த்துக் கொள்ளக் கூடிய வாறு, ஏழும் ஏழு கிணறுகளில் அடுத்தடுத்து உள்ளன. நில மட்டத்தில் நீர் உள்ளது ஆகையால் கிணற்றின் சுவரை அடுத்து நின்று குனிந்து குனிந்து கையில் பிடித்த வாளியால் நீரை மொண்டு மொண்டு வார்த்துக் கொள்ளலாம். இரண்டரை அடி ஆழமுள்ள தொட்டிகள் போல் கிணறுகள் அமைந்துள்ளன; ஒவ்வொன்றிலும் ஊற்றுச் சுரந்து கொண்டே இருக்கிறது. ஒவ்வொன் றும், "தொட்டனைத்து ஊறும் மணற் கேணி"யாய் உள்ளது. ஆகையால் எவ்வளவு நீர் மொண்டு வார்த்துக் கொண்டாலும் நீர் குறைவதும் இல்லை, வெப்பம் மாறு வதும் இல்லை. உடம்பில் வார்க்கும் நீரெல்லாம் ஓடி வெளியே பாய்வதற்கும் தக்க ஏற்பாடு செய்திருக்கிறார் கள். சுற்றிலும் மதில் சுவரும் உண்டு. ஆகையால் இடம் தூய்மையாகக் காக்கப்பட்டு வருகிறது. நாங்கள் குளிக்கத்தொடங்கியபோது வாடிக்களைத்துச் சோர்ந்திருந் தோம். குளித்துவிட்டு வெளியே வந்த போது நன்றாக உறங்கி எழுந்தவர்களைப் போல் புதுவாழ்வு பெற்று வந் தோம். வெந்நீரில் குளிப்பதால் களைப்பும் சோர்வுமே வரும் என்று கண்டிருக்கிறோம். நான் வெந்நீரில் குளிக் கத் தயங்குவதற்கு அதுவே காரணம். படிப்பும் அறிவும் இல்லாத தாய்மார்களின் கையில் அகப்பட்டுப் பொறுக்க முடியாத வெந்நீரில் வெந்து மெலிந்து கண் அயரும் குழந்தைகளையும் நீ பார்த்திருப்பாய். அதனால் இந்த வெந்நீர் ஊற்றுக்களும் அப்படித்தான் இருக்கும் என்று எண்ணிவிடாதே. இந்த வெந்நீர் இயற்கையன்னை அருளுவது. களைப்புக்கும் சோர்வுக்கும் மெலிவுக்கும் மருந்து இந்த வெந்நீர்.

நெடுநேரம் குளித்தோம். ஒரு மணி நேரத்திற்கு மேலும் இருக்கலாம். ஆயினும் சலிக்கவில்லை. குளிக்கும் போது நாங்கள் எல்லோரும் குழந்தைகள் ஆகிவிட்டோம். விளையாட்டு உணர்ச்சி எங்கள் உள்ளத்தில் இருந்தது. ஒருவருடைய தலைமேல் இன்னொருவர் மொண்ட வெந்நீர் விழும். இவருடைய தலைமேல் அவர் வெந்நீர் வார்ப்பார். ஒருவர் தலைமேல் மற்றவர்கள் எல்லோரும் சேர்ந்து வெந்நீர் வார்ப்போம். இப்படி மாறி மாறிக் குளிக்கும்போது ஒருவருடைய வாய் எப்படியோ, "**செழுக்கமலத் திரளன நின் சேவடி**" என்ற திருவாசகத்தைப் பாடத் தொடங்கியது. எல்லோருடைய வாயும் சேர்ந்து பாடத் தொடங்கிவிட்டன. புன்முறுவலோடு அப்பா எங்கள் விளையாட்டை அனுபவித்தார்.

### மனத்தின் இயல்பே இயல்பு!

பேரின்பத்தோடு குளித்து முடித்து வெளியே வந்த பிறகுதான் நினைத்துக் கொண்டேன். மனிதனுடைய மனமே ஒரு தனி உலகமாக இருக்கிறது; அதில் நிகழ் காலத் துன்பம்தான் துன்பமாக, துயரமாக இருக்கிறது. சென்று கழிந்த துயரம் கலையாகி விடுகிறது; வரக்கூடிய துன்பமும் விளையாட்டாக எதிர்ப்படுகிறது. எத்தனையோ மக்களின் துன்பத்தை எல்லாம் இலக்கியமாக்கிப் படிக்கச் செய்கிறது மனம். இந்த வெந்நீர் ஊற்றுக்களில் துயரம் மிகுந்த ஒரு நாளின் நிகழ்ச்சியை ஒரு வேடிக்கை விளையாட்டாக்கிக் காட்டியது மனம். மனத்தின் இயல்பே இயல்பு! அது குழந்தையானல் போதும், போதும்! ஆமாம்! குழந்தைகள்தான் அழுது புலம்புவதையும் ஒரு விளையாட்டாகக் கொள்ள முடியும்!

அன்புள்ள;

வ

### அருஞ்சொற்பொருள்

அன்னம் – சோறு; பறவை.

### வினாக்கள்

1. விபுலாநந்தர்—சிறு குறிப்பு எழுதுக.

2. பொலனறுவை—பெயர்க்காரணம் தருக.

3. யானைக்கு ஒரு காலம் பூனைக்கு ஒரு காலம்—இடங் கூறி விளக்குக.

4. சிதைந்த பொலனறுவை—நினைப்பூட்டும் பொருள்கள் யாவை?

5. 'கன்னியா' பொருள் விளக்கம் தருக.

6. 'நீ முன் பிறவியில் மீனாக இருந்திருக்க வேண்டும்' —இடங் கூறுக.

7. வெந்நீரின் ஏழு வகைகள் எவை?

8. 'செழுக்கமலத் திரளன நின் சேவடி'—இடங்கூறி விளக்குக.

### பயிற்சி

1. இன்பச் செலவினால் அடையும் பயன்களை எழுதுக.

2. நீ சென்ற இடங்களையும் கண்ட காட்சிகளையும் ஒரு கடிதமாக எழுதுக.

3. சேர்த்து எழுதுக: ஊறு+இன்பம்.

4. பிரித்து எழுதுக: கட்டியாண்டு, கலங்கரை விளக்கம், வெந்நீர்.

5. எதிர்ச்சொல் கூறுக: சிற்றூர், கோணல், பேரின்பம்.

6. வாக்கியத்தில் அமைத்திடுக: மாறி மாறி, குனிந்து குனிந்து, மொண்டு மொண்டு.

# 10. வீட்டிற் கலை

[ஓவியக் கலைஞர் திருமதி. சி. பெரியநாயகி]

## கலையின் விளக்கம்

கலை என்பது என்ன என்ற கேள்விக்கு எங்கும் விடை கிடைப்பது அரிதாயிருக்கிறது. கலை, காணும் இடங்களில் கருத்துக் கிசையக் காணப்படும்; பொருளைக் கொடுக்கும்; கண்டோரைக் கவரும். உள்ளத்தில் உண்டாகும் கற்பனையை உணர்ச்சி குன்றாமல் பிறருக்கு வெளிப்படுத்தி அவரைக் கவரச் செய்வதே கலை. அது, அழகிய கதையிலே இருக்கலாம்; கவிதையிலே இருக்கலாம்; அல்லது ஓவியத்திலே, நாட்டியத்திலே, பேச்சிலே வாழ்க்கையிலே விளங்கித் தோன்றலாம்.

எளிய வாழ்க்கையில், அல்லது வீட்டில் இந்தக் கலையைக் காண முடியுமா ? ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு வீட்டில்தான் வாழ்கிறான். ஆனால் எல்லா வீட்டிலும் கலை விளக்கம் அடைவதில்லை.

கலை என்பது எங்கும் தோன்றுவதில்லை. இயற்கையில் கலை இருக்கிறது. ஏனென்றால், அது இறைவன் என்னும் கலைஞனின் படைப்பு. கலைஞன் எங்கிருக்கிறானோ அங்குதான் கலையுண்டு. ஆகவே, வீட்டிலே கலையுள்ளம் படைத்த ஒருவர் இருந்து கலையை உணர்ச்சி குன்றாமல் பிறருக்கு வெளிப்படுத்தும் நிலையில் வாழ்ந்தால்தான் அங்கு கலையைக் காணலாம். மனிதன் இறைவனாகிய கலைஞனால் படைக்கப்பட்டவன். அவன் கலையுள்ளம் படைத்தவனாகவே இருக்க வேண்டும், எல்லாருக்கும் கலையைப் பெருக்க வழியுண்டு. ஆனால்,

சோம்பல், சோர்வு என்னும் கொடிய பழக்கங்கள், மக்களின் உள்ளத்திலே இக் கலையுணர்ச்சியை அவித்துவிடுகின்றன. ஆகையால்தான் கலை சில வீடுகளில் மிளிர்கின்றது, பல வீடுகளில் காணப்படுவது இல்லை.

வீட்டின் அமைப்பு

வீட்டின் அமைப்பிலே கலையை எந்தெந்த நிலையில் காணலாம் என்ருல், வீட்டினுடைய உயரத்திலோ அன்றிப் பருமையிலோ அன்று. பெருமிதத் தோற்றத்திலே, கவர்ச்சியான அமைப்பிலே கலையைக் காணலாம். அது பெரும்பாலும், கட்டுபவனுடைய கலை உள்ளத்தைப் பொருத்திருக்கிறது.

வீட்டினுள் காணப்படும் கலைக்கு வீட்டுத் தலைவன் அல்லது தலைவி பொறுப்பாளி. சிறப்பாகத் தலைவிதான் பொறுப்பாளி என்று சொல்லலாம். முதலாவதாக, வீட்டிலே அறைகளைச் சரியான முறையிலே தேர்ந்தெடுப்பதிற் கலை இருக்கிறது. சிலர் வசதியான முறையில் தேர்ந்தெடுத்திருக்கலாம். அதுவும் இன்றியமையாததே. ஆனல், கலை அதில் இருக்கமுடியாது. தேவையை நிறைவு செய்வதோடு எந்த அழகுணர்ச்சியுடன் தேர்ந்து கொண்டாரோ, அந்த உணர்ச்சி எதிரொலி ஆகும் முறையில் அறைகளை அமைத்தல் வேண்டும். ஒருத்தி தன் நெற்றியிலே பொட்டிட்டுக் கொள்ளுகிருள். அதிலே எப்பொழுதும் கலை இருக்கிறது என்று சொல்லிவிட முடியாது. மேல்நாட்டு உடை அணிந்த பெண்ணின் நெற்றியிலுள்ள திலகம் அழகை வெளிப்படுத்துவதில்லை. கரிய கூந்தல் தவிழ்ந்தாடும் அழகிய நெற்றியிலே நம் நாட்டு உடைக்கு ஏற்பக் குங்குமத்தைத் தரித்துக் கொள்ளும்போது அங்கே கலையைக் காணலாம். அதுபோலத்தான் கலையழகு

தோன்றும்படி தேர்ந்தெடுக்கப்பட்ட அறைகளிலே தேவையான பொருட்களை அமைத்து வைப்பது.

சில வீடுகளிலே அழகிய வண்ணம் பூசப்பட்டசுவர், விலையுயர்ந்த கம்பளம் விரித்த தரை, அழகிய பொருள்கள், விலையுயர்ந்த பொருட்களின் குவியல்கள் இவற்றைக் காணலாம். ஆனால், அங்கு வெண்மாவு கொண்டு கோலம் இடப்பட்ட முற்றத்தில் பசுஞ்சாணத்தால் மெழுகப்பட்ட ஒரு திண்ணையில் காணப்படும் கலை சிலபொழுது காணப்படுவதில்லை; காரணம், அங்கேயும் தேவையைப் பூர்த்தி செய்யக்கூடிய வகையிலோ, அன்றிச் செல்வத்தின் பெருமிதத்தை வெளிக்குக்காட்ட வேண்டிய அளவிலோ பொருள்கள் நிரப்பப் பட்டிருப்பதுதான். பொருள்கள் அமைக்கப்பட்டிருக்கும் விதத்தில், எளிய முறையில் ஆயினும், அழகுணர்ச்சி தோன்றக்கூடிய வகையில், தேவைக்கு இன்றியமையாத பொருள்களை இடத்திற்கு அமைந்தாற்போல வைப்பதுதான் கலை.

பொருள்களை இடத்திற்கேற்ப அமைப்பதில் கலை மிளிர்கிறது என்றால், அவற்றைப் பொறுக்கி எடுப்பதிலும் கலை காணப்பட வேண்டும். விலை மலிவு என்ற காரணத்தைக் கொண்டோ பெருமைக்காகவோ பொருளை வாங்கி நிரப்பினால் கலையைக் காணமுடியாது. நம் அறையின் அமைப்பு என்ன, அந்த அமைப்பிற்கேற்ப இப்பொருள் பொருந்துமா? பொருந்துவதோடன்றி அழகு காணப்படுமா என்று உன்னிப்பார்த்துப் பயனுள்ள பொருட்களை வாங்குவதில் கலை இருக்கிறது என்று சொல்லலாம்.

எடுத்துக்காட்டாக, ஒரு நடுத்தரமான வீடு, போதுமான அறைகள், வீட்டிலுள்ளோர் படித்த நாகரிக வாழ்க்கையிலுள்ளவர்களுடன் பழகுகின்றவர்கள் என வைத்துக் கொள்ளுவோம். அவர்களுக்குத் தங்கள்

நண்பர் வந்தால் அவர்களுடன் உட்கார்ந்து அளவளாவ ஒரு நல்ல அறை வேண்டும். அங்கே உட்காருவதற்கு ஒரு அழகான கட்டிலை வைத்திருந்தால் அது கலையன்று. தங்கள் தகுதிக்கு ஏற்பச் சில நாற்காலிகள், அவற்றோடு பொருந்தும் ஒரு சிறிய வட்ட மேசை, மேசையின்மீது விரிப்பு, அழகிய பூக்களைத் தாங்கி நிற்கும் ஒரு சிறிய செம்பு இவைகளை அமைக்கும் முறையில் அமைப்பதிலே கலை காணப்படுகிறது.

பல நிறப்பூக்களை எடுத்துச் செம்பிலே தண்ணீர் விட்டு வைத்துவிட்டால் கலை அங்கே காணப்படுவதில்லை. செம்பின் தோற்றம், பூக்களின் தோற்றம் இரண்டிற்கும் பொருத்தம் காணப்பட வேண்டும். ஒடுங்கி நீண்ட பூச் செம்பில் பருத்து திரட்சியாகக் காணப்படும் மலர்களைக் குட்டையான தண்டுகளுடன் வைத்தால் பொருந்தி நிற்க மாட்டா. அதுபோலவே பருத்து விரிந்த செம்பில் நீண்ட தண்டுகளுடைய மெல்லிய அல்லி போன்ற மலர் களை விட்டு வைத்தல் பொருந்தாது. நிறங்களையும் பார்த்தே அமைத்தல் வேண்டும். ஆகவே, கலை என்பது பொருட்கள் ஒன்றோடொன்று பொருந்தும் நிலையிலே தான் காணப்படும். மாலை என்றால், மதியமும் மலர்களும் தென்றலும் எவ்வாறு பொருந்தி வருகின்றனவோ, அமாவாசை என்றால், நள்ளிரவு இடியின் முழக்கம், மின்னலின் பிளவு இவை எவ்வாறு பொருந்தி நிற்கின் றனவோ, அவ்வாறு அளவில் அறையின் தேர்வு, அமைப்பு, பொருள்கள், பொருட்களின் தேர்வு முத லியவை பொருந்தி இருக்க வேண்டும்.

வாசிப்பு அறை

நண்பர்களுடன் கூடிப்பேசும் அறையைத் தவிர வேறு பல அறைகள் தனித்தனிப் பயன்களுக்காக விட்டி

ருக்கிரோம் என்று வைத்துக் கொள்வோம்; அந்தந்த அறையில் கலை எவ்வாறு பொலிவுறும் என்று பார்க்கலாம். வீட்டிலே வாசிப்பு அறை ஒன்று இருக்கிறது. அதிலே கண்ணைக் கவரும் நூல்கள் நிரம்ப உள. அழகிய விளக்கும் உண்டு. மேலே மின்னாற்றல் காற்ருடியும் உண்டு. இவ்வளவு பொருட்கள் இருந்துவிட்டால் கலை உண்டு என்று சொல்ல முடியுமா ? அதுதான் இல்லை.

அந்த அறையினுள் செல்லும் ஒருவருக்கு உட்கார்ந்து புத்தகங்களைப் படிக்க வேண்டும் என்னும் உணர்ச்சி உண்டாகும் நிலையில் அந்த அறையில் பொருட்களை அமைத்து இருக்க வேண்டும்.

விளக்கு வாசிப்பதற்குப் போதுமான ஒளியை உடையதாக இருக்க வேண்டும். நடுவிலே அழகிய மேசை, சுற்றிலும் நாற்காலிகள் வேண்டும். விரிப்புகளோ பூச்செம்புகளோ அத்தனை இன்றியமையாததில்லை. இங்கேயும் கலையைக் காணவேண்டும். எங்கே என்ருல், அலமாரியிலே, அலமாரிகளை அமைத்திருக்கும் நிலையிலே, அதில் நூல்களை ஒழுங்காக அழகாக முறை தவருமல் அடுக்கியிருக்கும் அந்தத் தகுதியிலே கலையைக் காணலாம். வீடு சிறிதாக இருக்குமேயானுல், கலையழகு குன்ருத வண்ணம் அதையே அலுவலக வேலைகளைச் செய்யும் ஓர் இடமாகவும் கொள்ளலாம். கலையழகு அதனுல் குன்றிவிடுவதில்லை. வைத்திருக்கும் முறை சரியானதாக இருக்க வேண்டும்.

படுக்கையறை

படுக்கையறை ஒவ்வொரு வீட்டிற்கும் இன்றியமையாதது. நல்ல காற்ருேட்டமுள்ள அறைகளே தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். இங்கே கட்டில் உபயோகிக்கப்

படுமானல் அதனடியில் பெட்டியோ மற்ற சாமான்களோ வைக்கப்படக் கூடாது.

ஒரு சிறிய அலங்கார மேசை, டிரெஸிங் டேபிள், வார்டு ரோப் அவசியமானல் உட்கார்ந்து வாசிக்க ஒரு சாய்வு நாற்காலி, அதற்கென ஒரு மேசை விளக்கு இவ்வளவு பொருட்கள் இருந்தால் நலம். ஆனல், அங் கேயும் அவைகளைப் பயன்படுத்தும் முறையில் கலையைக் காணலாம். படுக்கை விரிப்பிலே, தலையணை விரிப்பிலே, கொசு வலையிலே தையலிலே கலையுள்ளம் மிளிர்வதைக் காணலாம்.

சாப்பாட்டு அறை

பின்னர், சாப்பாட்டு அறைக்குச் செல்லுவோம். அங்கே தேவையான பொருள்கள் அவரவர் வழக்கத்திற் கேற்ப மாறுபடலாம். கலை வேண்டுமானல் ஒரு முறையை அனுசரிக்கவேண்டும். ஒன்று மேனுட்டு முறை; இல்லா விடில் தமிழ்நாட்டு முறை.

உண்கலங்கள் பெரும்பாலும் பயன்படுவதற்கு ஏற் ருற்போல ஒரேவிதமான வேலைப்பாடுள்ளதாக இருக்க வேண்டும். அவைகளைத் தூய்மை செய்து அடுக்கி வைத் திருக்கிற முறையில் கலை கமழவேண்டும். பால், மோர், தயிர், பழம், சர்க்கரை, வெண்ணெய் ஏனைய பொருட்களை ஒரு அலமாரியிலே, உள்ளே எறும்பு செல்லாதபடி கால் களிலே தண்ணீர் ஊற்ற வசதியுடைய நிலையிலே அமைத்துவைப்பது வெறும் பயன்மட்டுமன்று; கலையுமே தான். செல்வர்கள் ரெபரிஜரேட்டரை (Refrigerator) அதற்குப் பதில் வைத்துக் கொள்ளலாம்.

## சமையல் அறை

சமையல் அறைக்குச் சென்றால் அங்கேதான் கலை முழுவதுமாக எதிர் ஒளி வீச வேண்டும். ஏழையின் குடிசையானாலும் சரி, அல்லது செல்வந்தரின் சமையலறை யென்றாலும் சரி, அங்கே பொருட்களை வைக்கும் முறையில் கலையைக் காணவேண்டும். நடுநிலையான வீட்டிலே சமையலறையில் கலையைக் காணமுடியும் என்றால் எப்படி இருக்கவேண்டும்? ஏனைய அறைகளை விடச் சமையலறை சற்றுப் பெரிதாக இருந்தால் நல்லது. அடுப்பு, அதற்குமேல் புகைப்போக்கி, அடிப்பகுதியிலே மழைக் காலத்தில் மட்டும் விறகுகளைக் காயவைத்துக் கொள்ளப் போதுமான இடம், இவை வேண்டும். ஆனால் தரையிலே அடுப்புகளை அமைத்து விட்டால் இந்த வசதி ஏற்படாது.

அவ்வறையிலே பொருட்களை அமைத்திருக்கும் முறை உட்சென்றவுடன் அறை விசாலமானது என்று காட்ட வேண்டும். ஆனால் வேலை செய்பவர்களுக்கு அலைச்சல் அதிகம் இருக்கக்கூடாது.

அடுப்பின் பக்கத்திலே சிமிட்டியாலான ஒரு மேசை போன்ற உயரமான திண்ணை நாள்தோறும் கழுவிவிடக் கூடிய நிலையில் இருக்க வேண்டும். சமையலறையின் ஒரு மூலையிலேயே ஒரு சிறிய தண்ணீர்க் குழாய், அதன் நீர் உள்ளே தெறித்து விழாத நிலையில் ஒரு சிறிய தொட்டி, இவைகளை வைத்திருப்பது மிகவும் நல்லது. அம்மி, மாவாட்டும் உரல் இவ்வளவையும் சமையலறையிலேயே வைத்துக்கொள்ளக்கூடிய அளவில் அவ்வறை பெரிதாக இருப்பது நல்லது. ஒரு பெண்ணின் கலைத் திறன், கலையுணர்ச்சி முழுவதும் அவள் சமையலறையில் தான் விளங்கவேண்டும்.

சமையலறையில் மட்டுமன்று, அதனை அடுத்துள்ள பொருள்களைச் சேகரித்துவைக்கும் அறையை மிகவும் தூய்மையாக வைத்திருப்பதிலும் பொருட்களை வைத் திருப்பதிலும், பொருட்களை வைத்திருக்கும் பாண்டங்களை அடுக்கி வைத்திருக்கும் எளிய முறையிலும் கலை இருக்கத் தான் செய்கிறது. பொருட்களை வைக்கும் பாண்டங்கள் கூடியமட்டும் ஒரே வகையான பொருள்களாயும் ஒரே விதமான வேலைப்பாடுள்ளவைகளாகவும் அமைந்திருந் தால், அதில் ஒரு தனிக்கலை காணப்படும்.

சுற்றுப்புற அமைப்பு

வீட்டைச் சுற்றியுள்ள பாகங்களுக்குச் சென்றால், அங்கேதான் கலை தன் உன்னத நிலையில் விளங்க வேண்டும். சுற்றுப்புற அமைப்பு பிறரைக் கவரக்கூடிய நிலையில் இருக்கும்பொழுது கலை அங்கே காணப்படு கிறது.

தோட்டத்தை எடுத்துக்கொள்ளுவோம். பூந்தோட் டம் அமைப்பதிலும் கலையைக் காணலாம். வீட்டின் முன் பக்கம் காய்கறித் தோட்டம் என அமைக்கவேண்டும். தோட்டம் என்றால் செடிகளை நட்டுப் பயிராக்குதல் என்று கொள்ளமுடியாது. அவைகளை வரிசைப்படுத்தி, முறைப் படுத்தி அமைப்பதில்தான் கலை இருக்கிறது. தரையில் வைக்கவேண்டிய செடிகளைத் தோற்றம் நிறம் முதலிய வைகளுக்கேற்ப ஒழுங்குபடுத்தி நட்டுவிட்டு, தொட்டி களில் நட்டு வைத்தலில் தனிக்கலை காணப்படுகிறது. மேலும் பாத்திகளின் இரு கரைகளிலும் குட்டையான வெட்டிவிடக் கூடிய செடிகளை வைத்து அவைகளை அழ காக வெட்டி விடுவதில் கலை காணப்படுகிறது. பின்னிப் பின்னி அடர்ந்து வளர்ந்து ஒழுங்கற்று நிற்கும் செடிகளை எவ்வளவு அழகான முறையில் வெட்டி

வளர்க்கிருர்கள் என்பதை, திருவனந்தபுரம், பங்களூர், நீலகிரி, கொடைக்கானல், கொழும்பு, தில்லி போன்ற இடங்களில் சென்று பார்த்தால் நன்கு தெரியும்.

இவ்வாறு வீட்டின் பல பகுதிகளேயும் பலமுறை களாக வைத்திருப்பதால் என்ன விதமான கலேயைக் காண்கிருேம்? அங்கே கவிதையிலே காணும் கலே, சிற்பத் திலே காணும் கலே, சித்திரத்திலே காணும் கலே ஆகிய பல கலேகளேக் காண்கிருேம். வீட்டை அமைக்கும் முறை யில் கலேயுள்ளத்தின் கற்பனேத்திறன் காணப்படுகிறது. இலக்கியத்திலே அல்லது கவிதையிலே காணப்படும் கலேயின் தோற்றமும், வீட்டின் பொருட்களே அமைக்கும் முறையிலே காணப்படும் கலேயின் தோற்றமும் ஒன்றே.

### சித்திரக் கலே

சித்திரக் கலேயை நம் வீட்டிலே அழகுபடுத்துவதற் காக உபயோகிக்கும் படங்கள், விரிப்புகள், தொங்கல்கள் முதலியவைகளில் காண்கிருேம். சித்திரத் தையல்கள் வீட்டின் அழகை மேம்படுத்துகின்றன. ஆனுல், அவை களே உருவாக்கும் நிலேயில் முழுச் சித்திரக்கலே காணப் படுகிறது. இயற்கையின் அழகைச் செயற்கை வாயிலாகக் காட்டுவதே ஒரு கலேயன்ருே?

### சிற்பக் கலே

அடுத்தாற்போல, சிற்பக் கலேயை எங்குக் காண்கி ருேம் என்ருல், அது வீட்டைச் சுற்றியுள்ள தோட்டங் களிலே செடிகளே நாம் வெட்டி விடுகின்ற நிலேயிலே காண்கின்ருேம். தோட்டத்திலே சிற்பக்கலேயை மட்டும் காண்கிருேம் என்று சொல்லுதல் சரியன்று. அங்கே கற்பனேக்கு இடமுண்டு, ஓவியக்கலேக்கு இடமுண்டு,

சிற்பத்திற்கு இடமுண்டு. ஆகவேதான் வீட்டிலே கலை, வீட்டின் அமைப்பிலே கலை, பொருட்களிலே கலை, அகத்திலே கலை, புறத்திலே கலை, எங்கும் கலை என்று கூறுகிறோம்.

கலை உணர்ச்சியை எவ்வாறு தோற்றுவிக்க வேண்டுமென்றால், புதிதாக உண்டாக்க வேண்டிய அவசியமில்லை. இறைவன் படைத்த எல்லாப் பொருட்களிலும் கலை உண்டு. அறிவுள்ள பொருட்களிலே கலையுடனே கலையுணர்ச்சியும் உண்டு. ஆகவே, அக்கலையுணர்ச்சியை எழுப்பி விடுவதின் மூலம் கலையைப் பெருக்க வேண்டும். எவ்வாறு எனில், கலையின் பொலிவு நிறைந்த இடங்களைப் பார்க்க நேரிடுவதால் கலையுணர்ச்சி தூண்டப்படுகிறது; பலரோடு பழகுவதால் ஏற்படுகிறது. எல்லாவற்றிற்கும் மேலாகச் சோம்பல், சோர்வு நீங்கி, உழைப்பு ஊக்கம் ஏற்படும்போது தொழிலிலே உள்ளம் ஈடுபடுகிறது. தொழில் சிறக்கும் நிலையில் கலை ஏற்படுகிறது.

வீட்டிலே மகளிர், வேலைக்காரர்கள் கையில் எல்லாப் பொறுப்பையும் ஒப்புவித்துவிட்டு நிம்மதியாக இருக்கலாம் என்று நினைக்கும் தவறான எண்ணம் நீங்கினால் மட்டும் எல்லாருடைய வீட்டிலும் கலை கமழும். வேலைக்காரர்களைக் கொண்டு வேலைகளைச் செய்யச் செய்து பொறுப்பை மட்டும் தாங்களே ஏற்று நடத்தவேண்டும். அப்பொழுதுதான் வீட்டிலே கலை நிறைந்திருக்கும். கலை நிறைந்த வீட்டிலே வாழ்வு மகிழ்ச்சியாய் இருக்கும். மகிழ்ச்சி நோயைப் போக்கும். நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வமாகும். ஆகவே, அத்தனைக்கும், வாழ்விற்குக்கூடக் கலை இன்றியமையாதது. அதுவே அடிப்படையென்றே கூறலாம். எனவே, கலை நிறைந்திருந்தால், வீடு வீடாகும் அன்றோ!

## அருஞ்சொற்பொருள்

மிளிர்கின்றது - ஒளி வீசுகின்றது. பருமை - பெரிய தோற்றம். திலகம் – பொட்டு. உண்கலம் – உணவு உண்ணும் பாத்திரம்.

## வினாக்கள்

1. கலையாவது யாது?

2. கலை காணப்படும் இடங்கள் எவை?

3. பல வீடுகளில் கலை விளக்கம் அடையாமைக்குக் காரணம் என்ன?

4. வீட்டில் கலை விளக்கம் அடைய நாம் என்ன செய்ய வேண்டும்?

5. படிப்பு அறை, படுக்கையறை, சாப்பாட்டு அறை, சமையலறை ஆகியவை எவ்வாறு அமைய வேண்டும்?

6. வீட்டின் வெளிப் புறங்களில் கலையழகை எவ்வாறு உண்டாக்கலாம்?

## பயிற்சி

சிந்தனைக்கு : உன் வாழ்க்கையில் கலையுணர்வு மிளிர நீ மேற்கொள்ள இருக்கும் செயல்கள் யாவை? இருபது வரிகளில் கட்டுரை வரைக.

# 11. நெய்வேலி

[திரு. அ. சண்முகம் B.A., L.T.]

**நெய்வேலி** என்பது சென்னை மாநிலத்தின் தென்ஞர்க்காடு மாவட்டத்தில் கடலூர் வட்டத்தைச் சேர்ந்த ஒரு சிற்றூர் ஆகும். இதனருகில் **வள்ளலார்** அமைதி பெற்ற மேட்டுக்குப்பம், இவரால் அமைக்கப்பெற்ற **'சத்தியஞான சபை'** உள்ள வடலூர் எனும் சிற்றூர்கள் உள்ளன. நெய்வேலி மண் இராமலிங்கரடிகளால் மிதிக்கப்பட்ட பேறு பெற்றதெனப் பலர் நினைக்க இடமுண்டு.

## நீருடன் நிலக்கரி

நெய்வேலியில் நீர்வளம் குன்றியிருந்தமையால் நில வளத்தைப் பெருக்கவும் நீரூற்றுகளை மேல் கொணரவும் நானூறு அடிவரையில் அகன்ற குழாய்க்கிணறுகளை இறக்கினபொழுது ஆங்காங்கு நீருடன் நிலக்கரியும் வெளிவருவதைக் கண்டனர். வடக்கே உள்ள **'ஜாம்ஷெட்பூர்'**,**'சித்தரஞ்சன்'** போன்ற பெரும் தொழிற்சாலைகளை இங்கும் அமைக்கக்கூடும் என்பது தெரிய வந்தது. சென்னை மாநில அரசினர் நூறு சதுர கல் பரப்புடைய அவ்விடத்தை வாங்கி கனிவெட்டும் பணியிலிறங்கினர். வங்காளத்திலிருந்து நிபுணர் **' கோஷை '** அழைத்து அங்கு நிலக்கரி இருக்குமளவையும் அதை வெளியில் கொணருவதற்கு ஏற்ற வழிகளையும் ஆராய்ந்துரைக்குமாறு பணித்தனர்.

## ஆய்வின் பயன்

1953-ஆம் ஆண்டில் அவர் செய்த ஆய்வின் பயனாக நூற்று ஐம்பதடி வரையிலிருந்து நானூற்று ஐம்பதடி

வரையில் கரிப்படிவுகளிருப்பதாயும், வெவ்வேறு ஆழங்களில் மஞ்சள் களி, மணல் களி பிற இருப்பதாக வும் அறிந்து தெரிவித்தார். இப்பொழுது ஐந்தரை சதுர கல் பரப்புள்ள இடத்திலிருந்து இருபது கோடி டன் நிறையுள்ள பழுப்பு நிலக்கரி எடுக்க இயலுமென வும் உறுதி கூறினர். பிறகு, மத்திய அரசினர் நெய் வேலி சுரங்கத் திட்டத்தைத் தாமே ஏற்று எழுபத்தைந்து கோடி ரூபாய் செலவில் கரியை வெளிப்படுத்தத் திட்டமிட்டுள்ளனர். குறிப்பிட்ட சில இடங்களில் தரை யில் பெரும் குழாய்களை இறக்கி நூற்று ஐம்பதடி ஆழத் திலிருந்து தொண்ணூறு டன் எடையுள்ள கரியை வெளிப்படுத்தும் முயற்சியில் நீரூற்றுகள் ஊறி இடர் விளைவித்தன. ஊறும் நீரை உடனுக்குடனே இறைத்து விடுவதற்கேற்ற இயந்திரங்களை வெளிநாடுகளிலிருந்து தருவித்துள்ளனர். இவை மணித்துளி ஒன்றிற்கு ஆயிரம் காலன் நீரை இறைப்பவை. நிறைந்த நிதியும் அறிஞர் குழுவும் அமைந்த அவ்வரசினர் தாமெடுத்த பணியை இனிது முடிப்பரென நம்பலாம்.

### கரியின் தோற்றம்

தரையின் அடியில் எப்படிக் கரி உண்டாகிறதெனத் தெளிவோம். இயற்கை நிகழ்ச்சிகளாகிய பூ நடுக்கத் தாலும், வெள்ளத்தாலும், புயல் காற்றாலும் பல காடுகள் அழிந்து தரையில் புதைபடுகின்றன. இவற்றின் மேல் படிந்த மண் உறுதியாகி மீண்டும் காடுகள் வளரும் நிலமாகிறது. இவையும் நாளாவட்டத்தில் இயற்கையி னழிவு ஆற்றலால் புதைந்துவிடும். தட்ப வெப்ப நிலை வேறுபாடுகளாலும், நுண்ணுயிர்களின் அழிக்கும் செயல் களாலும் காட்டில் வளர்ந்திருந்த வானளாவிய மரங்களும் செடி கொடிகளும், புல் பூண்டுகளும் மற்றும் சிறு உயிர்

இனங்களும் புதைபட்டிருந்தவை ஏறத்தாழப் பத்து கோடி ஆண்டுகளில் பழுப்பு நிலக்கரி (Lignite) ஆகிறது என ஆராய்ந்தறிந்துள்ளனர் நிலஇயல் அறிஞர்கள். இது நிறை நிலக்கரியாக மாறுவதற்கு இதைப்போலிரு மடங்கு காலம் தேவைப்படும். தாவர இனங்கள் செழித்து வளருகையில் பகலவன் ஒளியையும் வெப்பத்தையும் பயன்படுத்துகின்றன என அறிவீர்கள். ஆகவே பல கோடி ஆண்டுகட்குப் பிறகு வெட்டி எடுக்கப்படும் கரியிலும் வெப்ப ஆற்றல் நிறைந்துளது. இதையே நாம் அவற்றை எரிப்பதால் வெளிப்படுத்திப் பயன் பெறுகிறோம். எரி பொருளாகப் பயன்படுவனவற்றில் நிலக்கரியே சிக்கனமானது. நிறை நிலக்கரியைவிடப் பழுப்புக் கரியே சிறந்ததென்பது ஆய்வாளரின் முடிவு. அவ்விதக் கரியே நெய்வேலியில் உளது.

### தொழிலூக்கும் எரிபொருள்

பிற நாடுகள் தொழில் வளர்ச்சியில் முன்னேறியுள்ளதற்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றில் ஒன்று தரையினடியில் உள்ள கருவூலம் கரி தருவதாகும். வெப்ப ஆற்றல் தரும் நிலக்கரி, இரும்பை உருக்குமிடம், நெசவுச்சாலை இவைபோன்ற தொழில் பெருகுமிடங்களில் இன்றியமையாததாகவும், தொழிலூக்குவிப்பதற்குப் பயன்படுவதாகவு முள்ளது. நிறை நிலையடைந்த கரியே பெரும்பான்மையாகப் பயன்படினும், இக்கரியை எரித்து வெப்பம் பெறுகையில் பெரும் புகையும், தீய நாற்றமும் உண்டாகின்றன. செர்மனி, ஆஸ்திரேலியா, அமெரிக்காவில் டகோட்டா போன்ற இடங்களில் சற்று வெப்ப அளவு குறைந்திருப்பினும் புகையாத பழுப்பு நிலக்கரியை வெட்டி எடுத்துப் பயன்படுத்துகின்றனர்.

## கரியின் பயன்கள்

பழுப்பு நிலக்கரியின் பயன்கள் பலவுண்டு. நீராவி இயந்திரங்களை ஓட்டுவதற்குத் தற்போது வடநாட்டிலிருந்து இங்குக் கொணரும் இருபது நூருயிரம் டன் கரியின் விலை மிக உயர்வு. நெய்வேலியில் வெட்டி எடுக்கப்படும் கரியின் விலை மிகுதியாகக் குறையும். பழுப்பு நிலக்கரியில் உள்ள புகை நீராவி பிறவற்றை நீக்கிக் காற்றுப் புகாத இடத்தில் அதைச் சூடாக்குவதால் **கோக்** (Coke) எனும் சுட்ட கரியாக மாறும். இதை வீடுகளில் எரிபொருளாகக் கொள்ளலாம். கரியைத் தூளாக்கி, சிறுசிறு கட்டிகளாகப் பிரிக்குடெஸ் (Briquettes) அமைப்பின் இரும்பை உருக்கவும் வெண் களியிலிருந்து அலுமினியமென்ற உலோகம் பிரிக்கவும் நெசவாலைகளின் இயந்திரங்களை இயக்கவும் பயன்படுத்தலாம். இயந்திரப் பகுதிகளியக்கத்தின் பொழுது உராய்வதால் தேய்வைக் குறைக்கும் பசையை இக்கரி தரும். சுண்ணும்புக் கல்லுடன் கரியைச் சேர்த்துக் கால்ஷியம் கார்பைட், கால்ஷியம் சைனமைட் (Calcium Carbide–Calcium Cynamide) என்ற பொருட்களமைக்கலாம். இவற்றை முறையே இரும்பை மெழுகென உருக்கும் ஏசிடைலன் (Acetylene) வாயு செய்யவும் பல செயற்கை உரங்கள் செய்யவும் பயன்படுத்தலாம்.

## துணைத்தொழில் நிலையங்கள்

கரியைத்தவிர, களியைக் கொண்டு மின்னேட்ட அதிர்ச்சி தாக்காத குழாய்களும், பலவகை ஏனங்களும் செய்யலாம். சேலம் மாவட்டத்தின் **சேர்வராயன் குன்றில்** கிடைக்கும் இரும்புத் தாதுவை (Magnaesite) நெய்வேலி கரிகொண்டு உருக்கலாம். **மேட்டூர்** அருகில் கிடைக்கும் ஒருவகை வெண்களியிலிருந்து (Bauxite)

அதன் அங்கமாகிய அலுமினியம் பிரித்து மின்னேட்டம் எடுத்துச் செல்லும் கம்பிகள் அமைக்கலாம். வான வூர்தியின் பகுதிகளேயும் அமைக்கலாம். இப்படிப் பல துணைத்தொழில்களை நிலக்கரி வெட்டி எடுத்தவுடன் செயலாற்றக் கூடும்.

## தேடிவந்த செல்வம்

ஆகவே பல நாட்களாகப் பல தொழில்களுக்கு இன்றியமையாத ஆற்றலளிக்கும் சிக்கனமான எரி பொருளை நாடித் தேடிவந்த தமிழ்நாட்டினருக்குத் 'தேடி வந்த செல்வமாக' இப்பழுப்பு நிலக்கரி கிடைத்துள்ளது. ஏறத்தாழ இருநூறு கோடி டன் நிறையுள்ள நிலக்கரி நெய்வேலியில் மறைந்துள்ளதாயும், ஆண்டு ஒன்றிற்கு முப்பத்தைந்து நூருயிரம் டன் வீதம் வெட்டி எடுக்க லாம் எனவும் கண்டுள்ளனர். இம்முறையில் நெய் வேலி செல்வத்தை 1961-இல் இருந்து தொடர்ந்து ஐநூற்று எழுபது ஆண்டுகள் எடுக்கலாமெனின் தமிழ் நாட்டு மக்கள் பெற்றபேறு பெரும்பேறு என்பதில் என்ன ஐயம்?

### அருஞ்சொற்பொருள்

வள்ளலார் – இராமலிங்க அடிகள். கனி – சுரங்கம். பணி - வேலை. ஆய்வு - ஆராய்ச்சி. மணித்துளி – நிமிடம். பூ - நிலம். கருவூலம் - புதை பொருள். பெரும்பேறு - பெருஞ் செல்வம்.

### வினக்கள்

1. நெய்வேலி எங்கு உள்ளது?
2. கோஷின் ஆராய்ச்சியை எழுதுக.
3. நெய்வேலியின் பெருமை என்ன?

4. நிலக்கரி உண்டாவது எப்படி?

5. பழுப்பு நிலக்கரியால் நாம் அடையும் பயன்கள் யாவை?

6. நிலக்கரியால் இயங்கும் துணைத்தொழில் நிலையங்கள் யாவை?

பயிற்சி

1. சிறுகுறிப்பு தருக: சத்திய ஞானசபை, 'ஜாம்ஷெட்பூர்', 'சித்தரஞ்சன்', கோஷ், சேர்வராயன்குன்று.

2. பிரித்துக் காட்டுக: இடமுண்டு, இருக்குமளவையும், நானூறு, வானளாவிய, இருமடங்கு.

3. சேர்த்து எழுதுக: அங்கு+அங்கு, நுண்மை+உயிர் வெண்மை+களி.

4. வாக்கியங்களில் பயன்படுத்துக: ஆங்காங்கு, இயற்கையினழிவு, ஏறத்தாழ.

5. எதிர்ச்சொல் கூறுக: பெரும்பான்மை, சிக்கனம், வெப்பம்.

# 12. வாழ்க்கையின் நிகழ்ச்சிக் குறிப்புகள்

[புலவர் தா. சிங்காரவேலு]

வாழ்க்கைக் குறிப்பு

நாட்குறிப்பு எழுதுதல் என்பது ஒரு நல்ல பழக்கம். அவ்வாறே வாழ்க்கைக் குறிப்பு எழுதுவதும் சிறந்ததாகும். மேலே நாட்டினரிடமிருந்து நாம் கற்றுக் கொண்ட பலவற்றுள் வாழ்க்கைக் குறிப்பு எழுதுவதும் ஒன்ருகும். இந்தப் பழக்கம் நம்மவரிடையே இல்லாத காரணத்திஞல், நாம் நம் முன்னேர்களான பேரரசர்கள், குறுநில மன்னர்கள், வள்ளல்கள் ஆகியோருடன் தொல்காப்பியர், திருவள்ளுவர் போன்ற எண்ணிறந்த பெரும்புலவர்களேப் பற்றிய உண்மையான வாழ்க்கை வரலாற்றையும் உணர்ந்து கொள்ள முடியவில்லே. ஒருவேளே தம்மைப் பற்றித் தாமே எழுதி வெளியிடுதல் **''தான் தற்புகழ்தல் தகுதியன்று''** என்று கருதி விடுத்தனரோ எனவும் எண்ணவேண்டியுள்ளது. எப்படியாஞலும் அது நமக்கொரு இழப்பேயாகும்.

தற்காலத்தில் **காந்தியடிகள், வ. உ. சிதம்பரஞர், திரு. வி. க.** போன்றவர்கள் தம் வாழ்க்கைக் குறிப்பைத் தாமே எழுதிவைத்தமையால் அவர்களேப் பற்றிய உண்மையான வரலாற்றை நாம் அறிந்துகொள்ள முடிகின்றது. அவர்கள் அடைந்த துன்பங்களிலிருந்து நாம் தப்பிக்கவும், அவர்கள் பெற்ற இன்பத்தை எளிதில் பெறவும், வாழ்க்கைக் குறிப்புகள் பேருதவியாக உள்ளன. எடுத்துக்காட்டாக இந்த நூற்ருண்டில்

வாழ்ந்த தமிழ்ப்பெருமக்களில் சிறந்தவரான திரு. வி. க. அவர்கள் எழுதியுள்ள வாழ்க்கைக் குறிப்பிலிருந்து சில காண்போம்.

## தோற்றம்

திருவாரூர் விருத்தாசல முதலியாரின் மகன் கலியாணசுந்தரன் என்பதன் சுருக்கமே **திரு. வி. க.** என்பதாகும். திரு. வி. க. அவர்களின் தந்தையார் விருத்தாசல முதலியார். தாயார் சின்னம்மாள். இவர்களின் ஆருவது பிள்ளையாகப் பிறந்தவரே நம் தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்கள் ஆவார்.

செங்கற்பட்டு மாவட்டம் சைதாப்பேட்டைத் தாலுக்காவைச் சேர்ந்த துள்ளம் என்னும் சிற்றூரே திரு. வி. க. அவர்களின் பிறப்பிடமாகும்.

## கல்விநலனும் கற்ருேர் நட்பும்

இளமையில், சென்னை இராயப்பேட்டையில் உள்ள வெஸ்லியன் மிஷன் கல்லூரியில் சேர்ந்து ஒன்பதாம் வகுப்புவரையில் முதன்மையாகக் கற்றுத் தேர்ந்தார். பத்தாம் வகுப்பு வந்ததும் அவர் படிப்புக்குப் பல இடையூறுகள் ஏற்பட்டன. பள்ளியில் முறையாகப் படித்து வந்த படிப்பும் நின்றது. அதற்குக் காரணம் திரு. வி. க. அவர்களா ? அக்கால அரசியல் சூழ்நிலையா ? என்பதை நாமே சிந்திக்க வேண்டும்.

திரு. வி. க. அவர்களின் பள்ளிப்படிப்பு நின்றதும் தாய்மொழியைக் கற்றலில் பேருக்கங் கொண்டார். பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு, ஐம்பெருங் காப்பியம், ஐஞ்சிறு காப்பியம், இராமாயணம்,

பாரதம், நைடதம், நளவெண்பா, கல்லாடம் முதலிய தமிழ் நூல்களைக் கற்ருர்.

தேவாரம், திருவாசகம், நாலாயிரத் திவ்ய பிரபந்தம், திருவிருத்தம் முதலிய சைவ வைணவ நூல்களையும் கற்ருர். யாழ்ப்பாணம் நா. கதிரைவேல் பிள்ளை என்னும் பெரும் புலவரும், மகா வித்துவான் தணிகாசல முதலியாரும் திரு. வி. க. அவர்களின் தமிழ் ஆசிரியர் களாவார்கள்.

கிறித்துவ மதக்கொள்கைகளைத் திரு. ஜான் இரத்தினம் பிள்ளை என்பவரிடமும், டார்வின் கொள்கை, புத்தமதக் கொள்கை, பொதுவுடைமைக் கொள்கை ஆகியவற்றை அறிஞர் திரு. சிங்காரவேலு செட்டியார் பி.ஏ. என்பவரிடமும் கற்றுத் தேர்ந்தார்.

திரு. மணி திருநாவுக்கரசு முதலியார், திரு. சச்சிதானந்தம் பிள்ளை, பேராசிரியர் மயிலை சிவமுத்து, மறைமலை யடிகளார், திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள், என்பவர்களைப் போன்ற நல்லறிஞர்களின் தொடர்பு நம் தமிழ்ப் பெரியாருக்கு ஏற்பட்டது.

“ நிலத்தியல்பால் நீர்திரிந் தற்ருகும் மாந்தர்க்(கு)
இனித்தியல்ப தாகும் அறிவு.”

என்னும் குறள் மொழிக்கேற்ப திரு. வி. க. அவர்களும் பேரறிஞராகவும் சிறந்த பேச்சாளராகவும் வளர்ந்தார்.

## தொழில் வளம்

திரு. வி. க. அவர்கள் ஆயிரம்விளக்கு, தொடக்க நிலைப்பள்ளி ஆசிரியராகவும், கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராகவும் முதலில் பணியாற்றினுர்.

'தேச பக்தன்', 'திராவிடன்', 'நவசக்தி' முதலிய பத்திரிகை ஆசிரியராக இருந்து நல்ல தமிழ் நடையில் கட்டுரைகள் பல எழுதினர்.

மனித வாழ்க்கையும் காந்தியடிகளும், பெண்ணின் பெருமை, இந்தியாவும் விடுதலையும், தமிழ்த் தென்றல், வாழ்க்கை வழி, சீர் திருத்தம் அல்லது இளமை விருந்து, முருகன் அல்லது அழகு, இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம், என் கடன் பணி செய்து கிடப்பதே, பொதுமை வேட்டல், முதுமை உளறல், கிறிஸ்து மொழிக்குறள், கிறிஸ்துவின் அருள் வேட்டல் என்பனபோன்ற பல நூல்களை எழுதியுள்ளார். தமிழ் உரைநடையில் மறுமலர்ச்சியை உண்டுபண்ணிய பெருமை திரு. வி. க. அவர்களையே சேரும். சென்னை இராயப்பேட்டையில் சாது அச்சுக்கூடத்தை ஏற்படுத்தி அரும்பணியாற்றினர்.

தொண்டு உள்ளம்

சென்னை இராயப்பேட்டையில் 'பால சுப்பிரமணிய பக்த ஜன சபை'யை ஏற்படுத்தினர். திருவல்லிக்கேணியில் சிவனடியார் திருக்கூட்டத்தைக் கூட்டினர். பெரிய புராண உரையை வெளியிட்டார். திருக்குறளுக்கு விளக்கவுரை எழுதினர். 1918-இல் சென்னைத் தொழிலாளர் சங்கத்தைத் தோற்றுவித்தார். தமிழ்த் திருமணங்கள் பல நடத்துவித்தார். காந்தியடிகளின் அறப்புரட்சியை ஏற்று நாட்டு விடுதலையில் வேட்கை கொண்டார். திரு. வரதராசலு, பெரியார் ஈ. வே. இராமசாமி ஆகியவர்களுடன் சேர்ந்து தமிழகத்தின் முப்பெருந் தலைவர்கள் என்று போற்றப்படும் வகையில் அரசியல் பணியாற்றினர்.

" தொழிலாளர் அன்னை ; பெண்கள்
 உயர்விற்கே உழைக்கும் தோழி ;
செழுந்தமிழ்ப் பெரியார் ; தென்றல் ;
 தீஞ்சுவைப் பேச்சின் தந்தை ;
விழிநிகர் தமிழகத்தின்
 விடுதலை விழைந்த வீரர் ;
மொழியொப்பச் செயலைச் செய்த
 திரு. வி. க. முதியோன் வாழ்க !"

என்று கவிஞர்கள் போற்ற, வாழ்க்கைக்கோர் எடுத்துக் காட்டாக விளங்கினர். தமிழின் வாழ்வை விரும்பிய அவர் "தமிழாசிரியர் கழகம்", "சென்னை மாணவர் மன்றம்" ஆகியவற்றின் வளர்ச்சியில் பேரூக்கமளித்துப் பெருமகிழ்ச்சி கொண்டார்.

படிப்பினை

இளைஞர்கள் கல்வி கற்குங்காலத்தில் வேறு வேலைகளில் ஈடுபடலாகாது. அப்படி ஈடுபட்டால் அது அவர்கள் முன்னேற்றத்திற்குப் பெருந்தடையாகும் என்பதை மனத்திற் பதிய வைத்துக்கொள்ள வேண்டும்.

திரு. வி. க. அவர்கள், கருத்து வேற்றுமைக்கு இடமளிப்பவர். ஆனால் தன்னுடைய உள்ளத்தைக் கொள்ளை கொடுத்துவிடமாட்டார். பெண்ணின் பெருமையை எடுத்துக்காட்டித் தாய்மைப் பண்பைப் போற்ற வேண்டும் என வற்புறுத்தியுள்ளார். உழைப்பாளிகளின் உழைப்பிலே அவர் கடவுளைக் கண்டார் ; போற்றினர். செந்தமிழைச் செம்மையாகக் கற்றுத் தேர்ந்தார். அவர் தமிழில் எளிய சுவையுள்ள புதிய உரைநடையை ஏற்படுத்திய தந்தையாவார். எதிர்ப்புக்கு அஞ்சார். யாவரிடத்தும் அன்புடையர் ; இன்

சொல்லர். "யாமார்க்கும் குடியல்லோம்" "என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற பொன்னுரையைப் பொன்னேபோல் போற்றி வாழ்ந்தார். 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற திருமூலர் திருமந்திரத்தை உறுதியாகக் கொண்டார்.

## குண நலன்கள்

சைவம், வைணவம், பௌத்தம், சமணம், கிறித்துவம், மகமதியம், சீக்கியம் என்னும் சமயங்கள் அனைத்தையும் கற்றுத் தேர்ந்தார். கடவுள் ஒன்றே என்று தெளிந்தார். சமரசமே சிறந்ததெனக் கொண்டார். தமர், பிறர் என்ற வேறுபாடு கொண்டிலர். தமிழ் வாழ்க! தமிழர் வாழ்க! உலக மொழிகள் வாழ்க! உலகம் வாழ்க! என்று வாழ்த்தும் விரிந்த உள்ளம் படைத்தவர். பொதுவுடைமைக் கொள்கை ஒன்றே நாட்டில் அமைதியை உண்டாக்கக் கூடியது. உண்மையான பொதுவுடைமையை ஏற்கும் தகுதியுடைய நாடு தமிழகம் ஒன்றேயாகும். ஏனைய நாடுகளுக்கும்—ஏன்? உலகத்திற்கே வழிகாட்டியாக விளங்கக் கூடியது தமிழகமே எனத் துணிந்து கூறினர். காரணம்—அதற்கு வேண்டிய உளப்பண்பும், அப்பண்பாட்டை வளர்ப்பதற்குரிய தொல்காப்பியம், திருக்குறள் போன்ற நூல்களும், வேறெங்கும் இல்லை என மொழிந்தார். தமிழகத்தில் தமிழர்கள் பிளவும் பிணக்கும் இன்றி ஒற்றுமையோடு வாழவேண்டுமென எண்ணினர்; பேசினர்; எழுதினர்; நடந்தும் காட்டினர். எவரையும் இழித்துப் பேசமாட்டார். நல்லவை அன்றி அல்லவை நினையார்; சொல்லார்; செய்யார். கருத்து வேற்றுமையின் காரணமாகப் பகையைக் கொள்ளார்; மாருக நட்பே கொள்வார். தொழிலாளர்களின் குறைகளைக் களைந்து உழைப்பைப்

பொதுவாக்கி உணவையும் பொதுவாக்க வேண்டும் என்று எண்ணினர். இல்லார் இருப்பவர் இல்லாத தமிழ்நாட்டைக் காண விழைந்தார். தமிழ் ஆட்சிமொழியாக அரசியலில் ஆணைசெலுத்த வேண்டுமென அல்லும் பகலும் அரும்பாடுபட்டார். பெண்கள் தம் உரிமைபெறவும் நலமாக வாழவும் வழிகாட்டினர்.

வெண்மையான தூய எளிய உடையையே விரும்பி அணிந்தார். நல்ல செயல்கள் எங்கெங்குக் காணினும் அங்கங்குத் தோன்றுவார்; அரும்பணி யாற்றுவார். திருநீறு பொலியும் பரந்த நெற்றியும், கூர்த்த நோக்கும், குனித்த புருவமும், அடிக்கடி கொட்டும் இமையும், மெலிந்த உடலும், மெலியா உள்ளமும் கொண்ட திரு. வி. க. அவர்கள் எத்தகையவரையும் தம்வழிப் படுத்தும் ஆற்றல் பெற்று விளங்கினர்.

அன்பு, அறிவு, ஆற்றல், ஒப்புரவு, கண்ணோட்டம், சான்ருண்மை போன்ற பண்புகள் பலவும் பெற்றுத் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளராக வளர்ந்த திரு. வி. க. அவர்களின் வாழ்க்கைக் குறிப்பு நம் வாழ்க்கைக்கு நல்ல வழிகாட்டியே யாகும். அவர் வாழ்க்கையைக் கற்கும் நாமும் நல்லவை செய்து, அல்லவை அகற்றித் தமிழ் மொழியைப் போற்றி வாழ்வோமாக!

"ஏசு மொழியும் இனியதிரு வாசகமும்
பேசும் அருட் பாவுமென் நெஞ்சு."

அருஞ்சொற்பொருள்

தான் தற்புகழ்தல்-ஒருவன் தன்னைத் தானே புகழ்ந்து கொள்ளுதல்.

பத்துப் பாட்டு: பத்து நூல்கள் (திருமுருகாற்றுப் படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப் பாட்டு, மதுரைக்

காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப் பாலை, மலைபடுகடாம்.)

எட்டுத் தொகை: எட்டு நூல்கள். (நற்றிணை, குறுந் தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு.)

பதினென் கீழ்க்கணக்கு: பதினெட்டு நூல்கள். (நாலடியார், நான்மணிக்கடிகை, கார் நாற்பது, களவழிநாற்பது, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, முப்பால் (திருக்குறள்), திரிகடுகம், ஆசாரக் கோவை, பழமொழி, சிறுபஞ்சமூலம், இன்னிலை (அல்லது) கைந்நிலை, முதுமொழிக் காஞ்சி, ஏலாதி.)

## வினாக்கள்

1. வாழ்க்கைக் குறிப்பு எழுதுவதன் பயன் என்ன?
2. திரு. வி. க. என்பதன் முழுப்பொருள் யாது?
3. திரு. வி. க. எத்தகைய கல்வியை எவ்வாறு கற்றார்?
4. திரு. வி. கவின் தொண்டு உள்ளத்தை விளக்குக.
5. தமிழ்ப் பெரியாரின் வாழ்க்கைக் குறிப்பிலிருந்து நாம் கொள்ள வேண்டியன யாவை?
6. திரு. வி. க. அவர்களின் குண நலன்களைக் கூறுக.

## பயிற்சி

1. வாக்கியங்களில் பயன்படுத்துக: இடையூறுகள், மறுமலர்ச்சி, வழிகாட்டியாக, அல்லும் பகலும்.

2. சேர்த்துக் கூறுக: பெரிய+அரசர்கள், பத்து+எட்டு+கீழ்+கணக்கு.

3. பிரித்து எழுதுக: நாட்குறிப்பு, பேருக்கம்.

4. எதிர்ச்சொல் தருக: விரிந்த உள்ளம், பொதுவுடைமை, நல்லவை, பகை, குறை, இல்லார்.

# 13. பேச்சுப் போட்டி

## [தில்லை இளங்கோ மன்றம் தமிழ்ப் பேரவை]

(புலவர் த. முருகேசன்)

### வரவேற்புரை

"பேரன்பு கொண்டவரே! பெரியோரே! நல்லிளஞ் சிங்கங்காள்! உங்களனைவர்க்கும் என் அன்பு கலந்த வணக்கம். இன்றைய சொற்போர்க் கூட்டத்திற்கு நடு நிலையாளராக நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் அவர்கள் அமைந்தது நம் பேறேயாகும். அவர்களின் அஞ்சாநெஞ்சும், அறிவுத் திறனும் நா நலனும் நாடு அறியும். இன்றைய சொற்போர் மாதிரிச் சொற்போராக இருப்பதால், தலைவர் அவர்கள் சொற்போரின் இலக்கணத்தையும்; பேச்சாளர் பேசவேண்டிய முறையையும் கூறி நடுநிலையாளராக இருந்து நல்ல முடிவு காண வேண்டுமென வேண்டி உங்கள் சார்பாகவும், தில்லை இளங்கோ மன்றத்தினர் சார்பாகவும் செயலாளன் என்ற முறையில் வருக! வருக!! என வரவேற்கின்றேன். உங்களனைவரையும் உளமார வரவேற்றுத் தலைவர் அவர்கட்கு இக்கைத்தறி ஆடையை மலர்மாலையாகச் சூட்டுகின்றேன். வணக்கம்"—என்று கூறி முருகன் அமர்ந்தார். (பாரதியார் அவர்கள் எழுந்ததும் அவையினர் கைதட்டி மகிழ்ச்சியை அறிவித்தார்கள்.)

### தலைவர் முன்னுரை

பாரதியார் அவர்கள்:

"பெரியோர்களே! அன்புசால் மாணவர்களே! சொற்போர் வீரர்களே! வணக்கம். சொற்போர்க் கூட்டம்

ஆதலின் தலைமை உரை ஒன்றுமில்லை. தலைமை உரையில் பேச நேர்ந்தால் ஒரு சார்பானவரைத் தழுவியும், மற்றவரைத் தள்ளியும் பேச நேரிடும். ஆதலின் என் உரையை முடிவுரையில் பேசுவேன். முடிவை எடுத்து மொழிபவர் முதலில் பத்து மணித் துளியும், தடுத்து மொழிபவர் பத்துமணித் துளியும் இரு புறங்களிலும் வழி மொழிபவர்கள் ஐந்து ஐந்து மணித் துளியும் பேசுதல் வேண்டும். ஒட்டியும் வெட்டியும் பேசுவோர்க்கு மூன்று மணித் துளிகள் பேச வாய்ப்பளிக்கலாம். அது காலத்தையும் தலைவரின் விருப்பத்தையும் பொருத்தது.

கருத்தை மறுத்துப் பேசவேண்டுமே ஒழிய ஆளைத் தாக்கிப் பேசுதல் நாகரிகமன்று. ஐயமேற்படின் கேள்வி நேரத்தில் ஐயத்தைப் போக்கிக் கொள்ளலாம். இதுவே சொற்போர் முறை. இன்றைய சொற்போட்டிக்கு எடுத்துக்கொண்ட தலைப்பை யாவரும் அறிவீர்கள், " **பெண்கட்குச் சமஉரிமை தேவை**" என்ற தலைப்பு, காலத்திற்கு ஏற்ற தலைப்புதானா? என்ற ஐயம், சொற்போர் வீரர்களின் கருத்துமிக்க பேச்சினால் நீங்கும் என நம்புகின்றேன். இப்போது மணி நான்காகிறது. பேசுக" என்று கூறி அமர்ந்தார். (கைதட்டல்)

முன் எடுத்து மொழிதல்

**வேலன்:** தலைவர் அவர்களே! **பெண்கட்குச் சமவுரிமை தேவை என்று ஐம்பத்தொன்பதிலும் பேசவேண்டுமோ? இதனைக் கேட்டால்—செய்தித்தாளில் கண்டால் பிறநாட்டார் எள்ளி நகையாடாரோ? உரிமைக் காலம் மறுமலர்ச்சிக் காலம் என்றெல்லாம் வாய்கிழியப் பேசுகின்**

றனர். ஆனால் பெண்ணுக்குச் சம உரிமை தர மறுக்கின்றனர். நம் நாட்டில் எதற்கும் எதிர்ப்புதான்.

நாட்டிற்காக அல்லும் பகலும் அயராது உழைக்கும் தன்னலமற்ற அரும்பெருந்தலைவர்கட்கும் எதிர்ப்புதான். தமிழ் மரபே அழிந்துவிட்டது என்றுகூடச் சொல்லலாம் என்று கூறியதும் கூட்டத்திலிருந்து ஒருவர் "தலைவர் அவர்களே! இது அரசியல் மேடையன்று" என்றார். இது தமிழ்ப் பேரவை என்பதனை அறிவேன்; விளக்கத்திற்காகச் சில கூறினேன். மன்னிக்கவும், பெண்களின்றேல் (சக்தி இன்றேல்) உலகமேது? ஆக்கவும் அழிக்கவும் ஆற்றல் படைத்த பெண்களை அவமதிப்பது அறியாமை. தொட்டிலை ஆட்டும் கை, தொல்லுலகை ஆளுங் கை என்றார் பாரதியார். பெண்ணிடமிருந்து தோன்றி, பெண்ணால் வளர்க்கப்பட்டுப் பெண்ணை மணந்து மகப்பேற்றால் உலகை வாழ்விக்கும் பெருந்தகைமையை அப்பக்கத்தில் பேசுவோர் சிந்திப்பார்களாக. கடவுளர் கூட, மார்பிலும் நாவிலும், உடம்பில் பாதியும் மகளிர்க்குத் தந்ததாகக் கூறுவர். காலங் கடந்ததால் மேலும் என் கருத்தை முடிவுரையில் கூறுவேன்" என்று கூறி அமர்ந்தார். (கைதட்டல்)

**தலைவர்:** வழிமொழிகின்றவரை வழி மொழியச் செய்து, முடிவை எதிர்ப்போரை அழைத்து "நான்குமணி பன்னிரு மணித்துளி ஆகிறது; பேசுக" என்றார்.

முன் தடுத்து மொழிதல்

**முருகன்:** "தலைவர் அவர்களே! சொற்போரின் இலக்கணத்தை அப்பக்கத்தில் பேசியவர் உணராமைக்கு

வருந்துகின்றேன். பேசுமிடம், தலைப்பு இவற்றை ஒட்டி அவையறிந்து ஆராய்ந்து சொல்வதே முறை '' என்றார்.

வேலன் : ''தலைவர் அவர்களே ! தலைப்பைப் பற்றிப் பேசட்டும்; அறிவுரை கூறவேண்டாம்''—என்றார்.

முருகன் : ''தலைவர் அவர்களே! அருமை நண்பரின் சினங்கண்டு நாணமடைகின்றேன். அமெரிக்கன் அணுக் குண்டைக் கண்டான். உருசிய நாட்டினன் செயற்கைக் கோள் (ஸ்புட்னிக்) கண்டான், ஆனால் என் நண்பரோ பெண்ணிடமிருந்து பிறந்து, வளர்ந்து, மணந்து, இனத்தைப் பெருக்கும் புதுமையைக் கண்டார். உலகில் பிற உயிரினங்களில் காணமுடியாத புதுமையன்றோ இது ! ஆடை மானத்தைக் காக்கிறது. உணவு பசியைப் போக்குகிறது. அதற்காகத் தலையிலா வைத்துக்கொள்ள முடியும். அன்றி இகழ்ந்து தள்ளத்தான் முடியுமோ ? உரிய இடத்தில்தான் அதற்கும் பெருமை நமக்கும் பயன். பெண்களால் நாமடையும் பயனை மறக்க முடியாது; மறப்பவன் மனிதனாகான்.

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமையான்''

என்ற வள்ளுவர் குறளின் பொருளைச் சிந்திக்க வேண்டுகின்றேன்'' என்றார்.

கண்ணாயிரம் : தலைவர் அவர்களே ''காலங் கடந்தும் பேசவிடுவது முறையா ?'' என்றார்.

தலைவர்: ''நான்கு மணி இருபத்து நான்கு மணித் துளி ஆகிறது. இடை இடையே வினா எழுப்பியதால்

பேச இசைந்தேன்'' என்று கூறி முருகனை மேலும் இரண்டு மணித் துளிகள் பேசப் பணித்தார்.

பின்னர், தலைப்பைப் பின்பற்றி வழிமொழிபவரையும் தடுத்து வழிமொழிபவரையும் பேசச் செய்தார். அதன் பிறகு முடிவை ஒட்டியும் வெட்டியும் மாணவர் சிலர் பேசினர். முடிவை எதிர்ப்பவர் முடிவுரை தருக என்றார்,

முருகன் : "தலைவர் அவர்களே! அன்பர்களே! முடிவை ஒட்டிப் பேசியவர்கள் அனைவரும் பெண்ணின் பெருமை பற்றிப் பேசினார்களேயன்றிச் சம உரிமை என்றாலென்ன ? அது ஏன் அளிக்கப்படவில்லை. அளிக்கப்படாமையாலுண்டாகும் கேடு என்ன ? என்பன பற்றி ஒருவர்கூடப் பேசவில்லை. நம் முன்னோர்கள் வாழ்க்கையை அகம் புறம் எனப் பிரித்தனர். அகத்தின் தலைவியாக இல்லாள் இருந்தாள். அதற்கு ஆண்பாற் சொல் இல்லான் என்பது. அதன் பொருளை யாவரும் அறிவீர்கள்.

தலைவன் – தலைவி; அரசன் – அரசி; நம்பி – நங்கை; தோழன் - தோழி என்பனவற்றிற்குப் பெண்பாற் சொல் இருப்பதைக் காணுங்கள். ஆனால் வள்ளல், வீரன், ஏந்தல், அண்ணல் ஆகிய இச்சொற்களுக்குப் பெண்பாற் சொற்கள் தமிழில் இல்லை. வள்ளி, வீரி, அண்ணி, ஏந்தி என்று சொல்லிப் பாருங்கள். (கைதட்டல் சிரிப்பு) ஏன் நகைக்கிறீர்கள் ? பெண்ணினத்தைப் பழிக்காதீர்கள். நண்பர் பொறுமையிழப்பார். வாழ்க்கையை இரு கூறாக்கிச் சம உரிமையாக அகவாழ்வை மகளிர்க்கும், புறவாழ்வை ஆடவர்க்கும் அளிக்கப்பட்டுள்ளது. இதனை

உணராமல் ஊர்க்காவலர், படைவீரர், படைத்தலைவர் போன்ற பதவிகட்கெல்லாம் பெண்களை அமைப்பது நண்பர் கூறியதுபோல் பெண்மையழிவதுடன் மரபும் அழிகிறது. காளை-பசு இரண்டின் மூலம் எவ்வாறு பயன் கொள்கிறோம் என்பதைக் காணுங்கள்.

உடற்கூற்றை உணராதவர்கள் இவ்வாறு மனம் போன வழியில் பேசுவர். சம உரிமை வழங்கியுள்ளோம்; ஆனால் நண்பர் கூறும் சம உரிமை வழங்குதல் என்பது ஒருநாளும் இயலாது. சிந்தித்து முடிவு காணுங்கள் என்று கூறி அமர்ந்தார். (நீண்ட கைதட்டல்)

தலைவர் : "வேலன் அவர்கள் முடிவுரை கூறுவார்" என்றார்.

**வேலன் :** "தலைவர் அவர்களே! எதிர்த்துப் பேசியவர் விரைந்து பேசினார்; ஒலியோடு பேசினார். ஆனால் சம உரிமை தந்துள்ளோம் என்கிறார். பிறகு அவரே சம உரிமை தர முடியாது என்கிறார். குழப்பமான கருத்தைக் கூறிச் சென்றார். முற்காலத்தில் அவையில் பேசுவது என்றால் நிறைந்த சான்றோரும் அஞ்சுவர். இதனையே வள்ளுவர்

> "பகையகத்துச் சாவார் எளியர்; அரியர்
> அவையகத்(து) அஞ்சா தவர்"

என்று கூறியுள்ளார். தற்காலத்தில் அனைவரும் அவையில் பேசுகின்றனர். இதனால் முற்காலத்தவரைவிட இவர்கள் சிறந்தவர்களென்று கருதிவிடாதீர்கள். அவையில் பேசினால் அவ்வாறே ஒழுகவேண்டுமே என்ற அச்சம் அவர்கட்கு இருந்தது. தற்காலத்தில் யாரும் எதை

யும் பேசலாம் என்று பேசுகின்றனர். பேசியவண்ணம் நடப்பவர்களின் எண்ணிக்கை குறைவு. சம உரிமை அளித்துள்ளோம் என்றூர் நண்பர். ஊதியத்தை மனைவி யிடம் தந்து, அவர்களைக் கலந்தே செயல்கள் புரிகின்ற வர் நாட்டில் எத்தனை பேர்.

சமையல் செய்பவளாகக் கருதியே பலரும் வாழ்க்கை நடத்தி வருகின்றனர். பழங்காலத் தமிழர்கள் அளித்த சம உரிமை போதும். கூடுதலாக வேண்டாம். நண்பர் அதனைத் தர மறுக்கமாட்டார். எனவே சம உரிமை தேவை என்ற முடிவுக்கே அவரும் வந்து விட்டதால் முடிவு வெற்றிபெற்றதென்றே கருதுகின்றேன்" என்று கூறி அமர்ந்தார். (கைதட்டல்)

தலைவர் முடிவுரை

**தலைவர் :** "பெரியோர்களே! மாணவர்களே! இரு வர் பேச்சையுங் கேட்ட நீங்கள் சிந்தித்து உங்கள் வாக்கை அளியுங்கள்" என்றூர். "**பெண்கட்குச் சம உரிமை தேவை**" என்ற முடிவு வெற்றிபெற்றது. தலை வர் முடிவுரைக்குப் பின் கேள்வி நேரத்தில் கேள்விகள் கேட்கப்பட்டன. அவற்றிற்குத் தலைவர் சரியான விடை யளித்தார். செயலாளர் நன்றி கூறியதும் கூட்டம் இனிது முடிந்தது.

அருஞ்சொற்பொருள்

நாவலர் – நாவில் வல்லவர்; பேச்சாளர். பேறு – நல்வாய்ப்பு. சால் – நிறைந்த. சார்பு – பக்கம். பெருந் தகைமை – பெருமையாகிய பண்பு.

## வினாக்கள்

1. சொற்போட்டி முறையினால் ஏற்படும் நன்மைகள் யாவை ?

2. "பெண்களுக்குச் சமவுரிமை தேவை" என்பதற்கு எடுத்துக்காட்டிய கருத்துக்களைத் தொகுத்து எழுதுக.

3. தலைப்பின் பொருளைத் தடுத்துப் பேசியவரின் கருத்துரைகளை வரைக.

## பயிற்சி

1. சொற்பொழிவு கூட்டத்திற்கும் சொற்போட்டிக் கூட்டத்திற்குமுள்ள வேறுபாடு என்ன ?

2. சொற்போட்டிக்கு ஏற்ற தலைப்புகள் இரண்டு எழுதுக.

# 14. எனது அயல்நாட்டுச் செலவு

[எஸ். எம். இலக்குமணச் செட்டியார் எம். ஏ.]



## நன்றி மறவாமை

இது தமிழர் மரபு; சிறந்த பண்பாடுமாகும். 'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு' என்றார் திருவள்ளுவரும். நான் வெளிநாடு சென்று கல்வி பயில உறுதுணையாக இருந்து உதவிய, அண்ணமலைப் பல்கலைக் கழக இணை வேந்தரும், தமிழுக்கும், தமிழிசைக்கும் தொண்டு செய்ப வருமான டாக்டர் ராசா சர். முத்தையாச் செட்டியார் அவர்கட்கும் அண்ணமலைப் பல்கலைக் கழகத்திற்கும் நான் என்றும் கடப்பாடுடையேன். அவர்களுடைய ஆதரவு இன்றி நான் இவ்வுயர்நிலை அடைந்திருக்க இயலாது. அவர்களின் நல்லாசி மொழிகளை என் நற்பய ஞக நான் எண்ணிச்சென்று பட்டம்பெற்றுத் திரும்பி னேன். 'ஆயிரம் நூற்களைப் பயில்வதைவிட ஆயிரம் மைல்கள் பிரயாணஞ் செய்தல் மேலானது' என்ற சீனப்பழமொழி ஒன்றுண்டு. ஒருவர் சொல்லுவதை ஏற்காவிடினும் நேரில் காண்பவைகளை நம்பித்தான் ஆக வேண்டும். பிரயாணம் பல உண்மைகளையும் பாடங்களை யும் எளிதில் அறிவுறுத்துகிறது.

## எப்பணியும் சிறந்ததே

ஐரோப்பிய நாடுகளில் பணியில் உயர்வு, தாழ்வு என் பதில்லை. இம்மனப்பான்மையில் குழந்தைகள் வளர்க்கப்

படுகின்றனர். அங்குப் பல பணியாளரில்லை. ஆதலால் வீட்டுவேலைகள் யாவற்றையும் குடும்பத்தில் உள்ளோரே செய்கின்றனர். இப்பழக்கத்தைப் பள்ளிகளில் பார்த்தேன். ஆசிரியரும் மாணவரும் எப்பணியாயிருப்பினும் அதைச் சரிவரச்செய்ய முன்வருகின்றனர். ஒருவரின் பெருமை, மதிப்பு அவர் செய்யும் பணியின் காரணமாகக் குறைந்து விடாது என்பது அவர்களின் கொள்கை. இது போற்றத் தகுந்தது. கல்லூரிகளிலும் பணியாட்கள் மிகக் குறைவு. அங்குள்ள ஆராய்ச்சி மாணவர்கள் தமக்குத் தேவைப்படும் பொருட்களைக் கல்லூரிப் பொருள் வைப்பிடத்திலிருந்து ஆய்வுச் சாலைக்குத் தாமே எடுத்து வருவர். பெரும்பொருட்களைக் கூடக் கைவண்டியில் வைத்துத் தள்ளிக் கொணருவர். ஆய்வுச்சாலையில் மேசைகளைத் துடைக்கின்றனர். தரையைத் துப்புரவு செய்கின்றனர்.

## மாணவருக்கு உதவி

அமெரிக்காவில் கல்லூரி மாணவர் இத்தகைய பணிகளை ஏற்று ஊதியம் பெறுகின்றனர். பெற்றோருக்கு ஒரு சுமையாக இல்லாமல் தாமே உழைத்துப் பொருள்பெற்றுக் கல்வி பயிலல் வேண்டுமெனக் கருதுகின்றனர். அதில் பெருமை கொள்ளுகின்றனர். அதற்கான முறைகளும் வாய்ப்புகளும் பல உள்ளன. பயிலும் பொழுதே வருவாய்க்கு வழிசெய்து கொள்ளலாம். உணவுச்சாலையில் உணவு படைப்பவர் மாணவர்களே. மேசை துடைப்பதும், தட்டுகளைக் கழுவுவதும் அவர்களே. கல்லூரி நூல் நிலையத்தில் மாணவர்கள் பலர் பணி செய்கின்றனர். நூல்கள் விற்கும் கடையிலும்

பொருள் வைப்பிடத்திலும் (Store) மாணவர்களே பணிசெய்ய ஏற்கப்படுகின்றனர்.

ஊதியம்பெறும் வாய்ப்புகள் பல

அமெரிக்காவில் பல விளையாட்டுகளை அவ்வப்போது பொருள் கொடுத்துத்தான் விளையாட வேண்டும். மேடைப் பந்து (Table Tennis) விளையாட மணிக்கு அரைரூபாய் கட்டணம். இதைப்பெற மாணவர்களே அமைக்கப்படுகின்றனர். ஒவ்வொரு கல்லூரியிலும் ஒரு அச்சகமுளது. அங்கும் பல மாணவர்கள் பணி இயற்று கின்றனர். நாட்செய்தித் தாள், திங்கள் செய்தித்தாள், இவற்றை மாணவர்களே வெளியிடுகின்றனர். புகைப் படம் எடுப்பவர், செய்தி திரட்டுபவர், ஆசிரியர், கண் காணிப்பாளர், ஒலிபரப்பு நிலையம் நடத்துபவர் அனை வரும் மாணவரே. இப்படிப் பொருள்பெறும் வாய்ப்புகள் பல உண்டு.

நண்பரின் முயற்சி

என்னுடன் ஆந்திர மாணவர் ஒருவர் படித்தார். அவர் இருந்த வீட்டில் ஒவ்வொரு அறையிலும் ஒரு வானொலிப் பெட்டி இருந்தது. ஆனால் அவர் இருந்த அறையில் இல்லை. இக்குறையைத் தன் பேராசிரியரிடம் தெரிவித்தார். உடனே விடுமுறை நாட்களில் 'நில மளக்கும்' (Survey) குழுவில் சேர்ந்து அவர் பணி யியற்றுமாறு பணிக்கப்பட்டார். மணி ஒன்றுக்குப் பத்து ரூபாய் அவருக்கு ஊதியம் கிடைத்தது. இரண்டு நாட் களில் பதினாறுமணி நேரம் செய்த பணியினால் கிடைத்த தொகையைக் கொண்டு அவர் தனக்கென ஒரு

வானொலிப் பெட்டி வாங்கிக் கொண்டார். இத்தகைய வாய்ப்புகள் பல அமெரிக்காவிலிருப்பதைப் புகழாம லிருக்க முடியவில்லை.

## செல்வநாட்டினரின் மனப்பான்மை

அந்நாட்டில் மணி ஒன்றிற்கு ஊதியம் குறைந்தது ஐந்து ரூபாயாவது தரவேண்டுமென்ற அரசியலார் சட்ட முண்டு. கல்லூரி மாணவர்க்கும், சிறப்பாகப் பொறி யியல் மாணவர்க்கும் அவர்கள் நுணுக்கப்பணி (Skilled Labour) செய்தால் மணி ஒன்றிற்குப் பத்து ரூபாய் ஊதியம் கிடைக்கும். திறமையுடைய ஒருவர் முன்னே றும் வாய்ப்புகள் பலவுண்டு. விலை உயர்ந்த கார்டிலக் காரில் (Cardillac car) ஒருவர் சென்றால் அவரைப் பார்த்துப் பிறர் அழுக்காறு கொள்வதில்லை. அவர் கீழிறங்கி தன்னைப்போல் நடக்கட்டுமே என எண்ணு வதற்கு மாறாகத் தானும் அத்தகைய காரை அடைவதற்கு உழைக்க வேண்டுமென்ற எண்ணம் தோன்றிப் பிறரும் அதற்குத் தேவையான முயற்சிகள் செய்வார். நம் முடைய வாழ்க்கைக்கும் அவர்களுடைய வாழ்க்கைக் கும் எவ்வளவு வேறுபாடு பாருங்கள். இதனாலன்றோ அமெரிக்கா இன்று ஒரு செல்வ நாடாகத் திகழுகிறது!

## உழைப்பாலுயர்வது

அமெரிக்க நாட்டினர் உழைப்பா லுயர்ந்தவரென் பதில் ஐயமில்லை. காட்டாக ஒரு இலாரி பலவகைப் பொருட்களை ஏற்றி வந்தது. அதை இயக்கியவரே அப்பொருட்கள் முழுமையும் இறக்கித் தந்தார். அங்குப் பேருந்துகளில் (Buses) கண்டக்டர்கள் கிடையாது. ஒரே

ஒருவர் தன்னிருப்பிடத்திலிருந்தே சீட்டு (Ticket) கொடுப்பதும், அவர்கள் ஏறுவதையும் இறங்குவதையும் கண்காணிப்பதும், காற்றினழுத்தத்தால் தாமே இயங்கும் கதவுகளைத் திறந்து மூடுவதுமான செயல்கள் அனைத்தையும் செய்து வருகிறார்கள். இவ்வமைப்பு எல்லாத் தொழில் துறைகளிலும் ஒவ்வொரு தொழிலாளியின் பணியினால் பெருக்கம் மிகுவதற்கு உதவி தருகிறது. பெருக்கம் மிகுவதால் நாடு செழித்து மக்களின் வாழ்க்கை நிலை உயரும்.

### கல்வித் திட்டம்

தொழில் வளப்பத்தை மிகுதியாக்கும் முறையில் அவர்களின் கல்வித்திட்டம் வகுக்கப்பட்டுளது. தொடக்கப் பள்ளிப் படிப்பும் உயர்நிலைப் பள்ளிப் படிப்பும் கட்டாயமாகவும் கட்டணமின்றியும் கிடைக்கிறது. எல்லோருக்கும் ஒரேவகையான கல்வி கற்பிக்கப்படுவதில்லை. குழந்தைகளின் வயது, விருப்பம், திறமை இவற்றிற்கேற்ற முறையில் கல்வித் திட்டத்தை அமைத்துள்ளனர். தொடக்கப் பள்ளியில் குழந்தையின் வளர்ச்சியைத் தெளிவாகக் கண்காணிக்கின்றனர். ஒவ்வொரு ஆண்டும் கற்பிக்கும் ஆசிரியர் குழந்தை இயல்புகளைப் பற்றிய தம் கருத்துக்களை எழுதி வைக்கின்றனர். அறிவுத்திறன் ஈவு ஆய்வுகளை (Intelligent Quotient Tests) நடத்துகின்றனர். குழந்தையின் பதினோருவது வயதில் ஒரு பொதுத் தேர்வு நடைபெறும். பல வகைகளில் ஒவ்வொரு குழந்தையின் மனநிலையை அளந்து அதற்கேற்ப உயர்நிலைப் பள்ளிகளுக்கு அனுப்புகின்றனர். இப்பள்ளிகளை இங்கிலாந்தில் மூன்று பெரும் பிரிவுகளாக்கியுள்ளனர்.

## கற்கும் முறை

கற்பனைத் திறனும், கூர்ந்த அறிவும், நூல் கற்கும் பற்றும் உள்ள குழந்தைகளை நூல் படிப்பை அடிப் படையாகக் கொண்ட சிற்றூர்ப் பள்ளிகட்கு (Grammar Schools) அனுப்புவார்கள். இவர்கள் பதினைந்து சத விகிதத்தினர் ஆவர். ஆங்கில மொழியுடன் வேறு இரு மொழிகளும் கற்கின்றனர்; இவர்களுக்கு நல்ல பொறுப் புணர்ச்சி ஏற்படும்படி செய்கின்றனர். தானாகத் தனி யாகப் படிக்கும் நேரம் கால அட்டவணையில் சேர்த்துள் ளனர். ஆறும் படிவத்தில் ஒவ்வொரு மாணவனும் ஒரு சொந்த அட்டவணையைப் பின்பற்றுகிறான். நூல் நிலையத்தை மிகுதியாகப் பயன்படுத்தித், தான் கற்றதை மற்ற மாணவர்களுடனும் ஆசிரியர்களுடனும் கலந்து உரையாடி தன் அறிவைப் பெருக்குகிறான். தருக்க முறையில் கல்வி கற்பது சிறந்த முறையென அங்கு அறிஞர்கள் கருதுகின்றனர். ஆசிரியரின் குறிப்புப் புத்தகத்திலிருந்து மாணவரின் குறிப்புப் புத்தகத்திற்குச் செல்லும் செய்திகள் கல்வியாகாது. மாணவர் தாமாகவே சிந்தித்துப் புதுப்புதுக் கருத்துக்களை வெளியிட்டு அறி வைப் பெருக்கும் வாய்ப்புகள் கல்வித் திட்டத்தில் இடம்பெற வேண்டியது இன்றியமையாதது.

## தொழிலூக்கம்

கைகளைப் பயன்படுத்தி, தொழில் கற்கும் அவா வுடைய மாணவர் நுண்கலைக் கல்விச்சாலைகளை (Technical Schools) அடைவர். இவர்கள் நூற்றுக்கு ஐவ ராவர். விஞ்ஞானத்திலும், கணிதத்திலும் இவர்கட்குப் பற்று இருத்தல் வேண்டும். இத்தகைய தொழிற்கல்வி

நிலையங்கட்கும், தொழிற்சாலேகட்கும் நெருங்கிய தொடர்புண்டு. தொழிற்சாலேகட்குத் தேவையான முறையில் மாணவரைப் பழக்குகின்றனர். ஒவ்வொரு பள்ளியும் அவ்வம் மாவட்டத்தில் உள்ள தொழிலுக்கு ஏற்ற பாடங்களேச் சிறந்த முறையிலும் பல கருவிகளே வாங்கிவைத்தும் கற்பிக்கின்றது. மாணவர் தொழிற்சாலேக்குச் சென்று பெரும் இயந்திரங்கள் இயங்குவதையும் நுணுகி ஆராய்ந்து பயனடைகின்றனர். கல்வி முடிந்ததும் அவர்கட்குப் பள்ளியே தகுந்த பணியைத் தேடித் தருகிறது. எப்படியெனில், பள்ளியில் பணிதேடித்தரும் ஒருவருளர். தொழிற்சாலேயில் பணியாட்கள் தேவைப்படின் அவருக்குத் தொழிற்சாலேத் தலேவர் கடிதமூலமாகத் தம் தேவையை அறிவிப்பார். இத்தகைய கடிதங்கள் பல பள்ளியின் விளம்பரப் பலகையிலிருந்ததைக் கண்டதுண்டு.

### திறனுக்கேற்றது

முன்கூறிய இருவகை மாணவர் தவிர, எஞ்சியோரைத் தற்கால உயர்நிலேப்பள்ளிகளில் (Modern Secondary Schools) சேர்க்கிருர்கள். இங்குத் தேர்வுகட்குஇன்றியமையாத தன்மை தரப்படுவதில்லே. தேர்வில் தோல்வியுறுவதால் உண்டாகும் ஏமாற்றமும் இம்மாணவருக்கில்லே. ஓராண்டு முடிந்ததும் மாணவர் அடுத்த மேல் வகுப்பில் நுழைந்து பயில்வர். அவரவரின் ஊக்கம் எதில் உளது எனக் கண்டறிந்து அவ்வியல்பைப் பெருக்கும் வாய்ப்புத் தருகிருர்கள். வாழ்க்கையில் பயன்படும் பல பயனுள்ள பாடங்களேக் கற்பிக்கின்றனர். பொதுவாக இப்பள்ளியிலிருந்து வெளியேறும்

மாணவர் தகுந்த குடிமக்களாக வாழ உதவும் முறை யில் பாடத்திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன. ஆக இக் காலக் கல்வி பிள்ளைகளின் வயது, திறமை, விருப்பம், (Age, Ability, Aptitude) இவற்றிற்கு ஏற்ற முறையில் அமைந்துள்ளது.

பொதுப் பண்பாடு

மாணவரும் தொழிலாளரும் தாம் செய்வனவற்றில் ஊக்கம் செலுத்துகின்றனர். அவர்கள் நாட்டுப் பழ மொழி "**வேலை செய்கையில் வேலைசெய்; விளையாடும் போது விளையாடு**" என்பது. அதனை முற்றிலும் கடைப் பிடிக்கின்றனர். எங்கும் எக்காலமும் இனிமையான கண்ணியமான, மரியாதையான மொழிகளையே பேசு கின்றனர். சிறப்பாகக் கடைகளின் விற்பனையாளர்கள், அலுவலகங்களில் பணியாற்றுபவர், கருவூல அலுவலர் கள் போற்றத் தகுந்த முறையில் பொதுமக்களிடம் நடந்துகொள்ளுகின்றனர். இப்பழக்கம் ஒரு நாளில் வரக் கூடியதன்று. ஆங்கிலேயக் குடும்பங்களில் குழந்தைப் பருவத்திலேயே இப்பழக்கத்தை மனதில் நன்கு பதியும் படி செய்துவிடுகின்றனர். குடும்பக் குழந்தைகளிடையே பொறுமை நிலவுகிறது. பிறரது தேவைகளை ஒட்டி நடக்கின்றார்கள். எந்தப் பயன்பெறினும் உடனே நன்றிகூறத் தயங்குவதில்லை.

சில நற்பழக்கங்கள்

இந்நாடுகளில் மக்களிடையே நாணயம், நம்பிக்கை மிகுதி. செய்தித் தாட்களைக் கண்காணிப்போன் இன்

றியே விற்றுவிடுகின்றனர். வாங்குவோர் தாளுக்குரிய காசைப்போட்ட பிறகே தமக்கு வேண்டியதை எடுத்துக் கொள்வர். வீட்டுப் படிக்கருகில் வைக்கப்படும் பால் போத்தல்களை (Milk-bottles) உரியவர் தவிர பிறர் எடுப்பதில்லை. கருவூலத்தில் (Bank) செக்கைக் (Cheque) கொடுத்ததும் உரிய பொருள் தருகின்றனர். கணக்கில் தொகை இன்றிச் செக்கு, கொடுக்கப்படமாட்டது என்ற நம்பிக்கை. இப்படிக்காலம் வீணுகாததனுல் பொருள் பெருக்கம் மிகுதியாகிறது.

நமது கடமை

நம்மிடையே பல நற்பண்புகள், பழக்கங்கள் உள. அத்துடன் மேல் நாட்டினரின் நற்பழக்கங்களையும் நாம் பின்பற்றுதல் மிகவும் நல்லது. பணியில் உயர்வு தாழ்வு என்ற கருத்து மறைந்து உங்கள் பணிகளை நீங்களே செய்யப் பழகுதல் வேண்டும். 'தன் கையே தனக்கு உதவி' என்ற முதியோர் மொழியை மறத்தல் கூடாது. நாணயம் இன்றியமையாதது. பழம்பெருமை மட்டும் பேசாமல் பொருள் பெருக்கம் உண்டாக்கி உழைப்பினுல் தமிழகத்தின் செல்வமும், புகழும் ஓங்கச் செய்தல் உமது கடமை.

அருஞ்சொற் பொருள்

நன்றி - பிறர்செய்த உதவி. உய்வு - பிழைக்கும் வழி கடப்பாடு - கடமை. ' பயில்வது - கற்பது. பணி - வேலை. ஊதியம் - வருவாய்.

வினுக்கள்

1. சீனப் பழமொழியாக ஆசிரியர் கூறுவது என்ன ?

2. பிரயாணம் அறிவுறுத்தும் உண்மைகள் யாவை ?

3. 'எப்பணியும் சிறந்தது' என்பதை ஐரோப்பியர் வாழ்க்கையில் எவ்வாறு அறிகிறோம் ?

4. செல்வ நாட்டினரின் மனப் பான்மையை விளக்குக.

5. தொழிற்கல்வி முறையை அமெரிக்கர் எவ்வாறு அடைகின்றனர் ?

பயிற்சி

பொருள் எழுதுக : நன்றி, பணி, ஊதியம்.

சேர்த்து எழுதுக : எ+நன்றி. தமிழ்+இசை.

பிரித்து எழுதுக : உய்வில்லை. ஒன்றுண்டு.

எதிர்ச் சொல் வரைக : உயர்வு. ஏற்றுமதி.

# 15. பறவைகள் எப்படிப் பறக்கின்றன?

[திரு. கே. எஸ். மகாதேவன்]

பறவைகள் பறப்பதை நாம் பார்க்காத நாள் இல்லை; இருந்தாலும் பறவைகள் எப்படிப் பறக்கின்றன என்ற கேள்விக்குப் பழங்காலத்து மக்களால் விடை சொல்ல முடியாத நிலை இருந்தது.

## மேலை நாட்டார் நம்பிக்கை!

காற்றைவிட இலேசான ஒரு பொருள்தான் காற்றில் உயர்ந்து பறக்க முடியும் என்று மேலை நாட்டார் நம்பினர். அந்த அடிப்படையிலேயே பறவைகள் பறப்பதற்கும் விடை காண முயன்றனர். பறவைகளின் எலும்புக் கூட்டில் அடைபட்டு இருக்கும் காற்று, உடல் வெப்பத்தால் சூடேறி எடை குறைவதாலேயே பறவைகள் இலேசாகிக் காற்றில் எழுந்து பறக்கின்றன என்று முடிவு செய்தனர்! இந்த முடிவு பொருத்த மற்றது என்பதைக் காண மிகத் தொலைவு செல்ல வேண்டியதில்லை. பறவையின் உடல் வெப்பத்தால் அதற்கு ஏற்படும் எடைக் குறைவு மிகவும் சிறிதாகத்தான் இருக்க முடியும். இந்த எடைக்குறைவால் பறவைகள் வானத்தில் எழுந்து பறக்கின்றன என்பதை இன்று யாரும் ஏற்றுக்கொள்ள முன்வரமாட்டார்கள்.

## பறப்பதில் உள்ள சிக்கல்

காற்றில் உயரத்திலே விடப்பட்ட ஒரு பொருள் நேரே நிலத்தில் விழுந்து விடாமல், சறுக்கியபடி பறந்து

வந்து இறங்குவதற்கு ஒருவகை அமைப்புத் தேவைப் படுகின்றது. ஆனால் நிலத்திலிருந்து காற்றிலே எழுந்து உயர்ந்து செல்லுவதற்கோ, முற்றிலும் மாறுபட்ட வேறு வகை அமைப்புத் தேவைப்படுகின்றது, வானத்தில் பறப் பதற்கு முதன் முதல் முயற்சி செய்த மக்களுக்கு இவ் வுண்மை நன்கு புலப்பட்டது. இந்த இருவேறுமாறுபட்ட அமைப்புக்களையும் ஒன்று சேர்த்துக் காணமுடியாத அவர்கள், காற்றைவிடக் கனமான கருவிகளைக் காண் பதை விடுத்து, பலூன் போன்ற இலேசான கருவிகளையே காண்பதில் காலத்தைச் செலவழித்துக் கொண்டிருந் தனர். ஆனால் இந்த இருவேறு அமைப்புக்களையும், எப் படியோ இயற்கை பறவைகளுக்கு அமைத்துத் தந்து இருக்கின்றது. காற்றைவிடக் கனமான அந்தப் பறவை கள் பூமியின் இழுப்பாற்றலையும் பொருட்படுத்தாமல் விண்ணிலே உயர்ந்தெழுகின்றன; நினைத்தபடி யெல் லாம் காற்றிலே வட்டமிட்டுச் சுழன்று திரிகின்றன. பின்னர்ச் சறுக்கியபடி கீழே தாழ்ந்து மீண்டும் தரையில் இறங்கி விடுகின்றன!

### எப்படி எழுகின்றன?

காற்றினும் கனமான எந்தப் பொருளும் காற்றிலே பறக்கவேண்டுமானால் குறிப்பிட்ட அளவு வேகத்தை ஏதாவது ஒரு வழியில் பெற்றால்தான் முடியும். இயற் கையின் இந்த உண்மையே, பட்டம் விடும் பையனை வெட்ட வெளியின் குறுக்கே விழுந்து ஓடும்படி செய் கின்றது! இன்று, ஓடி எழுந்து பறக்கும் வானவூர்திக்கும் இவ்வுண்மை பொருந்தும். இத்தகைய வேகத்தைப் பெறு வதற்குப் பறவைகளுக்கு அவைகளின் உறுதியான நீண்ட கால்கள் உதவி செய்கின்றன. பெரும்பாலான பறவைகள் தங்கள் உறுதியான கால்களின் உதவியால்

உந்தி, மேலே எழுந்து, சிறகடித்து உயர்ந்து செல்லு கின்றன. "இருந்தவன் எழுவதற்குள் நின்றவன் நெடுந் தொலைவு சென்று விடலாம்" என்ற பழமொழி பறவைகளைப் பொறுத்தவரையில் முற்றிலும் உண்மை யாகும். பறப்பதற்கு அவை செலவழிக்கும் ஆற்றலைவிடப் பல மடங்கு ஆற்றலை இப்படித் தரையிலிருந்து மேலே எழுந்து உயருவதற்கு அவை செலவழிக்கவேண்டியிருக் கின்றது. நாள் கணக்கில் எவ்வகைச் சோர்வுமில்லாமல் பறக்கும் இயல்பு படைத்த புரு போன்ற பறவைகள் கூடச் சில முறை மீண்டும் மீண்டும் தரையிலிருந்து மேலே எழுந்து பறக்கும்படி செய்தால் சோர்ந்து விழுந்து விடுவதைப் பார்க்கிறோம்!

பொதுவாகக் காற்றை உதைத்து மேலே எழுவ தற்கு அகன்ற பெரிய சிறகுகள் நன்கு பயன்படுகின்றன. அவற்றுடன் கால்கள் நீண்டு இருப்பதும் எழுந்து பறப் பதற்குப் பெருந்துணை செய்கின்றது. கொக்கு, நாரை, மடையான் போன்ற பெரும் பறவைகளின் கால்கள் நீண்டு இருப்பதால் நிலத்தில் நின்றபடியே அவற்றின் சிறகுகள் செயல்படத் தொடங்கி விடுகின்றன. இதனால் பறப்பது இவற்றிற்கு மிகவும் எளிதாகி விடுகின்றது. ஆனால், இத்தகைய நீண்ட கால்களைப் பெற்றிராத காக்கை, புரு, பருந்து முதலிய பறவைகள் கால்களால் உந்தி மேலே பாய்ந்து எழுந்த பின்னர்தான் சிறகடித்துக் கொள்ள முடியும். அவை போன்றே நீரின் மேற்பரப்பில் மேய்ந்து திரியும் இயல்புடைய காட்டு அன்னம், நீர் வாத்து (முக்காங் கோழி) முதலியவை, நீரின் மேல்மட் டத்திலிருந்து உந்தி எழுந்து, உயர்ந்து சிறகடித்துக் கொண்டு பறந்துவிடுகின்றன. இத்தகைய பறவைகளின் சிறகுகள் சிறிதாகவும் விறைப்பாகவும், கத்தி முனைபோல் இருப்பதால், அவை "ஹெலிக்காப்டர்" ஊர்திகள் விசிறி

போன்று 'விர்ர்' என்று விரைந்து செயல்பட்டுப் பறவை யினை மேலே உயர்த்திக் கொண்டுபோய் விடுகின்றன! ஆனால் எல்லா நீர்ப்பறவைகளாலும் இப்படிச் செய்ய முடிவதில்லை. இவற்றின் உடல் அமைப்பு நீருள் மூழ்கு வதற்குத் தகுந்த வகையில் சற்று மாறி அமைந்திருக் கிறது. கால்கள் மூழ்குவதற்கு உதவும் வகையில் உடலின் பின் பகுதியில் தள்ளிப் பொருத்தப்பட்டிருப்பதால், இவற்றால் தரையில்கூட நன்றாக நடக்க முடிவதில்லை. உடலின் கனம் முன்புறம் சென்று அழுத்துவதால் தள் ளாடி நடக்கின்றன. எழுந்து பறக்க முயலும்போது சிறகுகள் மிகுதியான கனத்தைச் சுமக்கவேண்டி யிருக் கின்றன. இக்காரணங்களால் இப்பறவைகள் நீரிலிருந்து விடுபட்டு நேரே காற்றில் எழ முடிவதில்லை. எனவே இப் பறவைகள் ஒரு நல்ல முறையைக் கையாளுகின்றன; சிறகுகளை மட்டும் நீருக்கு வெளியிலே எடுத்து அடித்துக் கொண்டு, கால்களையும் உடலின் பெரும்பகுதியையும் நீரிலேயே பட்டிருக்கும்படி இழுத்துக்கொண்டு விரைந்து ஓடுகின்றன. இதனால் சிறகுகள் தாங்கவேண்டிய கனத் தைத் தண்ணீர் தாங்கிக்கொள்கிறது. குறிப்பிட்ட அளவு வேகங் கிடைத்த பின்னர், நீரினின்றும் விடுபட்டுக் காற் றிலே உயர்ந்து பறக்கத் தொடங்கிவிடுகின்றன. காற் றிலே எழுந்த பிறகு அவற்றின் உறுதியான சிறகுகள் விரைந்து அடித்துக் கொள்வதால் எத்தகைய தடையு மின்றி எளிதில் பறந்து திரிகின்றன.

## சிறகுகளின் பலவேலைகள்

நீர்ப்பறவைகளைப் பொருத்தவரையில் அவற்றின் சிறகுகள் பல வேலைகளைச் செய்யவேண்டியிருக்கின்றன. அதற்கு, ஒன்றுக்கு ஒன்று முற்றிலும் மாறுபட்ட அமைப் புக்கள் தேவைப்படுகின்றன. இப்படி மாறுபட்ட தேவை

களையும் இயற்கை ஓரளவு நிறைவேற்றி வைத்திருப்பது உண்மையில் வியப்பாகவே இருக்கின்றது! நீருள் மூழ்கு வதற்கு உறுதியான சிறகுகள் வேண்டுவதில்லை. ஆனால் நீரின் மேல் மட்டத்தில் நீந்தும்போது சிறகுகள் துடுப்புப்போன்று நீரை உதைத்துத் தள்ளவேண்டியிருப்பதால் சிறகில் அழுத்தமும் உறுதியும் மிகுதியாகத் தேவைப்படுகின்றன. சில பறவைகளைப் பொருத்தவரையில் நீந்தும் வேலையினைத் தோலால் இணைக்கப்பட்ட அவற்றின் கால்கள் செய்துவிடுவதால், சிறகுகள் அவற்றிற்கு ஒரு சுமையாகவே இருந்து தடைசெய்கின்றன. என்வே, பறப்பதற்கு நன்கு உதவும் பெரிய அகன்ற சிறகுகள் நீந்துவதற்குத் தடையாக இருக்கின்றன. அதற்கு மாருகச் சிறகுகள் சிறியனவாகவும் கூர்மையாகவும் இருந்தால் நீந்துவதற்கு எளிதாக இருக்கும். ஆனால் இது மற்றொரு வாய்ப்பைக் குறைத்து விடுகின்றது. மூழ்குவதற்கு ஏற்ற வகையில், கால்கள் பின்னால் பொருத்தப் பட்டிருக்கும். பறவைகளை உயர்த்திக் காற்றிலே எழச் செய்வதற்கு இத்தகைய சிறிய சிறகுகள் பயன்படாமல் போய்விடுகின்றன. இந்த நிலையில்தான் பெரிய வாத்து, குள்ள வாத்து போன்ற பறவைகள் நீர் வாழ்விலேயே மன நிறைவு கொண்டு பறக்கும் தொழிலை அறவே மறந்துவிட்டன என்று அறிகின்றோம்.

## பெரும் பறவைகளும் சிறு பறவைகளும்

ஆல்பட்டராஸ் (Albutross) என்பது மேலை நாடுகளில் காணப்படும் மிகப்பெரிய நீர்ப் பறவை. சிறகு அசைவது கூடத் தோன்றாமல், நாட்கணக்கில் புயலையும் காற்றையும் பொருட்படுத்தாமல் பறக்கும் ஆற்றல் கொண்டது இப்பறவை. ஆனால் தேங்கிக்கிடக்கும் சிறிய நீர்ப்பரப்பிலே இது வந்துவிட்டால் அங்கிருந்து எழுந்து

பறக்க இதனுல் முடியாது. இது நீரிலிருந்து விடுபட்டுப் பறக்கவேண்டுமானுல் நீண்டதொலேவு நீந்தியபடி நீரின் மேல் பரப்பிலே ஓடவேண்டியிருக்கிறது! அதே போன்று காண்டர் (Condor) என்னும் கழுகு தென் அமெரிக்காவில் வாழும் பெரிய பறவையாகும். இது நெடுந்தொலேவு தரையில் கால்களால் நடந்து ஓடிய பின்னர்தான் விடு பட்டு விண்ணிலே எழும். இப்படி ஓடுவதற்குப் போது மான அளவு நிலம் இல்லேயென்ருல் இது என்றுமே தரையில் இருக்க வேண்டியதுதான் !

நான்கு புறமும் வேலி கட்டி நடுவில் இப்பறவையை விட்டு வைத்தால் தலேக்கு மேலே திறந்த வானம் இருந்தும் கூட இதனுல் தப்பிச் செல்ல முடியாது. இன்றும், இதனேப் பிடிக்க விரும்பும் செவ்விந்தியர்கள் (Red Indians) அதனுடைய இந்தக் குறைபாட்டினேப் பயன்படுத்திக்கொள்கின்ருர்கள். இடம் குறுகலாக உள்ள பகுதிகளில் இப்பறவையினே ஏமாற்றி இறங்கும்படிச் செய்து பின்னர் எளிதில் பிடித்து விடுகின்றனர். இப் படியே, நன்ருகப் பறக்கக்கூடிய, ஆனுல் கால்களே விட நீண்ட சிறகுகளேக் கொண்ட பறவைகள் நிலத்திலோ, அடர்ந்த புதர்களிலோ இறங்கி விட்டால், மீண்டும் எழுந்து பறப்பதற்கு விரைந்து வீசும் காற்றையே எதிர் பார்த்து அவை ஏங்கிக் கிடக்கும். காற்று இல்லாவிட் டாலோ, சிறகுகள் செயல்படாத நிலேயில் அகப்பட்டுக் கொண்ட அப்பறவைகள் எழுந்து பறக்க முடியாமல் இருந்த இடத்திலேயே இருந்து இறந்து மடிகின்றன.

ஆனுல் இத்தகைய பெருங் குறைபாடுகள் சிறிய உருவமும், சிறிய சிறகுகளும் படைத்துள்ள சிட்டுக் குருவிக்கோ, வானம்பாடிக்கோ இருக்கவில்லே. எவ்வளவு குறுகலான இடத்திலிருந்தாலும் 'விர்ர்...'என்று சிறகடித்

துக்கொண்டு விட்டெறிந்த கல்லே போல அவை மேலே எழும்பிப் பறக்கின்றன ! இவ்வகைச் சிறு பறவைகள் காரணமில்லாமல் தங்கள் ஆற்றலைச் செலவழிப்பதில்லை. உணர்ந்தோ உணராமலோ, பெரும்பாலும் அவை தந்திக் கம்பங்களிலும், வேலிக் குச்சிகளிலும், சிறு மரக் கிளைகளிலுமே இறங்கி அமர்ந்து கொள்கின்றன. இப்படி உயரமான இடங்களிலேயே அவை இறங்கி அமர்வதால் நினைத்ததும் நேராகப் பறக்கத் தொடங்கி விடுகின்றன ; இதனால் உந்தி எழுவதால் வீணாகும் ஆற்றல் அவற்றிற்கு மிச்சப்படுகின்றது.

எப்படிப் பறக்கின்றன ?

போதுமான அளவு உயரத்தை அடைந்த பின்னர், பறவைக்குப் பறப்பதிலே சிக்கல் ஒன்றும் இல்லை. காற்று விரைந்து வீசாத காலங்களில்தான் பறவைகள் பறக்கும் போது சிறகடித்துக் கொண்டிருக்கும். இப்படி அடித்துக் கொள்வதால், தாழ்ந்து விழுந்துவிடாமல், காற்றை உதைத்து உதைத்து மேலே செல்வதுடன், விரும்பிய திசையில் முன்னேறிச் செல்வதும் முடிகின்றது. காற்று நன்றாக வீசும்போது, பறவைகள் தங்கள் சிறகுகளைத் தகுந்த கோணங்களில் மாற்றி மாற்றி அமைத்துக் கொள்வதாலேயே அவற்றின் விருப்பப்படி உயரவோ, தாழவோ செய்கின்றன. பக்க வாட்டில் திரும்புவதற்குப் பறவையின் வால் பயன்படுகின்றது. படகின் பின்புறம் அமைந்துள்ள சுக்கான் (rudder) போலக் காற்றோட்டத்தை அது திரும்பித் தேக்குவதால் பறவை இடமாகவோ வலமாகவோ எளிதில் திரும்புகின்றது. திடீர் என்று விரைந்து திரும்ப வேண்டுமென்றால், ஒரு புறத்துச் சிறகை ஓயும்படி செய்து மறுபுறத்துச் சிறகை அதிகமாக அடித்துத் திரும்புகின்றது. இனி

மேல்நோக்கி, அல்லது கீழ்நோக்கித் திரும்ப வேண்டு மானல் தனது எடையைச் சற்றுப் பின்னலோ, முன்னலோ நகர்த்தித் திரும்புகின்றது. பறக்கும்போது காற்றுடன் உரசி வேகம் குறையாதவாறு பறவைகள் தங்கள் கால்களை உடலோடு ஒட்டியபடி சேர்த்து வைத்துக் கொள்கின்றன.

எப்படி இறங்குகின்றன ?

பறவைகள் பறப்பதற்கு, எழுவது ஒரு கலையாகத் தோன்றுவது போலவே, அவை மீண்டும் கீழே இறங்குவதும் ஒரு கலையாகத் தோன்றுகின்றது. பறவைகள் அவை சேரவேண்டிய இடத்தைப் பொருத்துத் தரையிலோ, மரத்திலோ, தண்ணீரிலோ சென்று இறங்குகின்றன. பொதுவாக இறங்க விரும்பும் பறவை சிறகுகளை ஏற்ற கோணத்தில் வைத்துக்கொண்டு படிப்படியாக உயரம் குறைந்து தாழ்ந்து வருகின்றது. வேகத்தைக் குறைப்பதற்காக அடிவயிற்று இறகுகளைச் சிலிப்பி வைத்துக்கொள்கின்றது. அவ்விறகுகள் காற்றில் நன்கு உரசுவதால் பறவையின் வேகம் படிப்படியாகக் குறைகின்றது. இதற்கு மேலும் எச்சரிக்கையாக இறங்க வேண்டுமென்றல், சிறகுகளை எதிர்ப்புறமாகப் ‘படபட’ என அடித்து வேகத்தை அறவே நிறுத்திவிட்டு இறங்குகின்றது. இப்படி வேகத்தைக் குறைப்பதில் பறவையின் வால் சிறந்த பங்கு எடுத்துக்கொள்கின்றது. அகல விரிந்து கீழே வளையும் அதன் வால் வேகத்தைக் குறைக்கும் சிறந்த தடையாக (brake) அமைகின்றது. இறங்கும் இடத்தைத் தெரிந்துகொண்டதும் பறவை உடலை மேலே உயர்த்திக் கால்களை முன்னே நீட்டி இறங்கி விடுகின்றது. நீர்ப் பறவைகள் நீரிலே இறங்கி மிதந்தபடி ஓடி நிற்கின்றன. சிட்டு, வானம்பாடி போன்ற சிறு பறவைகள் மெல்லிய பசுங் கொம்புகளையே இறங்கு

வதற்குத் தேர்ந்தெடுக்கின்றன. அவை வேகமாக வந்து அமர்ந்தாலும் அக்கிளைகள் வில்போல வளைந்து ஆடி அவற்றிற்குச் சிறிதும் அதிர்ச்சி இல்லாமல் செய்கின்றன! நாரை, கொக்கு போன்ற பெரும் பறவைகள் தங்கள் பெரிய சிறகுகளை அகல விரித்துப் பாரா சூட் (Parachute) பிடித்துக்கொண்டு இறங்குவதுபோல, மரக்கிளைகளிலும், நீர்நிலைகளின் கரைகளிலும் நீண்ட கால்களுக்குச் சிறிதும் துன்பமில்லாமல் இறங்குகின்றன.

செயற்கைப் பறவை !

இயற்கையில் காணும் பறவைகளின் பண்புகளைப் புரிந்துகொள்ள முடியாத நிலையில், மேலை நாட்டினர் அண்மைக் காலம் வரையில் காற்றைவிட இலேசான கருவிகளையே பறப்பதற்குப் பயன்படுத்த எண்ணிவந்தனர் என்ற உண்மையைக் கண்டோம். ஆனால் ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழ் நாட்டில் வாழ்ந்திருந்த திருத்தக்கதேவர், தாம் இயற்றிய சீவக சிந்தாமணியில் காற்றைவிடக் கனமானதொரு அமைப்பை (heavier–than air device) மக்கள் பயன் படுத்தலாம் என்பதைக் கற்பனையில் கண்டார்! மயில் போன்று அவரால் செயற்கையாக அமைக்கப்பட்ட அப்பொறி பறவையினைப் போன்றே கால்களையும் பெற்றிருக்கின்றது. அதிலுள்ள ஒரு திருகாணிப் பொறியை (Steering Mechanism) வலமாகத் திருப்பினால் மயில் ஊர்தி மண்ணிலிருந்து விடுபட்டு விண்ணில் எழும்! திருகாணியை இடமாகத் திருப்பினாலோ, காண்பவர்கள் வியக்கும்படி கால்களைக் கொண்டு நிலத்திலேவந்து இறங்கிவிடும்! இச்செய்திகளை

**"பண்தவழ் விரலில் பாவை பொறிவலம் திரிப்பப் பொங்கி
விண்தவழ் மேகம் போழ்ந்து விசும்பு இடைப் பறக்கும் வெய்ய
புண்தவழ் வேல்கண் பாவை பொறிஇடம் திரிப்பத் தோகை
கண்டவர் மருள வீழ்ந்து கால்குவித்து இருக்கும் அன்றே!"**

என்ற அடிகளில் தெளிவாகக் குறிப்பிடுகின்ருர். இத்தகைய அறிவியல் அடிப்படையில் செயற்கைப் பற வையினை அமைத்த சிந்தாமணி ஆசிரியர் இயற்கையில் பறவைகள் எழுந்து, பறந்து இறங்கும் நுட்பங்களை எத்துணை யளவிற்குக் காட்சித் திறனுடன் கண்டிருக்க வேண்டும் என்பதை எவராலும் உணராமல் இருக்க முடியாது. எனவே, பறவைகள் எப்படிப் பறக்கின்றன என்ற கேள்விக்குப் பழந்தமிழன் விடைகூறத் தெரிந்தே இருந்தான் என்பது இதனால் தெளிவாகத் தெரிகின்றதன்ரே ?

## அருஞ்சொற்பொருள்

விண் – வானம். புயல் – பெருங்காற்று. இயங்கும்படி - செல்லும்படி. உரசி - தேய்த்து. விசும்பிடை - வானத்தில். வெய்ய - கொடிய. பாவை – பெண். தோகை – மயில். மருள –.மயங்க.

## வினுக்கள்

1. பறப்பதில் உள்ள சிக்கல் என்ன ?

2. பறவைகள் எப்படி எழுகின்றன ?

3. சிறகுகளின் பல வேலைகள் யாவை ?

4. பெரும் பறவைகளும் சிறு பறவைகளும், பறப்பதில் அடையும் வேற்றுமை என்ன ?

5. பறவைகள் எப்படிப் பறக்கின்றன ? எப்படி இயங்குகின்றன ?

## பயிற்சி

1. சிறு குறிப்பு எழுதுக : ஆல்பட்டராஸ், திருத்தக்க தேவர்.

2. இப்பாடத்தில் கண்ட பழமொழியைப் போல இரண்டு பழமொழிகள் எழுதுக.

# 16. மானத்தின் வெற்றி

— நாடகம் —

[ புலவர் தா. சிங்காரவேலு ]

இடம் :—சோழன் அரண்மனை.

காலம் :—காலை.

உறுப்பினர் :—செங்கணன், பொய்கையார்.

[சோழ நாட்டு மன்னன் செங்கணன்; சேரநாட்டு மன்னன் கணைக்காலிரும்பொறை; இருவரும் பகைமை கொண்டனர். போர்புரிந்தனர். செங்கணன் படை வெற்றி பெற்றது. சேரன் சிறைப் பிடிக்கப்பட்டான். கணைக்கால் இரும்பொறையின் ஆசிரியராகவும் அவைக்களப் புலவராகவும் விளங்கியவர் பொய்கையார் என்ற புலவர் ஆவர். சேரன் சிறைப்பிடிக்கப்பட்ட செய்தியறிந்த புலவர் அவனை விடுவிக்க எண்ணினர். சோழனின் போர்க்களத்தைப் புகழ்ந்து நாற்பது வெண்பாக்கள் இயற்றினர். அந்நூலுக்குக் 'களவழி நாற்பது' என்பது பெயராகும். அந்நூலைக் கையிலெடுத்துக்கொண்டு சேரன் அவைக்குச் சென்றார். [செங்கணன் வரவேற்கின்றான்.]

**செங்கணன் :** எங்களை ஆளும் செந்தமிழ்ப் புலவரே! கருணையே வடிவானவரே ! அன்பு மழையைப் பொழியும் இன்ப மேகமே ! இன்ப உள்ளத்தினையுடைய எழில் தவமுனிவரே! கல்விக் கடலே! செல்வக் குருவே! மக்கள் மனம் என்னும் பெருமை பொருந்திய நாட்டில் செங்கோல் ஆட்சி புரியும் அரசரே ! சினம் தணிக. எம்மைக் காத்திடுக.

[புலவரை வலமாகச் சுற்றி வருகிறான்]

மண்ணுலகில் நிலைபெற்ற உயிர்களுக்குத் தாயாக வந்தவரே ; நீரே என் உயிருக்கும் நன்மை விளைப்பவர் என்பதை அறியாமல் இருந்து விட்டேன். சிறப்புப் பொருந்திய உம்முடைய இயல்பை அறிந்திருந்தும் உணராமல் போய்விட்டேன். குருமணியே ! குருவி னுடைய அருமை பெருமைகளை அறியாமல் நடந்து கொண்ட கொடியவனுகி விட்டேன். என்மீது கடைக் கண் செலுத்தித் திருவருள் புரிவீராக. உம்முடைய பெருமையை உணராமல் உம்மையே சோதனை செய்து விட்டேன். என்னுடைய அற்பத்தன்மையை நான் என் னென்று சொல்வேன். எல்லாப் பிழைகளையும் பொறுத் தருள்க. கருணை என்னும் மழையைப் பொழியாவிட் டால் மழைகாணுப் பயிரே போல் மடிந்தே போவேன்.

[என்று கூறிப் புலவரை வணங்குகிருன்]

பொய்கையார் : (செங்கணனைக் கையாலெடுத்து அரியணையில் அமர்த்தினர்) அச்சம்தவிர் ; அன்பு கொண்ட சோழனே ! நீ அறிவு ஒளி அடைந்தாய். வேந்தே ! நின் பிழை பொறுத்தேன். இன்பத்துடன் இருப்பாயாக. ஆட்சிக்கு வேண்டிய உலக அறிவு ஒன் றையே நன்றெனக் கற்றனை. அறிவுநூல் அனைத்தை யும் அறவே அகற்றி விட்டாய். இனி, உனக்கொரு குறையும் உண்டாகாது ; வாழ்க !

மன்னவனே ! உன்னை மேன்மைப்படுத்த எண்ணி னேன். சிறந்த நின் வெற்றிப் புகழைப், பாவிற் சிறந்த வெண்பாக்களினல் பாடியுள்ளேன். குற்றமற்ற கோவே ! அவற்றை ஏற்றுக்கொள்க.

**செங்கணன்:** எம்பெருமானே! எனக்குஞ் சிறப்போ? இன்றமிழ்ப் புலவரே ! மனமாரக் குற்றம் புரிந்த எனக் குமா சிறப்பு ? மேன்மை பொருந்திய உம் மொழியால்

என்னை வாழ்த்தினீர் என்றால் பாழ்பட்ட யான் பிழைத்த வன் ஆவேன். மேலும் உயர்ந்தவன் ஆவேன். அம்ம! மயங்கிய அற்ப அறிவு படைத்தவனான என்னையும் புக ழக்கூடிய அந்த நூல் எதுவோ?

பொய்கையார்: மன்னவனே! உன்னுடைய மொழி மிகவும் நன்று. நறுந்தமிழ் அண்ணலே, இனிய தமிழ்க் கவிஞர்களுக்கெல்லாம் இளைத்த காலத்தில் உதவக்கூடிய சேம நிதி போன்றவனே! உண்மைப் பொருளை உணர்ந்து, நீ மேம்பாடுற்று வாழ்வாயாக. தளர்ச்சியிலா மன்னவனே! திருக்கழுமலம் என்னும் இடத்தில் நீ புரிந்த போரின் வெற்றியை, உள்ளதை உள்ளவாறு அழகுபடுத்திக் 'களவழி நாற்பது' என்ற பெயருடன் பாடியுள்ளேன். ஏற்றிடுக!

செங்கணான்: (மன்னன் மகிழ்ந்து) பெரியோர் போற்றும் பெருநாவலனே! என்னுயிர்க்கு உறுதியென எழுந்தருளிய நல்லிசைப் புலவரே! தாங்கள் பாடிவந்த பாடல்களில் சில மொழிந்தருள்க.

பொய்கையார்: (உடன்பட்டு) அருந்தமிழ் அரசே! ஆசனத்து அமர்ந்து கேட்பாயாக.

[புலவர் பாடுகின்றார்]

களவழி நாற்பது

"கவளங்கொள் யானையின் கைதுணிக்கப் பட்டுப்
பவளஞ் சொரிதரு பைபோற்-றிவளொளிய
வொண்செங் குருதி யுமிழும் புனனாடன்
கொங்கரை யட்ட களத்து." 1

"இருசிறக ரீர்க்குப் பரப்பி யெருவை
குருதிப் பிணங்கவருந் தோற்ற மதிர்விலாச்
சீர்முழாப் பண்ணமைப்பான் போன்ற புனனாடன்
நேரரை யட்ட களத்து." 2

செங்கண்ணன் : (மகிழ்ந்து) இன்பத்தேன் ஒழுகும் நறுந்தமிழ்ப் பாடல்களைக் கேட்ட என் காது வேறொன் றைக் கேட்க மறுக்கிறது. விரும்பிய என் உள்ளமும் வேறொன்றையும் விரும்புவதில்லை. என் ஆணவத்தை அழித்து அடிமையாகக் கொண்டீர். புலவர் பெரும! 'களவழி நாற்பது' செவிக்கு நல்லுணவு; சுவைக்கு இருப்பிடம். அக்கனிதமிழ்நூல் என் மனவழியாக உள்ளே புகுந்து எப்பொழுதும் நீங்காமல் வாழும்.

[என்று கூறி எழுந்து வணங்குகிறான்]

பொய்கையார்: (செங்கணனைக் கையாலெடுத்து) உண்மை நூல் காண உளங்கொண்ட மன்னவ! இந் நூலின் உட்கருத்து இன்னதென உணர்ந்தனையோ?

செங்கண்ணன் : (சிறிது சிந்தித்து) உணர்ந்தேன்! குருவே! உணர்ந்தேன். போர்க்களத்தைப் புகழ்ந்த பொய்யாமொழியின் பொருளை நன்கு உணர்ந்தேன். அந்தோ கொடியேன்! அய்யோ! கொடியேன்! உள்ளத்தை அறுக்கும் கூரிய வாளே அஃது என்பதை யுணர்ந்தேன். என்னால் எத்தனை வீரர்கள் இன்னுயிர் இழந்தனர்! எத்தனை யானைகள் அழிந்தன. எத்தனைக் குதிரைகள் ? எத்தனைத் தேர்கள்? அழிவை நினைந்திலேன்; கருணை யைக் கருதிலேன். இழிந்த செயல்புரிந்த எனக்கும் உய்யும் வழியுண்டோ? உயிர்களைத் துன்பப்படுத்தாமல் தான் இன்புற்று வாழ்தலும்; துன்பம் அடையாமல் பிறரை இன்பம் அடையச் செய்தலும்—உலக வாழ்க்கை யின் உட்கருத்தாகும் என்பதனை இன்றே அறிந்தேன். அருள் அறம் நினைந்தேன். மயக்கம் தரும் தீவினையை மறந்தேன். தன்னலங் கருதாத் தமிழ்ப் புலவரே! பொய்ப் பொருள் அகற்றிய புண்ணியனே! மெய்ப் பொருள் காட்டிய மேலவனே! போற்றி! போற்றி! பிறர்

நலம் பேணும் பெரியவரே! வணக்கம். அறிஞரே! தாங்கள் எனக்கு இடும் கட்டளை எதுவோ?

**பொய்கையார் :** (மனமகிழ்ந்து) செம்மை வழி வந்த செங்கண்மாலே! உன்னுடைய மனம் திருந்திய நேர்மையைக் கண்டு பூரிக்கின்றேன். இப்பொழுது வேறு ஒரு குறை என் மனத்தில் உள்ளது. உன்னிடத்தில் சொல்லுவதில் எனக்கு ஒன்றும் தடையில்லை.

தமிழ் மறையை ஆராயும் மன்னவனே! திருக்குறள் முழுமையும் தெளிவுறக்கற்று உணர்ந்தோன் என்னுடைய செம்மையான மாணுக்கன்; சேராதவர்களேயும் சேர்த்துக் கொள்ளக் கூடிய சேரமான் கணைக்கால் இரும்பொறை. அம்மன்னவனைச் சிறையிலிருந்து விடுதலை செய்வாயோ? செய்யாயோ? என்றுர்.

**செங்கணுன் :** (விரைந்து) புலவர் பெருமானே! இப்பொழுதே செய்தேன். இதோ என்னுடைய முத்திரை யிட்ட திருமுகம். ஏதும் எண்ணவேண்டாம் குருவே! அருள் கூர்ந்து ஏற்றிடுக.

[முத்திரையிட்ட ஓலையொன்றை நீட்ட]

**பொய்கையார் :** (திருமுகத்தை ஏற்று) சோழர் பெருந்தகையே! ஏற்றுக்கொண்டேன். எனக்கு விடை தருக. இனி ஒரு நொடிப் பொழுதும் தாழ்ந்திருக்கமாட்டேன். என்னருமை மாணவனை இப்பொழுதே சென்று காண்பேன். சிறை மீட்பேன். அரசே! வருகிறேன்.

**செங்கணுன் :** மாத்தமிழ்ப் புலவரே! மனம் போல் ஆகட்டும்.

[பொய்கையார் போகின்றுர். செங்கணுன் தனக்குள் பாடுகின்றுன்]

செய்கை தூய தேசிகர்
பொய்கை யாரின் பொன்னருள்
நைகை நீங்கி நாயினேன்
உய்கை யென்றல் உண்மையே

(செல்கின்ருன்)

## அருஞ்சொற்பொருள்

எழில்—அழகு. கோவே - அரசே! அண்ணல் - ஆடவரில் சிறந்தவன். சேமநிதி-தகுந்த காலத்தில் உதவுமாறு சேர்த்து வைக்கும் செல்வம். எருவை - பருந்து. குருதி - இரத்தம். முழா - முழவு, மத்தளம். பண் - இசை. நேரார் - பகைவர். ஆணவம் - மனக்கர்வம். பொய்யாமொழி - உண்மைச் சொல். செம்மை – நடுவுநிலைமை. திருமுகம்—கடிதம். கூர்ந்து—மிகுந்து. தேசிகர்—குரு. நைகை—துன்பம். உய்கை—பிழைத்தல்.

## வினக்கள்

1. 'களவழி நாற்பது' என்ற நூலைப் பாடியவரும் பாடப்பட்டவரும் யாவர்?

2. செங்கணுன் புலவரை எங்ஙனம் வரவேற்ருன்?

3. 'களவழி நாற்பது' பாடிய புலவரின் கருத்து யாது?

4. போர்க்களக் காட்சியை வரைக.

5. உலக வாழ்க்கையின் உட்கருத்தாகச் செங்கணுன் கண்டது என்ன?

## பயிற்சி

1. வாக்கியங்களில் பயன்படுத்துக: அருமை பெருமை,

2. பிரித்து எழுதுக: என்னென்று, பொறுத்தருள்க.

3. சேர்த்து எழுதுக: திரு+அருள், வேறு+ஒன்று, நல்+உணவு, இன்னது+என.

4. எதிர்ச்சொற்களை வரைக: வெற்றி, பொய்ப்பொருள்.

# 17. கலைஞர்

[பேராசிரியர்— க. அன்பழகன், எம். ஏ., எம்.எல்.ஏ.]

நமது அருமைத் தாய்மொழியாம் தமிழ், மிகப் பழங் காலமாகிய பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னர்த் தோன்றி, வளர்ந்து, வாழ்ந்து வருகின்ற தொல்மொழியாகும். வள ரும் இயல்புடைய கன்னித் தமிழ், நம்மை வாழவைக்கும் வளங்கொண்ட இனிய மொழியாக இன்றும் விளங்கு கின்றது.

தமிழ் என்றாலே 'இனிமை' என்று பொருள் உணர்த் தினர் நம் முன்னோர். அவ்வினிமை, தமிழ்மொழியினை இயல், இசை, கூத்து என்று முத்தமிழாகப் பாகுபடுத்தி வழங்கியதால் சிறப்பதாயிற்று. முத்தமிழ், பாலும் தேனும் பழமுமாய் இனித்தது.

இயற்றமிழ்-உள்ளத்தில் உருவாகும் எண்ணத்தின் வடிவமாகும். இசைத்தமிழ்—எண்ணத்தைப் பிறரை இசைவிக்கும் வண்ணம், இன்னிசையாக வெளிப்படுத் துவதாகும். கூத்துத்தமிழ்-எண்ணத்தைக் கலைவடி வம் ஆக்கிக் காண்போரின் கருத்துக்கும் கற்பனைக் கும் விருந்தாக்குவது. இவை மூன்றும் இயைந்ததொரு பெருஞ் சிறப்பினைக் கொண்டது நாடகக் கலையாகும்.

பேச்சும் எழுத்தும்—இயற்றமிழ்; பாட்டும் பண் ணும்—இசைத் தமிழ்; நடனமும் நாடகமும்-கூத்துத் தமிழ்; என்று கொள்ளலாம்,

இப்பாகுபாடுகள் தோன்றவும்-சிறக்கவும் காரண மாயினோர், பண்டைத்தமிழ்ப் புலவர்களும் கலைஞர் களுமே யாவர். அவர்தம் அருந்திறத்தால் முகிழ்த்த

செல்வங்கள் இலக்கிய மென்றும், கலை என்றும் போற் றப்படும்.

கலைகள் பலவகை. அவற்றுள்ளும், நுண் கலைகள் (Fine Arts) உள்ளம் கொள்ளை கொள்ளும் திறத்தன. இசை, ஓவியம், சிற்பம், கூத்து, நாடகம்—முதலியவை அனைவரும் அறிந்த நுண் கலைகள்.

இவைகளுள்ளும் நாடகமே-ஏழைப் பொதுமக்க ளின் அறிவுக்கு விருந்தாகும்.

நாடகம் நடிப்பால் சிறப்பது. நடிப்பு–உணர்ச்சியை வெளிப்படுத்துவதாலும், உணர்ச்சி - உரையாடலாலும், உரையாடல் – கருத்தாலும், கருத்து—கதையாலும், மேம்பட்டு நாடகத்திற்கு உயிரளிக்கின்றன. ஆனால், நடிகன் தன் பாத்திரத்தைக் கதை யமைப்பில் தன் இடத்தை உணர்ந்து நடித்தால்தான் " நாடகம் " நல்ல கலை விருந்தாகும். நடிப்புத்திறன் கொண்ட கலைஞன் இன்றேல் நாடகக் கலையும் இல்லை.

தமிழகத்தில் நாட்கம், வேத்தியல்கூத்து என அரசவையிலும், பொதுவியல் கூத்து எனப் பொது மன் றங்களிலும்; பண்டை நாட்களில் நிகழ்ந்து வந்தது. பின்னர்த் தெருக்கூத்தாகி ஊர்தோறும், விடியவிடியநடந் தது. இன்று நாடக அரங்கினில் ஏறி, விஞ்ஞானக் கருவிகளால் ஒளி, ஒலி துணைக்கொண்டு, திரைப்படக் காட்சியாகவும் புதுவடிவம் பெற்றுள்ளது.

முன்னாட்களில், கலைஞர்கள் அவர்தம் அருமை யறிந்து போற்றப்பட்டனர். இசைவல்லாரான பாண ரும் பாடினிகளும், பொருநரும்; ஆடல்வல்லாரான கூத்தரும் கொடியரும் விறலியரும் தமிழ் மன்னர்களால் தண்ணளி செய்யப்பட்டுத் திகழ்ந்தனர். அக்காலத்தில்

கலைஞர்களிடையே நகைச்சுவை யூட்டும் வேழம்பர்களும் இருந்தனர். இக்கலை ஒளி, இடைக்காலத்தே மங்கிற்று எனினும், இன்று மறுமலர்ச்சி எய்தி, மக்கள் மன்றத்தில் நிலையான இடம்பெற்றுவிட்டது என்பது மகிழ்ச்சியளிப்பதாம்.

இக்காலத்தே கலை மேம்பாட்டிற்கு வழிகண்ட கலைஞர்கள் பலராவார். அவருள்ளும் நாடகக் கலைக்கும், நடிப்புக் கலைக்கும் புத்துயிருட்டிய தனிப்பெரும் கலைஞர் கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் ஆவர்.

கலைவாணர் 'என். எஸ், கே.' என்றுலே "அழுத குழந்தையும் வாய்ந்திறந்துசிரிக்கும்'' எனில்,வேறென்ன பெருமை வேண்டும். அவரை அறியாதார் அவரது நடிப்பைச் சுவைக்காதார் தமிழகத்தில் இல்லை. "வீடு தோறும், கலையின் விளக்கம்'' ஏற்படுவதற்கு முன்னறிவிப்பாக, நாடுமுற்றும், ஊர்கள் யாவும் கலைவாணரின் முழக்கம், அவரது சிரிப்பொலி கேட்டனர் மக்கள்.

நடிப்புக் கலையில் ஒரு தனிவகை நகைச்சுவை நடிப்பு. நகைச்சுவையைக் கோமாளியாக, விதூடகனுக, கோணங்கி சேட்டை செய்பவனுக நடிப்பது மூலமே உண்டாக்க முடியும் என்றே கருதிவந்தனர் நடிகர்கள். மற்றும் பழத்தோல் வழுக்கி விழும் பருமனுன பாவை; பூனையைக் கண்டஞ்சும் போர்வீரன் போன்ற நிகழ்ச்சிகளைக் கொண்டு நகைச்சுவை ஊட்டியவர் பலர். மாருகக் கலைவாணர் அவர்களோ, காண்போரை சிந்திக்கத் தூண்டும் கருத்தை விளக்கி, நகைச்சுவை விருந்தளித்தார். சிரிக்கவைத்தே சிந்திக்கவும் வைத்தார். தம் சிந்தனையாலே சிரிப்பைத் தேக்கியும் வைத்தார்.

உலகோர் புகழும் மேல்நாட்டு நகைச்சுவை நடிகர் சார்லி சாப்ளின் என்பாரும். சிரிக்கவைத்தே சிந்திக்க வைக்கும் கலைவாணரின் முறையைக் கையாளவில்லை எனில், அவரது பெருமைக்கு வேறென்ன சான்று வேண்டும் ?

கலைவாணர், ஒரு நகைச்சுவை நடிகர் மட்டுமல்லர்; சிறந்த கலை உள்ளம் படைத்தவர்; சிந்தனைத்திறன் பெற்றவர். உயர்நோக்கம் படைத்தவர்; தாய்மொழிப் பற்று மிக்கவர்; தன்மான உணர்வு நிரம்பியவர்; விடுதலை வீறு கொண்டவர்; நெஞ்சத்தில் இரக்கம் உடையவர்; ஒரே வரியில் உரைப்பதானால் 'நல்லறிவுபடைத்த சிறந்த மனிதர்.'

அவர் நடிப்பு ஒவ்வொன்றிலும் ஒரு வாழ்க்கை உண்மை, படம் பிடித்துக் காட்டப்படும். மிகப் பெரிய கருத்து, மிக மிக எளிதாக விளக்கப்படும், முதியோர் கல்வி—சுவையுடன் பரப்பப்படும். சீர்திருத்தக் கொள்கையும், ஒப்புநிலைக் கோட்பாடும் தெளிவாக விளக்கப் படும். பயனற்ற கொள்கையற்ற கருத்தற்ற நடிப்பை அவரிடம் காணவே முடியாது. நகைச்சுவை, கலைவாணர் நடிப்பினால் உலகிலேயே ஓர் உயர்நிலை எய்திற்று.

கலைவாணர், எல்லாக் கலைகளிலும் ஈடுபாடு கொண்டவர். சுவைக்கும் திறன் பெற்றவர்; கவிதை, பாட்டு, இசை, நடனம். ஓவியம், சிற்பம், இயற்கைக் காட்சி. வில்லுப்பாட்டு, புரவிநாட்டியம், பொம்மலாட்டம், கதகளி, காலட்சேபம் அனைத்திலும்—தன்னை மறந்து இன்புறுவார். திருத்தம் கண்டு புதுமையும் கூட்டுவார்.

புலவர்களிடம் உரையாடுவதிலும், அறிஞரைக் காண்பதிலும், தலைவர்களைப் போற்றுவதிலும் உத்தமர்களை வழிபடுவதிலும்—நாட்டங்கொண்டவர்.

கலைவாணர் தமக்கென ஒரு நூலகமே வைத்திருந்தார். அந்த நூல்களில் தம் கருத்தைச் செலுத்திப் பயில்வதில் அடிக்கடி ஈடுபடுவார். வள்ளுவர் செய் திருக்குறளை, உலகப் பொதுநெறியை மறுவற நன் குணரும் வகை பயின்று, மக்களிடையே பரப்பவும் செய்தார். இவர் பாரதியார், காந்தி அடிகள், திரு. வி. க. கவிமணி முதலான பெரியோர்களின் அறிவுரை வழங்கும் ஏடுகளில் நெஞ்சம் தோய்ந்தவர். "கற்க கசடறக் கற்பவை ; கற்றபின், நிற்க அதற்குத் தக" என்ற வள்ளுவர் வாக்கினை நிறைவேற்றவும் முயன்றார்.

இத்தகு மேன்மைவழி நின்ற கலைவாணர் அவர்கள், பிறந்தபோதே பெருவாழ்வு பெற்றவரல்லர். தமிழகத் தின் தென்பாலுள்ள நாஞ்சில் நாட்டில், ஒழுகினசேரி என்னும் சிற்றூரில், ஏழைக்குடும்பத்தில், இந்த இருப தாம் நூற்றாண்டின் துவக்கத்தில் பிறந்தார். வறுமை அவரை வருத்தியது. தாய்மொழியாம் தமிழில் கல்வி கற்கவும் வாய்ப்பின்றி மலையாளம் கற்கலானார். அந்தப் பள்ளிப் படிப்பும் நான்காம் வகுப்புடன் முற்றுப்பெற்றது.

பெற்றோரின் குடும்பச் சுமையைக் குறைக்க, சிறு வயதிலேயே வேலை செய்து பிழைக்க வேண்டியவ ரானார். உழைப்பதற்கு அவர் வருந்தவில்லை. அவ ருடைய இயல்பான கூர்ந்த நுண்ணறிவால், அவர் மேற்கொண்ட உழைப்பின் மூலமே உலகை உணர லானார். அந்நிலையில், நாடகக்குழு ஒன்றில் சேர்ந்து நடிப்புக்கலையில் ஈடுபடலானார்.

நாடகக்குழுவில் அவரது நடிப்பு—நகைச்சுவையில் தனிச்சிறப்படைவதாயிற்று. மக்கள் மதிப்பு உயர உயர, அவரது நடிப்பு முக்கியத்துவம் பெற்று ஓங்க லாயிற்று.

பின்னாட்களில், அவர் திரைப்படத்தில் நடித்த காலை, நடிப்புமட்டுமன்றி, அவர் நடிக்கும் பகுதியின் கதை, உரையாடல், பாட்டு, நகைத்துணுக்கு, அனைத்தினையும் அவரே சிந்தித்து அமைப்பாராணுர். அந்தப் பகுதியின் இயக்குநராகவும் (Director) அவரே செயலாற்றிப் பெரும் வெற்றி கண்டுள்ளார்.

ஏறத்தாழ, நூறு படங்களுக்கு மேல், தாமும் தம் அருமைத் துணைவியாரான மதுரம் அவர்களுமாகச் சேர்ந்து நடித்துள்ள அவர், நல்லதம்பி, மணமகன் போன்ற சில படங்களைத் தாமே தயாரித்து, மக்கள் பாராட்டையும் பெற்றுள்ளார். அவர் நடித்த படம் எதுவும், பழுதாகிப் போனதில்லை என்ருல் அது தவருகாது.

கலைவாணர், மேடைப்பேச்சில் வல்லவர். அரசியல் மேதைகளும் திகைக்கும் வகையில், தம் கொள்கையை மறுப்புக்கு இடமின்றி நாட்டுவார்.

காலட்சேப முறையைக் கையாண்டு, கருத்துச் செழிப்புக் கண்டவரும் அவர். 'கிந்தனர்' என்னும் தலைப்பில் அவர் நடத்திய காலட்சேபம், கல்வியின் சிறப்பினைப் பாமரருக்கும் விளக்குவதா யிருந்தது.

வில்லுப்பாட்டில் அவர் பாடிக்காட்டிய 'காந்தி மகான் கதையும்' அவரது திறமையைப் புலப்படுத்தும்.

வானெலியில் அவர் நடத்திய நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றிலும் புதுமை விருந்தொன்று அளிக்க அவர் தவறியதில்லை.

ஆம்! அவர் தொட்டதெல்லாம் மணங்கமழும் வண்ணம், கருத்திலே கத்தூரிப் பெட்டகமாக வாழ்ந்தார்.

இளமையில் அவர் பெற்றிருந்த வறுமையால், நாகர்கோவில், ‘டென்னிஸ் கிளப்பில்’—பந்தாடுவார் நிலையத்தில், மாதம் மூன்று ரூபாய் ஊதியத்திற்கு அவர் பந்து பொறுக்கிப் போடும் சிறுவனுகப் பணி யாற்றினுர். அவர் ருஷ்யா சென்று திரும்பியதும் அவ ருக்கு ஒரு வரவேற்பு அளித்ததுடன் அந்தக் ‘கிளப்’ புக்கே அதன் நிரந்தரத் தலைவராக அவர் இருக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டனர். அப்பொழு தும் அவர் தம் பழைய நிலையை மறக்கவில்லை, மறைக்க வும் இல்லை. மாருக அதை எடுத்துச் சொல்லி, ‘பரம் பரையாகப் பணக்காரனுக இருந்தால்தான், ஒருவன் முன்னுக்கு வரமுடியும், அறிவாளியாக முடியும் என்பது தவறு. முயற்சி மெய்வருத்தக் கூலிதரும் என்பது ஒரு பொழுதும் பொய்யாகாது. அதுதான் உலக உண்மை!” என்று அறிவுரையும் கூறினுர். அவரது பெருமையும், அதைவிடப் பெரிய மனமும் இதனுல் தெரிகின்றதன்ரூே!

கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் தனியொரு மனிதராகமட்டும் வாழவில்லை. அவர் ஓர் இனமாகக் கூட்டாக வாழ்ந்து காட்டினுர். காலச்சுழலில் தம் பணி என்றென்றும் மறையாது நிலைபெறச் செய்தார். கலைத் துறையில் ஒரு மாற்றத்தைக் கண்டார். மக்கள் வாழ்வில் மறுமலர்ச்சியை விளைவித்தார்.

நகைச்சுவை நடிகர்கள், மக்களைச் சிரிக்க வைக்க முடியும், பாராட்டைப் பெற முடியும், புகழில் மேம்படவும் முடியும். ஆனுல் கலைவாணர் அவர்கள், மக்களைச் சிந் திக்க வைத்தார். அவர்களின் உள்ளத்தில் இடம்பெற் ருர். உத்தமர் என்ற போற்றுதலையும் அடைந்தார்.

கலைவாணர், மக்களுக்காகவே அல்லும் பகலும் அயராது உழைத்த கலைஞராவர்! ஆம், அவர் மக்கள்

கலேஞர்! வாழ்க கலேவாணர்! வளர்க அவர் வளர்த்த தமிழ்க் கலே!

## அருஞ்சொற்பொருள்

தொல் - பழமை. கன்னி - இளமைத்தன்மை. முத் தமிழ் - மூன்று + தமிழ்; இயல், இசை, நாடகம். இயற் றமிழ் - இயல் + தமிழ். முகிழ்த்த - உண்டான. அரங்கு - சபை. வேத்தியல் - அரசர்க்கு ஆடும் கூத்து. பொதுவியல் - மக்களுக்கு ஆடும் கூத்து. ஒளி – வெளிச்சம். ஒலி - ஓசை. தண்ணளி - கருணே. வேழம்பர் - நகைச்சுவை ஊட்டுப வர். ஒப்பு நிலேக் கோட்பாடு - ஒப்பிட்டுக் காட்டப்படும் கொள்கை. நூலகம் - புத்தகசாலே. மறுவற - குற்றமற. புரவி - குதிரை.

## வினுக்கள்

1. முத்தமிழ் எவற்றிற்கு ஒப்பாகும்?

2. இயல், இசை, நாடகத் தமிழின் சிறப்பினே விளக்குக.

3. அனேவரும் அறிந்த நுண்கலேகள் எவை?

4. நாடகத்திற்கு உயிரளிப்பன எவை?

5. "அழுத குழந்தையும் வாய்திறந்து சிரிக்கும்"— இடங்கூறி விளக்குக.

6. நகைச்சுவையைப் பிறர் அளிப்பதற்கும் கலே வாணர் அளிப்பதற்கும் உள்ள வேறுபாடு என்ன?

7. 'சார்லி சாப்ளின்'—குறிப்பு எழுதுக.

8. கலேவாணரின் அருங்குணங்களேத் தொகுத்து எழுதுக.

9. கலேவாணர் தம்மை மறந்து இன்புறும் கலேகள் யாவை?

10. திரைப்படத்தில் கலேவாணர் கண்ட வெற்றி யாது?

11. கலைவாணர் கருத்திலே கத்தூரிப் பெட்டகமாக விளங்கியது எவ்வாறு?

பயிற்சி

1. பொருள் எழுதுக: முத்தமிழ், வேத்தியல், பொது வியல், ஒளி, ஒலி, தண்ணளி, மறு.

2. பிரித்து எழுதுக: இயற்றமிழ், புத்துயிர், விருந் தளித்தார், நல்லறிவு, நூலகம்.

3. சேர்த்து எழுதுக: வேந்து+இயல், பொது+இயல், முன் + நாள், மகிழ்ச்சி + அளிப்பது, வேறு + என்ன, பயன்+அற்ற, திரு+குறள்.

4. எதிர்ச்சொல் எழுதுக: நகைச்சுவை, தென்பால், பெருமை, பயனற்ற, துவக்கம்.

5. உயர உயர—அடுக்குத்தொடர். இதைப்போன்று இரண்டு மேற்கோள்கள் தருக.

6. வாக்கியத்தில் அமைக்க: ஈடுபாடு, அடிக்கடி, ஏறத் தாழ, ஒவ்வொன்றிலும், அல்லும் பகலும்.

# 18. விவேகானந்தர் விடுத்த கடிதம்

சிக்காகோ,
28—5—1894

அரிய—

நான் நியூயார்க்கிலிருந்து போஸ்டனுக்கும், போஸ்டனிலிருந்து நியூயார்க்குக்குமாகச் சுற்றிக்கொண்டிருந்தபடியால், உங்களுக்கு விரைவில் கடிதங்கள் எழுத முடியாதவனுனேன். எப்பொழுது இந்தியாவுக்குத் திரும்பி வருவேன் என்பது எனக்குத் தெரியாது. பின்புறம் நின்று கட்டளை இட்டுக்கொண்டிருக்கிற இறைவனிடம் எல்லாவற்றையும் ஒப்பித்து விடுதல் மிகவும் நலம். நான் ஒரு பொழுதும் இருந்ததே இல்லை என்று நினைத்து, நீங்கள் வேலை செய்ய முயற்சி செய்யுங்கள். எவர் பொருட்டும் எதன் பொருட்டும் காத்திருக்க வேண்டா. உங்களால் முடிந்தவற்றை நீங்கள் செய்யுங்கள்; ஒருவரிடத்தும் நம்பிக்கை வைக்காதீர்கள்.

## எழுந்திருங்கள் எழுந்திருங்கள்

கல்வியில் தேர்ந்த வாலிபரிடத்தில் வேலை செய்யுங்கள். அவர்களை ஒன்று சேர்த்து ஒழுங்குபடுத்துங்கள். பெருந் துன்பங்களைப் பொறுத்துக் கொண்டே ஒழுங்குபடுத்துங்கள். பெருந் துன்பங்களைப் பொறுத்தால், பெருங்காரியங்கள் கைகூடிவிடும். தன்னலமே கூடாது. பெயரும் பெருமையும் உதவா. உம் கீர்த்தியாயினுஞ் சரி, என் கீர்த்தியாயினுஞ் சரி, எதற்கும் ஆசைப்படல் ஆகாது. நல்லெண்ணத்தைப் பரவச் செய்யுங்கள்; ஏற்பாட்டின்படி வேலை செய்யுங்கள். உருளைக்கு

உங்கள் தோள்களைக் கொடுங்கள்; பெயரின் பொருட்டாவது புகழின் பொருட்டாவது பின் திரும்பிப் பாராதீர்கள். அகங்காரத்தைஅகற்றிவிட்டு வேலை செய்யுங்கள். 'புற்கள் ஒன்று சேர்த்துக் கயிருக்கப்பட்ட பொழுது மதயானையையும் கட்டுப்படுத்தும்,' என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். உங்கள் எல்லாரிடமும் கடவுள் கருணை இருக்கக் கடவது. அவருடைய வன்மை உங்களிடத்தில் இருக்கக்கடவது. அந்தச் சத்தி உங்களிடத்தில் இருக்கிறதாக நான் நம்புகிறேன். 'விழித்துக் கொள்ளுங்கள், குறிக்கோளை அடைகிற வரையில் நில்லாதீர்கள்,' என்று வேதங்கள் கூறுகின்றன. எழுந்திருங்கள்! எழுந்திருங்கள்! நீண்ட இரவு கழிந்தது; பகல் நெருங்குகின்றது; அலை கிளம்பிவிட்டது. அந்த அலையின் வன்மையை எதிர்க்கும் சத்தி எதற்கும் இல்லை; என் மக்களே! சத்தி சத்தி, என் குழந்தைகளே! அன்பு, அன்பு, விசுவாசம்; நம்பிக்கை; பயப்படாதீர். பாவங்களிற் பெரும்பாவம் பயமே ஆகும்.

## நம்புங்கள் ! நம்புங்கள் !

எல்லாரையும் யான் ஆசீர்வதிக்கின்றேன். முயற்சியில் உதவி செய்திருக்கிற கம்பீர புருடருக்கெல்லாம் நான் எனது உள் அன்பையும் நன்றியறிதலையும் செலுத்துகின்றேன். ஆனல், அவர்கள் சிறிது சிறிதாய் விட்டு விடாமல் இருக்கும்படி அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன். எண்ணத்தைப் பரவச் செய்யுங்கள், கர்வம் அடையாதீர்கள். பிடிவாதமாக எந்தக் கொள்கையையும் கையாளாதீர்கள். எதற்கும் எதிரிடையாகப் போகாதீர்கள்; இரசாயனங்களைச் சேகரிப்பது நமது வேலை; 'எப்படி, எப்பொழுது உருவமாக மாறும்?' என்பதை இறைவனே அறிவான். எல்லாவற்றிற்கும் மேலாக,

எனது வெற்றியினுலாவது உங்கள் வெற்றியினுலாவது களிப்படையாதிருப்பீராக. மிகப்பெரிய வேலைகள் நடக்க வேண்டும். இனி அடையப்போகிற வெற்றிக்கு இப்பொழுது கிடைத்திருக்கிற இந்த வெற்றி எவ்வளவு? நம்புங்கள், நம்புங்கள். உத்தரவு சென்று விட்டது; கடவுள் கட்டளை வந்துவிட்டது, இந்தியா முன்னுக்கு வரவேண்டும். பொது மக்களும் எளியவரும் நலம்பட வேண்டும்.

ஞான வெள்ளம் பெருகியிருக்கிறது, அஃது எதிர்ப்பார் இன்றி, எல்லை இன்றி, மண்ணெங்கும் புரண்டு வருகிறது. ஒவ்வொருவரும் முன்னுக்கு வரவேண்டும்; அதன் சத்திகட்கு ஒவ்வொரு நன்மையும் சேர்க்கப்படும்; ஒவ்வொருவரும் அதன் வழியைச் சீர்படுத்த வேண்டும். இறைவனுக்கு மகிமை உண்டாவதாக!

ஊழியம் செய்யுங்கள்

எனக்கு எவ்வித உதவியும் தேவை இல்லை. ஒரு நிதி சேர்க்க முயலுங்கள். சில திரைப்பட விளக்குகள், தேசப்படங்கள், பூகோளம், சில இரசாயனங்கள் முதலியவற்றை விலைக்கு வாங்குங்கள்! நாள் தோறும் மாலை வேளையில் எளியவரையும் தாழ்ந்தவரையும் ஒடுக்கப்பட்டவரையும்ஒரு கூட்டம் சேர்த்து முதலாவது மதச் சொற்பொழிவு செய்யுங்கள்; பின்னர், திரைப்படவிளக்கு முதலியவற்ருல் வான சாத்திரம், பூமி சாத்திரம் முதலியவற்றை அவரவர் தாய்மொழியில் கற்பியுங்கள். உற்சாகம் மிகுந்த சில வாலிபர்களைப் பழக்குங்கள். அவர்களுக்கு உங்களுடைய உற்சாகத்தை ஊட்டி ஒழுங்குபடுத்தப்பட்ட சபையை வரவரப் பெரிதாக்குங்கள். உங்களால் முடிந்த நன்மைகள் எல்லாம் செய்யுங்கள். 'தண்ணீரெல்லாம் வற்றிய பிறகு ஆற்றைக் கடந்து செல்வோம்,' என்று காத்திராதீர்கள். சஞ்சிகைகளையும் பத்திரிகைகளையும்

வெளியிடுதல் ஐயம் இன்றி நன்மையே. ஆனால் என் குழந்தைகளே, உண்மையான வேலை அணுவளவாயினும், அது நாள்தோறும் எழுதுதலினும் பேசுதலினும் மிகவும் மேலானதாகும். ஒரு சபை கூட்டுங்கள். நான் இப்பொழுது சொன்ன பொருள்களை எல்லாம் வாங்குங்கள், ஒரு குடிசையை வாடகைக்கு வாங்குங்கள், வேலை செய்யப் புறப்படுங்கள், செய்தித் தாள்கள் இரண்டாந் தரமே; ஆனால், இதுதான் முதன்மையானது. உங்கள் கைக்குள் பொதுமக்களைக் கொண்டு வரவேண்டும். தொடக்கம் சிறிதாய் இருப்பதைப்பற்றி அஞ்சாதீர்கள். பெருங்காரியங்கள் பின்னால் நிகழப்போகின்றன. தைரியமாய் இருங்கள். நீங்கள் உங்கள் சகோதரரிடத்தில் தலைமை வகிக்க முயலாதீர்கள். ஆனால், அவர்களுக்கு ஊழியஞ் செய்யுங்கள். தலைமை வகிக்கவேண்டும் என்ற அறிவற்ற பைத்தியம் எத்தனையோ கப்பல்களை உயிர் வாழ்க்கைக் கடலில் ஆழ்த்திவிட்டது. முக்கியமாக அதைப்பற்றி விழிப்பாய் இருங்கள். அதாவது, மரணம் நேரினும் தன்னலம் அற்று வேலை செய்யுங்கள். நான் சொல்ல விரும்பியவற்றை எல்லாம் எழுத முடியவில்லை. ஆனால், என் தீர புத்திரர்களே, இறைவன் உங்களுக்கு எல்லா அறிவையும் கொடுப்பன். எடுத்திருக்கிற காரியத்தில் சுறுசுறுப்பாய் இருங்கள். இறைவனுக்கு மகிமை உண்டாவதாக!

உங்கள் அன்புள்ள,
**விவேகானந்தன்.**

அருஞ்சொற்பொருள்

அகங்காரம் - செருக்கு. வன்மை – வலிமை. குறிக்கோள் - நோக்கம். ஞான வெள்ளம் - அறிவு நீர்ப்பெருக்கு. நிதி - பொருள்.

## வினக்கள்

1. இப்பாடத்தில் காணும் இரண்டு பழமொழிகளை வரைக.

2. விவேகானந்தர், இளைஞர்கள் எவ்வாறு பாடுபட வேண்டுமெனக் கருதுகிறார் ?

3. முதியோர் கல்வியைப் பெருக்குவதற்கு விவேகானந்தர் காட்டும் வழி எது ?

4. பொதுமக்களை நல்வழிப்படுத்துவதற்கு ஆசிரியர் கூறும் வழி யாது ?

5. தலைமைப் பதவியைப் பெற முயல்வதால் உண்டாகும் கேடுகள் எவை ?

## பயிற்சி

உன் பள்ளியில் கொண்டாடப்பட்ட விழா ஒன்றினைப் பற்றி நண்பனுக்குத் தெரிவிப்பது போல ஒரு கடிதம் எழுதுக.

# 19. ஒரு சிறு கதை

[திரு பூ. ஆலால சுந்தரஞ் செட்டியார், எம்.ஏ.,]

பல நூற்றுண்டுகட்கு முன்னர் மக்கள் விலங்குகளைக் கொன்று, அவைகளின் பச்சை ஊனினைப் பதம் பண்ணத் தெரியாது புசித்து வந்தனர். தம் ஊன் பெருக்கற்குத் தாம் பிறிதூனுண்ணும் மக்கள் இறைச்சியினை அவித்தல், வறுத்தல் முதலிய இன்னோரன்ன முறைகளை உணர்ந்தாரில்லை. ஊனைச் சமைக்கும் வகையை மாந்தர் எஙவாறு அறிந்து கொண்டனர் என்பதை அடியிற்கண்ட கதையால் விளக்குவாம்.

சீன தேசத்தில் பெகின் என்ற சிற்றூரில் ஆதிரையன் என்பான் ஒரு சிறிய குடிசையில் வசித்து வந்தான். அவன் அநேக நாட்களாக வறுமைவாய்ப்பட்டு வருந்தினன். பன்றிக் குட்டிகளை மேய்த்து வருவதே அவனது தொழிலாகும். ஆதிரையனுக்குப் பத்து வயதுள்ள பகவன் என்ற ஒரு மைந்தன் உண்டு. பகவன் கூரிய அறிவும் சீரிய உணர்ச்சியும் வாய்ந்தவன். ஆனல் குறும்புத்தனத்தில் அவனை ஒப்பாரும் மிக்காருமில்லை என்று கூறுவது புனைந்துரையாகாது. பஞ்ச பூதங்களில் பகவனுக்கு நெருப்பைக் காண்பதில் விருப்பம் மிகுதி. அவன் சில சமயங்களில் குச்சிகளையும் குப்பைகளையும் கொளுத்தி அதனுலுண்டாகும் தீயின் தன்மையினைக் கண்டு இன்புறுவான்.

ஒரு நாள் ஆதிரையன் தன் பன்றிக் குட்டிகளுக்கு உணவு கொண்டு வருவதற்காக வீட்டைத் தன் மகன் பகவன் வசம் ஒப்புவித்து ஒன்பது பன்றிக்குட்டிகளையும் பத்திரமாகப் பார்த்துக் கொள்ளும்படி சொல்லித் தான் காட்டிற்குச் சென்றனன். தந்தை காட்டிற்குச் சென்றதைக் கண்ட மைந்தன் கழிபேர் உவகை கொண்டு சில குச்சிகளையும் வைக்கோலினையும் ஒன்று சேர்த்து அவைகளைக் கொளுத்தி அதனுல் உண்டாகும் தீயின் ஒளியினைக் கண்டு களித்தான். அதுபோழ்து அத்

தீயின் ஒரு சிறு பொறியானது குடிசையிற் புக, குடிசை முழுதும் பற்றி எரிந்தது. குடிசையில் தீப்புகுந்ததைக் கண்ட பகவன் வெளியே வந்து விட்டான். சிறிது நேரத்திற்குள் குடிசை சாம்பராய் விட்டது. இதைக் கண்ட பகவன் மிகவும் வருந்தினன். அவன் குடிசையை இழந்ததற்கு வருந்தவில்லை. ஏனெனில், அவன் இதற்கு முன் தன் குறும்புத்தனத்தால் இரண்டு குடிசைகளைத் தீவாய்ப் படுத்தியுள்ளான். ஆனல் அவன் "அந்தோ! பன்றிக் குட்டிகளைப் பறிகொடுத்தேனே!" என்று கதறினன். தன் தந்தையின் வெகுளியினைக் கணமேனும் காத்தலரிது என்றுணர்ந்த மைந்தன் "அந்தோ, பால் மணமாருத இளம் பன்றிக் குட்டிகளை இழந்தேனே! எந்தை என்னை ஒறுப்பரே; யான் யாது செய்வேன்?" என்று வருந்தினன்.

அதுபோழ்து அவன் அக்குடிசையின் பக்கத்தில் ஒரு நறுமணம் வீசக் கண்டான். அந்த நறுமணம் எக் காரணத்தாலாய தென்றும் எப்பக்கத்தினின்று வீசு கின்றதென்றும் பகவன் உணர்ந்தானில்லை. அவன் அக்குடிசையின் நாற்புறமும் சுற்றிப் பார்த்தான். பார்த்தும் பயனில்லை. தான் பிறந்தது முதல் இது வரையில் பகவன் இவ்வித நறுமணத்தைக் கண்டா னில்லை. அச் சிற்றூருக்கு அது ஒரு புத்தம் புதிய நறுமணமாகத் திகழ்ந்தது.

பிறகு பகவன் பன்றிக் குட்டிகளின் அருகே சென்று அவைகளின் ஆவி அகத்ததோ புறத்ததோ என்பதை உணர வேண்டி அவைகளின் உடலைச் சிறிது தொட் டான். தொட்டவுடன் தீப்பற்றிய குடிசையிலிருந்த பன்றிகளின் உடல் நன்ருக வெந்திருந்தபடியால் அவைகளின் கொழுப்பும் தசையும் பகவன் கையில் ஒட்டிக் கொண்டன. சுட்ட ஊனின் வெப்பத்தைத் தாங்கமாட்டாத பகவன் தன் விரல்களை உடனே வாயில் வைத்துக் கொண்டான். உடனே அவன் சுட்ட ஊனின் சுவையினை உணர்ந்தான். இதுகாறும் அக்குடிசையில் வீசிய நறுமணம் சுட்ட பன்றி யிறைச்சியின்பாற் பட்டது என்பதை அறிந்துகொண்டான். இதுவரையில்

அச்சிற்றூரில் வெந்த ஊனினைக் கண்ட மக்கள் ஒருவரு மில்லை. முதல் முதல் அச்சிற்றூரில் சுட்ட பன்றியின் சுவையை யுணர்ந்த பகவன் கொண்ட மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. அவன் குதித்தான்; ஆடினான். "நாடி னேன், நாடி நான் கண்டு கொண்டேன் சுடுபன்றி இறைச்சியின் மாட்சி!" என்று பாடினான். பிறகு அப் பன்றியின் ஊனை உண்டு களித்தான்.

காட்டிற்குச் சென்ற ஆதிரையன் வீட்டிற்குத் திரும்பி வந்து குடிசை சாம்பராகிய நிலையினையும், பன்றியின் ஊனுண்ணும் கழிபேர் இரையானாகிய மைந் தனையும் கண்டு வெகுண்டு, அவனைத் தடியால் நையப் புடைத்தனன். அவன் அடி சுட்ட பன்றி ஊனில் திளைத்திருக்கும் பகவனுக்கு ஈ மொய்த்தது போன் றிருந்தது. அவன் தன் தந்தை வந்ததையும் கண்டா னில்லை.

**ஆதிரையன்:** அடே, விலங்கே! அங்கே என்ன செய்கின்றாய்? இதற்கு முன் இரண்டு குடிசைகளை அழித்தது போதாதென்று கருதியோ இக் குடிசை யினையும் தீ வாய்ப் படுத்தினை?

**பகவன்:**—என் அருமைத் தந்தையே! ஆ ஆ! என்ன அருமை! என்ன அருமை! இப் பன்றிகளின் அமிழ்தினுமினிய சுட்ட இறைச்சியினை யான் என்ன வென்று கூறுவேன்! தயவு செய்து தாங்களும் இச்சுட்ட ஊனினைச் சாப்பிடுங்கள்.

ஆதிரையனுக்கு அடங்காக் கோபம் பொங்கி வந் தது. அவன் மறுபடியும் தன் மைந்தனின் அரக்கத் தன்மைக்கு வருந்தி, அவனை மீண்டும் வைதான். தான் பெற்ற இன்பம் தன் தந்தையும் பெறுதல்வேண்டு மென்ற பேரவாக் கொண்ட மைந்தன் மிக்க சூடாக உள்ள அப்பன்றி ஊனினை விரைவுடன் தன் தந்தை யின் கையில் வைத்தான். ஆதிரையன், உடனே திடுக் கிட்டு அவ்வூனைக் கொண்ட விரலின் சூட்டைத் தாங்க மாட்டாது யாது செய்வதென்று தெரியாது வருந்தி னன். பிறகு அவனுக்கு ஒரு யுக்தி பிறந்தது. அவன்

விரல்களைக் குளிர்ச்சி செய்யும் வண்ணம் வாயில் வைத்துக் கொண்டான். இதுகாறும் பன்றியின் வெந்த ஊனின் தன்மையைக் கனவிலும் கண்டும் கேட்டுமறியாத ஆதிரையன் கொண்ட உவகைக்கு அளவேயில்லை. அவன் தன்னை மறந்தான். தன் உடலையும் மறந்தான். சுருங்கக் கூறுமிடத்து இவ்வுலகத்தையும் மறந்தான். பிறகு மிகுந்த மகிழ்ச்சியுடன் அவனும் அவன் மைந்தனும் பன்றியின் சுட்ட ஊனினைச் சுவைபட உண்டு களித்தனர்.

அக்காலத்தில் அச்சிற்றூரிலுள்ள மக்கள் அனைவரும் பச்சை ஊனினைப் புசித்து வந்தனர். அந்நிலையிலுள்ள மாந்தர் வெந்த ஊனின் மணத்தையும் தன்மையையும் உணரார். ஆகவே ஆதிரையனும் அவன் மகனும் பன்றியைச் சுடும் வகையை அச்சிற்றூரிலுள்ள மற்ற மக்களும் உணர்த்திஞரில்லை. தீப் பற்றிய வீட்டினுல்தான் பன்றி இறைச்சியைச் சுட்டுத் தின்னலாம் என்று கண்ட தந்தையும் மைந்தனும் அடிக்கடி தங்கள் குடிசையில் பன்றிக் குட்டிகளை உள்ளே அடைத்துக் குடிசையைக் கொளுத்திவிட்டு வெளியே வந்து குடிசை முற்றும் எரிந்த பின் உள்ளே சென்று பன்றிகளின் வெந்த ஊனினைத் தின்று மகிழ்ந்து வந்தனர். இவ்வாருக அவர்கள் தாங்கள் குடியிருந்த குடிசையில் பன்றியை உள்ளே விட்டு அக்குடிசையினைச் சில முறை பகலிலும் பலமுறை இரவிலும் தீவாய்ப்படுத்தி அதனுல் உண்டான பயனைப் பெற்றனர். வீடு பற்றி எரிந்தால் தான் பன்றியின் ஊன் பதமாகும் என்றதொரு புதிய முடிவை அவர்கள் கண்டு பிடித்தனர்.

இவர்கள் குடிசை இவ்வாறு பல முறையும் தீவாய்ப்படுவதைக் கண்ட மற்ற மக்கள் ஆதிரையனும் அவன் மகனும் செய்து வந்த காரியத்தை ஒரு நாள் கண்டு பிடித்து விட்டனர். உடனே அவர்கள் ஆதிரையன் செய்யும் காரியம் அடாது என்று கூறி அவனையும் அவன் மகனையும் நீதிமன்றத்தில் கொண்டுபோய்ச் சேர்த்தனர்.

அன்று ஊரிலுள்ள மக்கள் அனைவரும் வேடிக்கை பார்ப்பதற்காக நீதிமன்றத்தில் வந்து நிறைந்தனர். குறித்த நேரத்தில் நீதிபதியும் தம் இடத்தில் வந்து அமர்ந்தார். நீதிபதி தாம் தீர்ப்புச் சொல்லு முன்னர் ஆதிரையன் குற்றவாளியோ அல்லனோ என்பதைப் பற்றி அங்குள்ள நடுவுநிலையாளரின் (ஜூரிகளின்) கருத்தினைக் கேட்டார். அங்குள்ள நடுவுநிலையாளருள் ஒருவர் அச்சுட்ட பன்றியின் ஊனினைப் பார்த்து அதிலுள்ள குற்றத்தைக் கண்ட பின்னரே தீர்ப்புச் சொல்லுவது சாலச் சிறந்தது என்றார். அவ்வாறே நடுவுநிலையாளர் அனைவரும் பன்றியின் சுட்ட ஊனினைத் தொட அச் சூட்டினைத் தாங்கமாட்டாது அவர்களும் தங்கள் விரலினைக் குளிர்ச்சி செய்யும் வண்ணம் வாயில் வைத்துக் கொண்டனர். அவர்களும் சுட்ட இறைச்சியின் மாட்சியை உணர்ந்தனர். அதனால் உடனே அவர்கள் ஆதிரையன் குற்றமற்றவன் என்று நீதிபதியிடம் கூற அவரும் அவ்வாறே தீர்ப்புக் கூறினர்.

நடுவுநிலையாளர் அனைவரும் ஆதிரையன் குற்றமற்றவன் என்று ஒருமனப்பட்டுச் சொல்வதற்கு ஏதாவது காரணம் இருக்கவேண்டுமென்று நீதிபதி யூகித்து அறிந்து கொண்டார். பிறகு அவர் ஒரு தனியிடத்திற் சென்று இந்தச் சுட்ட இறைச்சியினைத் தாமும் தொட அச் சூட்டினைப் பொறுக்கமாட்டாது தாமும் தம் விரல்களைக் குளிர்ச்சி செய்யும் வண்ணம் வாயில் வைத்துக் கொண்டார். உடனே அவரும் சுட்ட ஊனின் உண்மையையும் தன்மையையும் அறிந்து வீட்டை எரித்தால் தான் பன்றியின் ஊனைச் சுட்டுத் தின்னலாம் என்ற முடிவை அறிந்து கொண்டார். மறுநாள் நீதிபதி வீட்டிலும் தீப்பற்றி எரிந்தது. அவரும் தம் வீட்டில் பன்றியை உள்ளே வைத்து வீட்டைக் கொளுத்தி அதனாலுண்டாகிய சுட்ட பன்றி இறைச்சியை உண்டு உவந்தனர். வீட்டைச் சுட்டால்தான் பன்றியின் வெந்த ஊனினைத் தின்னலாம் என்பதை அச்சிற்றூரிலுள்ள மக்கள் அனைவரும் அறிந்து கொண்டனர். அன்றுமுதற் கொண்டு அவ்வூரில் ஒவ்வொரு வீடும் தீப்பற்றி

எரிந்தது. விறகின் விலையும் பன்றிக் குட்டிக
விலையும் உயர்ந்து விட்டன. ஒவ்வொரு நாளும்
ஐம்பது வீடுகள் தீ வாய்ப்பட்டன.

பிறகு கொஞ்ச நாட்கள் சென்றவுடன் வேற்
லுள்ள ஒருவர் அச்சிற்றூருக்கு வந்து சேர்ந்தார். அ
களின் அறியாமையைக் கண்ட அவர், அவ்வூரி
மக்களுக்குப் பன்றியின் இறைச்சியையும் மற்ற வி
களின் இறைச்சியினையும் சுடும் விதத்தினை எடு
விளக்கினார். பன்றி இறைச்சியினைப் பதம் செய்வத
ஒரு வீட்டை முழுதும் எரிக்க வேண்டிய அவசியமி
யென்றும், அடுப்பில் வைத்து ஊனைச் சுடலாமெ
கூறி, அம்மக்களுக்கு அறிவுறுத்தினர். பின்னர்
ரிகம் முற்றியவுடன் எல்லா மக்களும் பன்றி இறை
யினையும் மற்ற விலங்குகளின் இறைச்சியினையும்
முறையில் வேக வைத்தல், வறுத்தல், சமைத்தல், எ
பன போன்றவற்றை உணர்ந்து கொண்டனர்.

பன்றிக் குட்டிகளின் அழகே அழகு! அவைகளுக்
குப் பொய் சொல்லத் தெரியாது. புறங்கூறத் தெரியாது
அவைகள் யானைக் குட்டிகள் போல் நடக்கும் நடை
யினை வியவாதார் உளரோ! இக்கட்டுரை (Charl
Lamb) சார்லஸ் லாம் என்ற ஆங்கில ஆசிரியர் ஆங்
லத்தில் எழுதிப் போந்த (A dissertation upon roast pi
"சுட்ட பன்றி" என்ற கட்டுரையினைத் தழுவியதாகு

## வினாக்கள்

1. பகவன் கதறி அழக் காரணம் என்ன ?

2. அச்சிற்றூருக்கு அது ஒரு புத்தம் புதிய நறுமண மாகத் திகழ்ந்தது—இடங்கூறி விளக்குக.

3. நீதிபதி வீட்டில் தீப்பற்றி எரியக் காரணம் என்ன?

4. மனிதன் இறைச்சியைச் சமைத்துண்ணக் கற்றுக் கொண்ட வரலாற்றைச் சுருக்கி எழுதுக.

# TAMIL ILAKKIYA KOVAI

FOR STANDARD VIII

BY

T. MURUGESAN

AND

T. SINGARAVELU

THENNATTU PATHIPPAKAM

16, BROADWAY MADRAS-1

 [ Price Rs. 2-00.